


நல்ல ஸ்டோரி வேல்யூ இருந்தாலே, ஸ்டார் வேல்யூ தானாய் வந்துவிடும் என்பதற்குச் சமீப உதாரணமாய் வந்திருக்கிறது இந்தக் குறைந்த பட்ஜெட் படம்.

ஓய்வுபெற்ற மாவட்ட ஆட்சியர் நம்பியாருக்கு இரண்டு துறுதுறு பேரன்கள். ஒருவர் படிக்காத மனோஜ். இன்னொருவர் வெளிநாட்டில் படித்துத் திரும்பும் குணால். வீட்டில் உள்ள பெரிசுகளே இருவருக்குமிடையில், அடிக்கடி ஈகோவைக் கொம்பு சீவி விடுகிறார்கள். கொல்கத்தாவிலிருந்து இவர்களின் உறவுக்காரப் பெண் அனிதா தேவதை மாதிரி வந்து சேர, இருவரில் யார் அந்தப் பெண்ணின் மனத்தில் இடம் பிடிப்பதென்று கைகலக்காமல் முட்டிக் கொள்ள, சுவாரஸ்யமாய் நகர்கிறது படம்.

திரைக்கதையும், காட்சிகளும் இயக்குனர் விக்கிரமனின் பாணியை நினைவூட்டுகின்றன. (குரு எவ்வழி, சிஷ்யன் ரவிஷங்கர் அவ்வழி!)

தனக்கொரு காதலி இருந்ததாக ரீல் விட்டு, அனிதாவின் இரக்கத்தைச் சம்பாதித்துக் கொண்டாலும், அதே பொய் தனக்கெதிராகத் திரும்பியதும் உடைந்து போகும் மனோஜ், மிகையில்லாத நடிப்பில் வசீகரிக்கிறார். அனிதாவின் மனத்தில் இடம் பிடிக்க மனோஜ் செய்யும் எல்லா முயற்சிகளையும் முறியடிக்கும் குணாலின் நடிப்பில் முன்னேற்றம் தெரிகிறது.

புதுமுகம் அனிதாவின் நடிப்பு, சிரிப்பு, நடனம் மூன்றுக்கும் பாஸ் மார்க்.

படத்துக்குக் கலகலப்பூட்டும் பெரிய பணியை, தனியொரு மனிதராகத் திறம்படச் செய்திருக்கிறார் மயில்சாமி. அடிக்கடி டி. ராஜேந்தராக மாறி காதலுக்கு அவர்தரும் விளக்கங்கள் அபாரம். அதைவிட அசத்தல் மனோஜுக்கு கலெக்டர் வேலை கேட்டு கலெக்டரிடமே வா(ய்)தாடுவது

மெட்டுக்களில் சுகமாகத் தாலாட்டும் சிற்பி, பின்னணி இசையில் பின்தங்கி விட்டது பொறுப்பின்மையா, சரக்கின்மையா?

சிறுகதைத்தனத்தோடு படத்தின் முடிவை யதார்த்தமாய் அமைத்திருக்கும் இயக்குநர் ரவிஷங்கருக்கு வசந்தம் நிச்சயம் வரும்.

— விஷ்ணுவல்தாசன்

• ஆவரெஜ்




# வட்ட மேஜை

## பழைய பாணியே தொடரட்டும்!

✉ வாசகரின் கருத்துக்கு மதிப்பளித்து வாசகர்களின் எண்ணங்களைச் சுறுசுறுப்பாக வெளியிட்ட பாணி நன்று.

கோவை – 30, எஸ். ராஜேஸ்வரி சுப்ரமணியன்

✉ ஆண்டிபட்டியில் ஆரம்பித்த அசௌகரியம்தான் தமிழ்நாடு முழுக்க பரவியிருக்கிறது என நெத்தியடியாய் பதில் சொல்லியிருப்பது முற்றிலும் உண்மை.

மேலகிருஷ்ணன்புதூர், ஆர்.கே. லிங்கேசன்

✉ எழுத்தாளர் ஜெயரதனின் கட்டுரையே அவருக்கு அஞ்சலியானது தனிச் சிறப்பு.

திருச்சி _ 14, இரா. திலிப்

✉ "முதல் பக்கத்திலேயே இன்ப அதிர்ச்சி. எழுத்து சித்தர் பாலகுமாரனின் தொடரா? மே 26 எப்போது வரும் மனம் ஏங்குதே!

ஒட்டன்சத்திரம், செ.ரா.ரவி.

✉ பாண்டிச்சேரி பயணத்தில் ஜோன் ஆஃப் ஆர்க் முதல் வள்ளுவர் சிலை வரை கல்கியின் கண்கள் தந்த காட்சிப் பயணங்கள் யாவும் பயனுடையவை.

பொன்னேரி - 601 204, கவி. பிரம்மன்

✉ பாண்டிச்சேரியை ஆதி முதல் அந்தம் வரை அலசி விட்டு எங்கே அருமை எழுத்தாளர் பிரபஞ்சனை மறந்து விட்டீர்களோ என நினைத்தேன். கடைசி பக்கத்தில் பொய்யாக்கி விட்டீர்கள்.

சேலம், கு. பிரசாத்

✉ மகான் அரவிந்தரையும், ஸ்ரீ அன்னையையும் நேரில் தரிசித்த மன நிறைவைத் தந்தது.

ஆதமங்கலம்புதூர், கே. சண்முகம்

✉ பிரணாவின் 'மழை நிகழ்ந்த போது' கவிதை கோடை மழைபோலவே சிலிர்க்க வைத்தது.

தஞ்சாவூர் – 9, ராகவ் மகேஷ்

✉ 'கன்னுக்குட்டி பிரியம்' வித்தியாசமான கோணத்தில் அமைந்த சிறுகதை.

மதுரை – 625 001, பாலு

✉ 'காவிரி மணல் கொள்ளை' படித்தேன். எவர் கெட்டாலென்ன, எது அழிந்தாலென்ன? தான் சம்பாதித்து சௌகரியமாக வாழவேண்டுமென்று நினைப்பவர்க்கு அரசியலும் துணை நிற்பது தான் வேதனை.

அரையணிநல்லூர், பாரதிகண்ணம்மா



## பாண்டியின் மீது அவ்வளவு பாசமா!

கல்கி (5.5.2002) இதழில் 'தமிழின் ஆதி மூலஸ்தானம்' என்ற கட்டுரையில் என் ஆராய்ச்சி முடிவைப் பற்றிய ஒரு தவறான செய்தி வெளியாகியுள்ளது. அதில் ''தமிழ் முனிவர் அகத்தியருக்குச் சொந்த ஊர் பாண்டிச்சேரி'' என்றும் ''பொதிகையே பாண்டிதான் என்றொரு ஆராய்ச்சி முடிவை முன் வைக்கிறார் வரலாற்றாசிரியர் ஐராவதம் மகாதேவன்'' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளவை ஆதாரமற்ற செய்திகளாகும்.

1970ஆம் ஆண்டில் பரிதிமாற் கலைஞர் நூற்றாண்டு விழா மலரில் 'The Ancient Name of Arikamedu' என்ற தலைப்பில் வெளியான என்னுடைய ஆங்கிலக் கட்டுரையைத் தான் இச் செய்தி குறிப்பிடுகிறது என்று நினைக்கிறேன். அக்கட்டுரையில் நான் கூறியிருப்பது வருமாறு:

✉ ஜோக்ஸ் அனைத்துமே கன ஜோர் சார்.
விழுப்புரம், வெ.ஆனந்தி வெங்கடேசன்

✉ 'வட்டமேஜை' பகுதியில் 28.4.02



## பூக்களில் புரண்டது போல்...

✉ 'ஆகாயத்தில் மூட்டிக் கொண்டேன்' அருமையான மினி தொடர். மது மனிதனின் துயரத்திற்கு நிரந்தர தீர்வாகிவிடாது. அன்பு ஒன்றே துயரத்தைப் போக்கும் அருமருந்து என்ற கருத்தை மனத்தில் பதிய வைத்தது.
தஞ்சாவூர், வெங்கட் முருகானந்தம்.

✉ ஆகாயத்தில் மூட்டிக் கொள்ளவில்லை! ஆகாயத்து நட்சத்திரப் பூக்களை வருடியதுபோல், அதற்குள் புரண்டு எழுந்தது போலிருந்தது. எஸ். ஷங்கர நாராயணனின் எழுத்து எப்போதும் போதை தரக் கூடியது.
சேர்வகாரன்வலசு, எஸ்.சி.ஈஸ்வரன்.

✉ வண்ணை சிங்கராஜ் போன்ற சாதாரணனின் சோகத்தையும், அதற்கு அவன் தேடிய வடிகாலையும் அருமையாகப் படம் பிடித்துக் காட்டி விட்டார்.
திருநெல்வேலி, வி. திலகம்

கல்கியின் விமர்சனம் வெளியானது கண்டு மிகவும் வியந்தேன்! வாசகர்கள் என்றுமே சுறுசுறுப்பாகத்தான் இருக்கிறோம். ஆனால் 'கல்கி' எங்கள் ஊருக்கு சனி அன்றுதான் வருகிறது. எப்படி உடனே எழுத முடியும்? பழைய பாணியே தொடரட்டும்.
கொடுமுடி, ந. சேதுராமன்

✉ புதுவை மண்ணுக்கே புகழ் சேர்க்கும் மணக்குள விநாயகரைப் பற்றி சிறு குறிப்போ படமோ இடம் பெறாதது குறையே!
பாண்டிச்சேரி, கல்வே. சு. சதாசிவம்

✉ கோடையின் உஷ்ணம் கொதித்துக் கொண்டிருக்கும் வேளையில் பிரெஞ்சு பாராளுமன்றத்தில் இடம் பெற்ற, புதுவையிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதி இந்தியாவில் வசிக்கும் பிரெஞ்சு குடியுரிமை பெற்ற மக்களின் நலனுக்காகப் பாடுபடுகிறார் என எழுதி, தேர்ந்தெடுக்கப்பட்டபின் தொகுதிப் பக்கமே தலைவைத்துப் படுக்காத நம் அரசியல்வாதிகளை நினைவூட்டி இன்னும் கொதிக்க வைத்திருக்கிறீரே?
சென்னை – 78, கே.எஸ். நாராயணன்

✉ பாண்டிச்சேரி சிறப்பிதழ் படித்து மகிழ்ந்தேன். சின்னச் சின்னதாய் நிறைய தகவல்கள். காந்தி வீதியில் ஒரு சர்ச், வேதபுரீஸ்வரர் கோயில், வரதராஜப் பெருமாள் கோவில் புதுவையில் மிகப் பழமையானவை. இதே போல, ஓம்கார சுவாமிகள் மடம், அக்கா சுவாமிகள் மடம் தங்கள் பார்வையிலிருந்து தப்பிவிட்டன.
பாண்டிச்சேரி, வி. பாலு.

"பழந் தமிழ் இலக்கியங்களில் வேளிருடனும் கோசருடனும் தொடர்புள்ள பொதிகை அல்லது பொதியில் என்ற இடங்கள் குறிப்பிடப்படுவதை நாம் அறிவோம். பொதிகை என்பது ஆதி காலத்தில் திறந்த வெளியில் (பொது இடத்தில்) ஒரு மரத்தின் அடியிலோ அல்லது ஒரு அம்பலத்திலோ கூடும் அவையாக இருந்திருக்கலாம்! ஒருக்கால் வீரை (பாண்டிக்கருகிலுள்ள வீராம்பட்டினம்) பொதுவர் என்ற இனத்தாருடன் கொண்டிருந்த தொடர்பு காரணமாக பொதிகை என்று அழைக்கப்பட்டிருக்கக் கூடும். அதிலிருந்து கிரேக்கர்களும் ரோமானியர்களும் குறிப்பிடும் புதுகெ என்ற பெயரும் இக்காலத்துப் புதுவை (புதுச்சேரி) என்ற பெயரும் தோன்றியிருக்கலாம்."

இக்கட்டுரையில் நான் பொதிகை மலையைப் பற்றியோ அல்லது அகத்திய முனிவரைப் பற்றியோ குறிப்பிடவேயில்லை. பாண்டியின் மீது அளவு கடந்த பாசத்தால் இச்செய்தியைத் தொகுத்தவர் திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து பொதிய மலையைப் பெயர்த்து எடுத்து பாண்டிக்குக் கொண்டு வந்துவிட்டார்!

- ஐராவதம் மகாதேவன்
சென்னை - 41



● மே 14, 2001 ஆச்சரியப்படத்தக்க விதத்தில் அ.இ.அ.தி.மு.கக்கு தனி மெஜாரிட்டி - 133 இடங்கள் ● முதல்வராக ஜெ பொறுப்பு ● அனைத்துப் பகுதிகளுக்கும் குடிநீர் - முதல்வர் அறிவிப்பு ● கோப்புகள் 90 நாட்களுக்கு மேல் கால தாமதம் ஆகாது.

● விவசாயக் கடன் வட்டி 310 கோடி ரூபாய் தள்ளுபடி ● ஊட்டி தேயிலை, அரசே கொள்முதல் ● ஜெயுடன் சேர்ந்து பெண் எம்.எல்.ஏக் கள் 20 பேர் ● முதல் கோப்பு, செயலாளர் நியமனம் ● புதிய போலீஸ் கமிஷனர் முத்துக்கருப்பன் ● தேர்தல் வன்முறை - பரிதி கைது ● செயலாளராக கரியாலி ● மொத்த அமைச்சர்கள் 24 ● 'ஜெ.வுக்கு பதவிப் பிரமாணம் செய்தது தவறு' சுப்ரீம் கோர்ட்டில் கேஸ் ● ''சட்டசபையில் யாரும் அச்சப்பட வேண்டாம்'' - ஜெ.

● தலித் மாணவிகளுக்கு இலவச சைக்கிள் ● செயல்படாத உழவர் சந்தை மூடப்படும் ● சர்க்காரியா கமிஷன் விசாரணை அடிப்படையில் நடவடிக்கை ● ஆற்காடு வீராசாமி சகோதரர் கைது ● ரங்கநாதன் கைது ● சட்டசபையில் தி.மு.க முதல் வெளி நடப்பு, மே. 30 ● இது சாத்தூர் அல்ல;

ஜெயலலிதா முதல்வர் பொறுப்பு வகிப்பதில் ப்ரேக் இருந்தாலும் அ.இ.அ.தி.மு.க ஆட்சிக்கு வந்து ஓராண்டு ஆகிவிட்டது. 365 நாட்களில் நிகழ்ந்த 222 முக்கிய சம்பவங்களின் தொகுப்பு...





சட்டசபை: கே.கே.எஸ்.எஸ்.ஆருக்கு ஜெ நினைவூட்டல் ● வீரப்பனைப் பிடிக்க தேவாரம் நியமனம் ● மாவட்டங்கள், பேருந்து கழகங்களுக்குத் தலைவர்கள் பெயர் கிடையாது ● "கிருஷ்ணா நீர்: ஆந்திர முதல்வரும் இணைந்து மோசடி" - ஜெ ● ஒரே ஆணையில் 38 ஐ.ஏ.எஸ், 22 ஐ.பி.எஸ் அதிகாரிகள் மாற்றம் ● ஜெ. நியமனத்துக்கு இடைக்கால தடை இல்லை ● ஜெ-பிரதமர் சந்திப்பு.

● அண்ணா சமாதி - உதயசூரியன் முகப்பு இடிப்பு ● மூன்று அமைச்சர்கள் திடீர் நீக்கம்; இரண்டு பேர் சேர்ப்பு ● திமுக ஆட்சியில் புழுத்த அரிசி கொள் முதல் குற்றச்சாட்டு ● முன்னாள் வளர்ப்பு மகன் சுதாகரன் கைது ● 33 அதிகாரிகள் கட்டாயக் காத்திருப்பு ● புதிய டி.ஜி.பி ஏ. ரவீந்திரநாத் ● ஆலங்குடி வெங்கடாச்சலம் நீக்கம் ● வளர்மதி ஜெபராஜ் நுழைவு ● புழுத்த அரிசி விவகாரம் - பொன்முடி கைது ● சன் தொலைக்காட்சி நிருபர் சுரேஷ் கைது ● குருவாயூர் கோயிலுக்கு யானை - ஜெ கொடுத்தார் ● யானை பெயர் கண்ணன் ● **நள்ளிரவில் அராஜகமான முறையில் கருணாநிதி கைது** ● மாறன், பாலு கைது ● மேம்பால ஊழல் விசாரணை ● பெர்னான்டஸ் வருகை ● தில்லி அதிகாரிகள் விசாரணை ● கலைஞர் - ஸ்டாலின் மீது ஆறு பிரிவுகளில் வழக்கு ● மத்திய சிறை முன் கலைஞர் சத்யாகிரகம்

● கவர்னர் பாத்திமா பீவி நீக்கம் ● தமிழக அரசுக்கு மத்திய அரசு எச்சரிக்கை ● 356ன் கீழ் ஆட்சி கவிழும் ஆபத்து ● காப்பாற்றுகிறது காங்கிரஸ் ● சன் தொலைக்காட்சியை முடக்க போலீஸ் சதி ● மாறன் பற்றி போலீஸ் வீடியோ ● போலீஸ் வீடியோ கிராபிக்ஸ் - நிபுணர் தகவல் ● 'போலீஸ் வீடியோ போடாதே' - மக்கள் எதிர்ப்பு ● மேம்பால வழக்கு - நீதிபதி அசோக்குமார் கிடுக்



இப்பிடி விசாரணை ● கலைஞருக்கு ஜாமீன் ● மாறன் டி.ஆர்.பாலு விடுதலை ● இனி அ.தி.மு.க.வுடன் உறவு இல்லை - டாக்டர் ராமதாஸ் ● கலைஞர் கைது - நீதிபதி ராமன் விசாரணை ● தி.மு.க விசாரணையில் பங்கேற்காது ● "எங்களை மத்திய அரசு எச்சரிக்க முடியாது" - ஜெ ● பொய் வழக்கு - அண்ணாநகர் ரமேஷ் குடும்பம் தற்கொலை ● மத்தியில் காங்கிரஸ் ஆட்சி பகல் கனவு - செங்கோட்டையன் ● அ.இ.அ.தி.மு.க சார்பாக ராஜ்ய சபாவுக்கு நான்கு பேர் ● அர்ச்சகர்களுக்குப் புத்தொளி வகுப்பு ● ஆவணக்காப்பகம் திறப்பு - ஜெ முதல் பொது நிகழ்ச்சி ● ராபின் மெயின் வழக்கு - காளிமுத்து முடியாது - ஜெ ● தீவிரவாதம் - பிரிவினை வாதம் ஒழிப்பேன் - ஜெ ● ஏர்வாடி மனநல காப்பகம் தீ விபத்து 27 பேர் மரணம் ● தமிழக திட்ட ஒதுக்கீடு 2001-2002; 6040 கோடி ● மத்திய அரசு மீது ஜெ கோபம் ● ஜெ தில்லி விஜயம் ரத்து ● நீதிபதி அசோக்குமார் கருத்துக்கள் - உயர்நீதி மன்றம் நீக்கம் ● தி.மு.க பேரணி ● பேரணியில் போலீஸ் துப்பாக்கிச் சூடு - ஐந்து பேர் மரணம் ● பத்திரிகையாளர் மீது தாக்குதல் ● பத்திரிகையாளர் உண்ணாவிரதம் ● பேரணி அதிர்ச்சி - எம்.எல்.ஏ வை. பெருமாள் மரணம் ● தி.மு.க கூலிப்படை கலவரம் - ஜெ. ● காட்பாடி வெடிமருந்து ஆலை விபத்து - பலி 22 ● டி.ஜி.பி ராஜகோபால் மத்திய அரசு பணிக்கு விடுவிப்பு ● இடைக்கால பட்ஜெட் - 135 கோடிக்கு வரிகள் ● கிருஷ்ணகிரி - புதிய மாவட்டம் ● பெண் குழந்தைகளுக்கு - அரசு ரூபாய் 20000 டெபாஸிட் ● கோர்ட் வாசலில் கைதிகளை மீட்ட கும்பல் ● பரிதி சட்டசபையிலிருந்து இடை நீக்கம் ● விநாயகர் ஊர்வலத்திற்குத் தடை ● ராமகோபாலன் அடக்கி வாசிப்பு ● தலைமை நீதிபதி ஜெயின் மாற்றம் ● ஆசிரியர் பணி வயது வரம்பு நீக்கம் ● அ.தி.மு.க தயார் என்றால் தி.மு.கவை தே.ஜ கூட்டணியை விட்டு அனுப்பி விடுவார்கள் ● மூப்பனார் மரணம் ● டான்ஸி வழக்கு - உயர்நீதிமன்றம் விசாரிக்க உச்ச நீதிமன்றம் தடை ● 'ரமேஷ் மரணம் தற்கொலை அல்ல' - ஜெ. ● தலைமை நீதிபதி சுபாஷன் ரெட்டி ● விஷச் சாராயம் - அம்பத்தூரில் 13 பேர் பலி ● காவிரி. பிரதமரைச் சந்திக்க சர்வகட்சி ● தொடர்ந்து மத்திய அரசு மீது ஜெ கோபம். சர்வகட்சியுடன் தில்லி போகவில்லை ● மினி பஸ் - 4 கோடி ரூபாய் நஷ்டம் ● மாநில திட்டக் குழு எம்.எஸ். சுவாமிநாதன் நியமனம் ● தேர்தல்... 



விடுவிப்பு ● ஜெ. முதல்வர் பதவி வழக்கு - தி.மு.க மனுதாரர் ● முத்துக்கருப்பன், ஜார்ஜ் கிறிஸ்டோபர், நெல்சன் ஆகிய போலீஸ் அதிகாரிகள் மீது மக்களவையில் உரிமைப் பிரச்னை ● ஜெ. முதல்வர் நியமன வழக்கு - தி.மு.க மனு நிராகரிப்பு ● கருணாநிதிக்கு கறுப்பு பூனை பாதுகாப்பு ● சிவாஜி மரணம் ● ரங்கநாதன் ஜாமீனில் விடுதலை ● பா.ம.க மீண்டும் தே.ஜ. கூட்டணியில் ● மூன்று ஐ.பி.எஸ் அதிகாரிகள் தில்லிக்கு மாற்றம் ● மாற்றம் ஏன்? - ஜெ கேள்வி ● மாற்ற

ரெட்டி ● விஷச் சாராயம் - அம்பத்தூரில் 13 பேர் பலி ● காவிரி. பிரதமரைச் சந்திக்க சர்வகட்சி ● தொடர்ந்து மத்திய அரசு மீது ஜெ கோபம். சர்வகட்சியுடன் தில்லி போகவில்லை ● மினி பஸ் - 4 கோடி ரூபாய் நஷ்டம் ● மாநில திட்டக் குழு எம்.எஸ். சுவாமிநாதன் நியமனம் ● தேர்தல்...



றம் ரத்து ● ஜெ ராஜினாமா ● பஸ்கள் எரிப்பு ● அ.தி.மு.க தொண்டர்கள் தீக் குளிப்பு ● பன்னீர்செல்வம் முதல்வர் பொறுப்பு ● ஜெ. முதல்வர் பதவிக்கு இடைவேளை செப்டம்பர் 20, 2001 ● விரைவில் மீண்டும் முதல்வராவேன் - ஜெ ● சென்னையில் நிலநடுக்கம் ● பிரதமர் உருவ பொம்மை அ.தி.மு.க எரிப்பு ● விஷச் சாராயம் - பண்ருட்டி அருகே 35 பேர் பலி - பால்விலை லிட்டர் இரண்டு ரூபாய் உயர்வு ● ரேஷன் அரிசி 60 காசு உயர்வு - ● டான்ஸி வழக்கு - நீதிபதிகள் மாற்றம் ● டான்ஸி - அரசு வக்கீலாக வெங்கடபதி நியமனம் ● வெங்கடபதி வாக்குவாதம் - தி.மு.க அதிருப்தி ● டான்ஸி, கொடைக்கானல் ஓட்டல் வழக்கில் ஜெ. விடுதலை ● நீதிபதி தினகர் தீர்ப்பு ● 'நீதி வென்றது' - தி.க. வீரமணி அறிக்கை ● பஸ், மின் கட்டண உயர்வு குறைப்பு ● ரேஷன் அரிசி விலை உயர்வு ரத்து ● மலிவு விலை மது - 'குடி' மகன்களுக்கு சந்தோஷச் செய்தி ● சென்னையில் பந்த் ● சட்டக்கல்லூரி மாணவர் மீது போலீஸ் தடியடி ● முத்துக் கருப்பன் திருச்சிக்கு மாற்றம் ● சட்டக் கல்லூரி பிரச்னை - நீதிபதி அலி முகமது நியமனம் ● வெற்றிக் களிப்பில் தோழியுடன் ஜெ. ஆந்திரா பயணம் ● அ.தி.மு.க உறவுக்கு வாய்ப்பில்லை: வாஜ்பாய் ● கண்ணகி சிலை அகற்றப்பட்டது ● பா.ம.க சட்டமன்ற உறுப்பினர் சிவகாமி வின்சென்ட் கடத்தல் ● விஜயகுமார் புது கமிஷனர் ● பத்தாம் வகுப்பு தேறினாலே பாலிடெக்னிக்கில் இடம் ● விஷச்சாராயம் - செங்குன்றம் 22 பேர் பலி ● உள்ளாட்சித் தேர்தல் - அ.தி.மு.க கணிசமான வெற்றி ● சென்னை மேயராக ஸ்டாலின் தேர்வு ● முதல்வர் பன்னீரைச் சந்தித்தார் ஸ்டாலின் ● அரசு ஊழியர்களுக்கு தீபாவளி முன்பணம் இல்லை ● தமிழ்நாடு விடுதலைப்படை, மீட்புப் படை தடை ● சேலம் ஆத்தூரில் நக்கீரன் நிருபர் சிவசுப்பிரமணியன் கைது ● பஸ் ஸ்டிரைக் - போனஸ் பிரச்னை ● தமிழக அரசுக்கு மத்திய அரசு 450 கோடி அவசர கடன் ● பான்மசாலா விற்றால் சிறை ● இலவச வேட்டி சேலை இந்த வருடம் கிடையாது ● அமைச்சர் வளர்மதி ஜெப்ராஜ் நீக்கம் ● அரசு செலவைக் குறைக்க கமிஷன் ● மினி பட்ஜெட்: மின், பஸ் கட்டணம் உயர்வு ● புத்தாண்டில் மலிவு விலை மது விற்பனை துவக்கம் ● ஐந்தாம் வகுப்பிலிருந்து அரசுத் தேர்வு ● தமிழக ஆளுனராக ராம்மோகன் ராவ் நியமனம் ● கருணாநிதி மீது நீதிமன்ற அவமதிப்பு வழக்கு ● அ.தி.மு.க கூட்டணி முறிந்தது - நல்லகண்ணு அறிவிப்பு ● ஐந்தாம வகுப்பு பொதுத்தேர்வு இல்லை - அரசு பல்டி ● சைதை, வாணியம்பாடி, ஆண்டிபட்டி இடைத்தேர்தல் அறிவிப்ப ● எம்.கே. பாலன் காணாமல் போனார் ● நிலக்கரி ஊழல் - ஜெ விடுதலை ● ராஜ்ய சபா வாசனுக்கு இல்லை - ஜெ. ● வீரப்பனுடன் பேச்சு வார்த்தை கிடையாது ● ஜெ. ஆண்டிபட்டியில் போட்டியிட தடை இல்லை ● அ.தி.மு.க உறவைத் துண்டித்தது த.மா.கா ● பிரச்னையின் அடிப்படையில் வாஜ்பாய்க்கு ஆதரவு - ஜெ ● ஆண்டிபட்டி - அம்மா மனு தாக்கல் ● சைதை, வாணியம்பாடி தேர்



தல் ஒத்தி வைப்பு ● விருந்தினர் மாளிகையில் கருணாநிதிக்கு இடம் மறுப்பு ● நான் உங்கள் வீட்டுப் பிள்ளை - ஜெ பிரசாரம் ● கிராமப்புற மாணவர்களுக்கு இட ஒதுக்கீடு ● **ஆண்டிபட்டியில் அம்மா வெற்றி ● மீண்டும் ஜெ முதல்வர் பிப்ரவரி 27,2002.**

● 26 அமைச்சர்கள் ● ஐந்து மாதங்கள் சட்டசபை கூடவில்லை. ● ஆண்டிபட்டிக்கு 98 கோடி திட்டம் ● தமிழகத்தை முதல் மாநிலமாக்க 15 அம்ச திட்டம் ● பெரம்பலூர் - அரியலூர் இணைப்பு ● இமாம் அலி தப்பி ஓட்டம் ● நுழைவுத் தேர்வுக்கு ஆன்-லைன் விண்ணப்பம் ● கூவத்தில் படகு போக்குவரத்து ● இரண்டு தனி நீதிமன்றங்கள் மூட முடிவு ● பொன்முடி, சுரேஷ்ராஜன், அந்தியூர் செல்வராஜ் வீடுகளில் சோதனை ● சென்னையில் உலக வங்கி கிளை ● எம்.கே. பாலன் எரித்து கொலை ● பாலன் கொலை. இருவர் கைது ● 24 கோடி ரூபாயில் தர்ம்புரியில் மலர் ஏற்றுமதி மையம் ● ஆலயங்களில் அன்ன தானம் ● மலிவு விலை மது ரத்து ● பார்கள் வருகின்றன ● கண்ணகி சிலை பத்திரமாக இருக்கிறது - ஜெ ● 690 கோடிக்குப் புது வரிகள் ● ஸ்டாலின் பதவிக்கு வேட்டு. ஒருவருக்கு ஒரு பதவி சட்டம் தாக்கல் ● கொடைக்கானல் ஓட்டல் வழக்கு தீர்ப்பை எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் மனு - ஜெ.வுக்கு நோட்டீஸ் ● நீதிபதி அசோக் குமார் மாற்றம் ● நிதி ஒதுக்குவதில் பாரபட்சம் - தில்லிக்கு ஜெ கண்டனம் ● டான்ஸி வழக்கு அப்பீல் உச்ச நீதிமன்றம் விசாரணை ● டி.ஜி.பி ரவீந்திரநாத் இடை நீக்கம் ரத்து ● தி.மு.க ஆட்சியில் 1700 கோடி சிமெண்ட் ஊழல் குற்றச்சாட்டு ● பத்தாம் வகுப்பு, +2 தோல்வியடைந்தால் உடனே தேர்வு ● இலங்கை சமாதான பேச்சுவார்த்தை இந்தியாவில் அனுமதி கிடையாது - ஜெ ● பிரபாகரனைக் கொண்டு வர சட்டசபை தீர்மானம் ● சிகிச்சை பெற பாலசிங்கத்துக்கு அனுமதி கொடுக்கக்கூடாது - ஜெ ● "சோனியாவைச் சந்தித்தார் மாறன்" என அறிவிப்பு ● சட்டசபை தொடர் முழுதும் பரிதி சஸ்பெண்ட் ● தி.மு.க ஒருநாள் பகிஷ்கரிப்பு ● சைதை, வாணியம்பாடி, அச்சிறுப்பாக்கம் இடைத்தேர்தல் அறிவிப்பு ● கிருஷ்ணகிரி மாவட்டம் இப்போது இல்லை ● கலைஞர் சட்டமன்ற அலுவலகம் மீது தாக்குதல் ● மூன்று தொகுதிகளிலும் அ.தி.மு.க போட்டி ● குஜராத் முதல்வர் பதவி விலகினால் நல்லது - ஜெ ● பயிர்க் கடன் வட்டி 2 சதம் குறைப்பு ● சென்னையில் தொடர் கொள்ளை ● கொள்ளையைத் தடுக்க புதிய சட்டம் ● பொன்முடி அலுவலகம் தாக்கப்பட்டது ● சைதை, வாணியம்பாடி அதிகாரிகள் இடம் மாற்றம் ● பேருந்து வழித்தடங்கள் தனியார் மயம் ● அதிகாரிகள் இடமாற்றம் - தேர்தல் கமிஷன் தடை ● பட்டுச் சேலைகள் மீதான ஆடம்பர வரி நீக்கம் ● பால் கூட்டுறவு சங்கங்கள் - பெண்களுக்கு இட ஒதுக்கீடு ● விசைத்தறி மீதான மின் கட்டணம் குறைப்பு ● பிளாஸ்டிக் பொருட்களுக்குத் தடை மசோதா ● அரசு ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்தால் மூன்றாண்டு தண்டனை ● சட்டசபை, தலைமைச் செயலகம் மாமல்லபுரத்துக்கு மாற்றம்!

தொகுப்பு: ஸ்ரீநிவாசன்
படங்கள்: ராஜன்

## மேஷம்



எந்தக் காரியத்துலயும் வெற்றி பெறுவீங்க. மறைமுகமாக இருந்த எதிர்ப்புகள் விலகும். குடும்பத்துல செலவு எகிறும். பேச்சில கடுமை வேண்டாம். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. சிலருக்குப் புதிய வாய்ப்புகள் வந்து கதவைத் தட்டும். குடும்பத்துல சுபகாரியங்கள் நடக்க சந்தர்ப்பம் வரும். வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வரலாம்.

## ரிஷபம்



பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. உங்க ராசியில் சூரியன், சனி, ராகு, புதன் கிரகங்கள் உலவுவதால் மதிப்பு, கௌரவம் உயரும். மேலதிகாரிகள் பாராட்டு உண்டு. சிலருக்கு இடமாற்றம் புதிய பதவிகள் வந்து சேரும். குடும்பத்துல மகிழ்ச்சி கூடும். கொடுக்கல் வாங்கல்ல நன்மை உண்டு. கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வந்து சேரும். உடல் நலத்துலயும் கவனம் வையுங்க.

## மிதுனம்



இந்த வாரம் உற்சாகத்துக்குப் பஞ்சமில்லை. எதிர்ப்புகள் மறையும். தடைபட்டு நின்ற காரியங்கள் இப்ப நடக்கும். மனசுல தெளிவு பிறக்கும். சிக்கலான காரியங்கள் என்றாலும் வெற்றி பெற்று மற்றவங்க பாராட்டைப் பெறுவீங்க. பயணம் மேற்கொள்ளச் சந்தர்ப்பம் வரும். சொத்து சம்பந்தமான விவகாரங்கள்ல எதிர்பாராத வெற்றி வரும். கம்ப்யூட்டர், விஞ்ஞானம், எலக்ட்ரானிக்ஸ் வகையில் அனுகூலம் உண்டாகும். வார பின்பகுதியில் உடல் நலத்துல கவனம் வையுங்க.

## கடகம்



குடும்பத்துல இந்த வாரம் மகிழ்ச்சி மழை பொழியும். உற்சாகம் கூடும். அலுவலகத்தில் புகழ், பாராட்டு கிடைக்கும். சுயமாகத் தொழில் புரிபவர்களுக்கு ஆதாயம் உண்டு. வெளிநாடு செல்ல முயற்சி செய்பவர்களுக்கு அதுக்கான வாய்ப்பு இப்ப கிடைக்கும். திருமணம் போன்ற சுபகாரிய முயற்சிகள்ல சில பிரச்னைகள் ஏற்பட்டாலும் இறுதியில் சுமுகமா முடியும். ரியல் எஸ்டேட் தொழில் பண்றவங்களுக்கு அதிர்ஷ்டமானத் திருப்பம் வரும்.

## சிம்மம்



மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் கூடும். பாராட்டு, புகழ் உண்டு. உத்தியோகத்தில் இருப்பவர்களுக்குப் பதவி உயர்வு கிடைக்கலாம். புதிய முயற்சிகள் அனுகூலமாகும். பொருளாதார நிலை திருப்தியா இருக்கும். சுபச் செலவுகள் ஏற்படும். இதுக்காக வெளியூர் செல்லும் வாய்ப்பும் வந்து சேரும். வெளிநாட்டுத் தொடர்பால் நன்மை உண்டு. அரசியல்வாதிகளுக்கு மதிப்பு செல்வாக்கு உயரும்.

## கன்னி



இந்த வாரம் எந்தப் பிரச்னையும் வராது. தொழில், வேலை, வியாபாரங்கள்ல நல்ல பலன் கிடைக்கும். பொருளாதார பாதிப்பு வராது. மதிப்பும் செல்வாக்கும் உயரும். புதிய முயற்சிகள் வெற்றி தரும். குடும்பத்துல ஒற்றுமை ஏற்படும். இதுவரை இழுத்துக்கிட்டுப் போன சுபகாரியங்கள் இப்ப வெற்றி பெறும். வராமல் இழுத்தடிச்சிட்டிருந்த பணம் வந்து சேரும். கோர்ட் வழக்கு விவகாரங்கள்ல நல்ல திருப்பம் வரும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!



மீன ராசிக்காரரான உமாரியாஸ்கான் எதிர்பாராத பயணம் போவாங்களாம்!



## துலாம்

வெற்றி வாய்ப்புகள் கூடி வரும். வேலை சம்பந்தமாக வெளிநாடு செல்ல சிலருக்கு வாய்ப்பிருக்கு. சுயமாகத் தொழில் வியாபாரம் செய்றவங்க வளர்ச்சி காண்பாங்க. பண வசதி தாராளமாக இருக்கும். கூட்டாகத் தொழில் பண்றவங்களுக்கு லாபம் உண்டு. மகிழ்ச்சியும் ஒற்றுமையும் குடும்பத்துல நிலவும். புதிய பொருட்கள் வாங்க வாய்ப்பிருக்கு. கொடுக்கல் வாங்கல்ல லாபம் இருக்கு. ஆனாலும் கொஞ்சம் உஷாரா இருங்க. வாரக் கடைசியில பயணம் தவிர்ப்பது நல்லது.



## மகரம்

இந்த வாரம் கிரகங்கள் எல்லாம் உங்களை 'லுக்' விடுவதால் மகிழ்ச்சிக்குப் பஞ்சமில்லை. அலுவலகப் பணியாளர்களுக்கு மேலதிகாரிகள் பாராட்டும் ஆதரவும் கிடைக்கும். எடுத்த காரியத்தைச் சீக்கிரமாக முடிச்சுடுவீங்க. கடன் சுமை குறையும். தொழில் முயற்சிகள் கூடிவரும். குடும்பஸ்தானத்தை குரு பார்ப்பதால் சுப காரிய முயற்சிகள் கூடி வரும். வாரக் கடைசியில் சட்டம், காவல், இராணுவம் போன்றத் துறைகளைச் சேர்ந்தவங்க முன்னேற்றம் அடைவாங்க.



## விருச்சிகம்

இந்த வாரம் எந்தக் காரியத்துலயும் எச்சரிக்கையா இறங்குங்க. மனசுல இனம் புரியாத சஞ்சலம் இருந்துட்டே இருக்கும். பொருளாதார நிலை சாதாரணமானதாகவே இருக்கும். பயணங்களால் அனுகூலம் உண்டு. கொடுக்கல் வாங்கல் விஷயத்துல விழிப்போட இருங்க. குடும்பத்துல சின்னச் சின்னப் பிரச்னைகள் வரலாம். விட்டுக் கொடுத்துப் போங்க. துணி வகைகள், ஏற்றுமதி இறக்குமதி, தோல் சம்பந்தமான தொழில் பண்றவங்களுக்கு ஆதாயமிருக்கு.



## கும்பம்

இதுவரை தாமதமாகி வந்த காரியங்கள் இப்ப நடக்கும். பண நடமாட்டம் தாராளமா இருக்கும். கூட்டு முயற்சியில் புதிய தொழில் கூடி வர வாய்ப்பிருக்கு. குருபலம் நிறைந்து இருப்பதால் குடும்ப நலம் சீரா இருக்கும். நண்பர்கள் உறவினர்கள் உதவ வருவாங்க. கொடுக்கல் வாங்கல் இனங்கள் லாபம் கொண்டு வரும். தாயின் நலன்ல கவனம் தேவை. சினிமா போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு.



## தனுசு

இந்த வாரம் பண நடமாட்டம் தாராளமா இருக்கும். முக்கியமான சில காரியங்கள் இப்ப நடக்க வாய்ப்பிருக்கு. எதிர்ப்புகள் விலகும். இதுவரை இருந்து வந்தப் பிரச்னைகள், சங்கடங்கள் விலகி நன்மை ஏற்படப் போகுது. மனசுல அமைதி உருவாகும். சிக்கலான விஷயங்கள்கூட எளிதில் வெற்றி பெறும் வாய்ப்பு உண்டு. குடும்பத்துல குதூகலம் உண்டு. வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க. உடல் நலன்ல கவனம் வையுங்க.



## மீனம்

இந்த வாரம் எதிர்பாராத பயணம் மேற்கொள்ளப் போறீங்க. இந்தப் பயணத்துல உற்சாகமான மனநிலை ஏற்படும். பணம் கொடுக்கல் வாங்கல் விஷயத்துல உஷாரா இருங்க. ரொம்ப நாளா வராம இழுத்தடித்த பணம் இப்ப வந்து சேரும். உடன் பிறந்தவர்களால் சில பிரச்னைகள் உண்டாகும். செலவுகள் கட்டுக்கடங்காது. குடும்பத்தில் நண்பர்கள், விருந்தினர் வருகை என்று ஜாலியாக இருக்கும்.

"**இ**ன்னும் சில தினங்களில் என்னை விடுதலை செய்து விடுவார்கள். மீடியா மூலம் மக்களுக்கு இந்தச் செய்தியைச் சொல்லி விடுங்கள்!" என்று ஸூ கி, மே முதல் தேதி யன்று, தமது கட்சியான நேஷனல் லீக் ஃபார் டெமாக்ரசியின் துணைத் தலைவர் டின்ஊ-விடம் கூறிய அந்தக் கணமே, மியான்மர் தலைநகர் யங்கூனில் பரபரப்பு துவங்கி விட்டது.

ஐ.நா. பொதுச் செயலரின் தூதர் ரஸாலி இஸ்மெய்லின் பேச்சு வார்த்தை, மியான்மர் ராணுவ ஆட்சியாளரிடம் மனமாற்றத்தை உண்டாக்கியிருக்கிறது.

19 மாதங்கள் வீட்டுச் சிறை வைக்கப் பட்டிருந்த ஸூ கி, மே 6 ஆம் தேதி, ஒருவழியாக விடுதலை செய்யப்பட்டி ருக்கிறார். ஏழு வருடங்களுக்கு முன்பு ஒருமுறை இதே மாதிரி அவரை விடுதலை செய்ததும், பிறகு செப்டம்பர் 2000ல் மறுபடி அவருக்கு வீட்டுச் சிறை வாசம் விதிக்கப்பட்டதும் நினை விருக்கலாம்.

மியான்மர் ராணுவ ஆட்சியை எதிர்த்து, அகிம்சை முறையில், நாட்டில் ஜனநாயகம் மலரப் போராடி வருபவர் ஸூ கி. 1991 ஆம் ஆண்டு அமைதிக்கான நோபல் பரிசு பெற்றவர். "நமது மக்களின் முழு விடுதலையும், ஜனநாயக ஆட்சியுமே


• ஸூ கீ


• பிருந்தா

# விடுதலை நிலையானதா?

நமது லட்சி யம். இந்த இலக்கை நோக்கியே ராணுவ ஆட்சி யுடன் நமது பேச்சு வார்த்தைகள் இருக்கும்" என்று அறிவித்திருக்கிறார்.

ராணுவ ஆட்சி, ஸூ கியை விடுவிக்க எந்த நிபந்தனையும் விதிக்கவில்லை. உலகின் எந்த மூலைக்கும் அவர் சென்று வரலாம் என்று உத்தரவாதம் கொடுத்திருக்கிறது. சென்ற வரு டம் அவர் கணவர் காலமான போது, லண்டன் சென்று வரக்கூட அனுமதிக்க வில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

"எனக்கென்னவோ ஏதும் ரொம்ப எதிர் பார்த்து விட முடியாது என்றுதான் தோன்று கிறது" என சர்வஜாக்கிரதையாகக் கருத்து வெளியிட்டிருக்கிறார் மியான்மரின் 'ஐராவதி' நாளிதழ் ஆசிரியர் அங் ஸா. பிப்ரவரி மாதம் சில கட்சித் தொண்டர்களை மட்டுமே விடுதலை செய்தனர் ராணுவ ஆட்சியாளர் கள்; இன்னும் ஏராளமானோர் சிறையில்தான் இருக்கிறார்கள்.

**செ**ன்னைக்கு வந்திருந்த, அகில இந்திய ஜனநாயக மாதர் சங்கத் தலைவி பிருந்தா காரத் அவர்களிடம் ஸூகி-யின் விடுதலை பற்றி கருத்து கேட்டோம் :

"மியான்மரிலும், மற்ற உலக நாடுகளிலும் உருவாகி வரும் ஜனநாயகச் சிந்தனை களை ராணுவ ஆட்சியாளர் கள் அறிந்திருக்கிறார்கள். இரண்டு வருடங்களாக ஸூ கியைத் தனிமைப் படுத்தி வைத்திருந்த பிறகு, இப்போது மக் களின் விருப்பத்தை ஏற்றுத் தலை வணங்கி விடுதலை செய்ய முன் வந்திருப்பதே அவர் கள் எத்தகைய நிர்ப்பந்தத்துக்கு ஆளாகி இருக் கிறார்கள் என்ப தைக் காட்டு கிறது. அவரை விடுதலை செய்வதைத் தவிர வேறு வழி இல்லை அவர்களுக்கு. ஆனால் இந்த விடுதலை உண்மையானதா, நிரந்தரமானதா என்பது இனிமேல்தான் தெரிய வேண்டும்.

ஸூ கி நியாயத்தின் வெற்றியில் நம்பிக்கை கொண்ட பெண்களின் அடையாளமாகத் திகழ்கிறார். இன்றைய அரசியலிலும் கூட, சரியான போக்கைக் கடைப்பிடித்தால், பிறருக்கு எடுத்துக்காட்டாக இருக்கலாம் என்பதற்கு ஸூ கி ஓர் உதாரணம்.

"ஆனால், தங்கள் நாட்டின் மீது விதிக் கப்பட்டுள்ள பொருளாதாரத் தடைகளை நீக்குவதற்காகவே ராணுவ ஆட்சியாளர்கள் இந்த விடுதலை நாடகத்தை நடத்தியிருக் கிறார்களோ என்றும் நினைக்கத் தோன்று கிறது."

**– சாருகேசி**

படம் : வெங்கடேஷ்

ம்! கோட்டையை
மாமல்லபுரத்துக்கு
மாற்றுங்கள்...
ஆகட்டும்
சீக்கிரம்....

2002 மே 19
சித்ரபானு வைகாசி 5
மலர் : 60
இதழ் : 42

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வரிக்கு மேல் வரி; அடிக்கு மேல் அடி!

தமிழக வியாபாரிகளின் ஒரு நாள் கடையடைப்பு அவர்களுக்கே ஏராளமான பொருள் நஷ்டத்தை ஏற்படுத்தியிருக்கும். அப்படியிருந்தும் அவர்கள் அதில் ஈடுபடக் காரணம் என்ன?..

தமிழக அரசு தான்தோன்றித்தனமாக விதித்துள்ள வரிச்சுமையைப் பார்க்க இந்த ஒரு நாள் நஷ்டம் ஒன்றுமில்லை என்று கருதியிருக்கிறார்கள் வியாபாரிகள்.

வரிவிதிப்பினால் பொது மக்களும் கடுமையாய்ப் பாதிக்கப்பட்டுள்ளனர். ஒருமுனை விற்பனை வரி பல்முனை விற்பனை வரியாக உருமாற்றப்பட்டிருக்கிறது. இதன் மூலம் ஒரு பொருள் ஒவ்வொரு முறை விற்கப்படும்போதும் அதற்கு விற்பனை வரி வசூலிக்கப்பட்டு அரசு கஜானாவுக்குப் போகும்; அல்லது போக வேண்டும்.

இந்த வரி விதிப்பை இறுதியில் தாங்குபவர் நுகர்வோர்தான் என்பதை நாம் அறிவோம். ஒரு சோப்புக் கட்டியோ, மிளகாய்த் தூள் பொட்டலமோ எத்தனை முறை கை மாறி நம் கையை அடைகிறதோ, அத்தனை முறைகளுக்குமான வரி நம் தலையில் விடியும்!

ஆனால், விதிக்கப்பட்ட வரி வசூலிக்கப்பட்டு அரசு கஜானாவுக்குப் போகுமா?... அவ்வாறு போக வேண்டுமானால் கணக்காய ஊழியர்களுக்கு நச்சு வேலை அதிகரிக்கும். அதே சமயம் வரி ஏய்ப்பும் அதிகரிக்கும். பில் பெறாது பணம் கொடுத்துப் பொருள் வாங்குவது




மிகவும் சகஜமாயிருக்கிறது. இந்தப் பழக்கம் மேலும் அதிகரிக்கும்.

இவ்வாறிருக்க, முதல்வர் ஜெயலலிதா எதற்காக இப்படியொரு நடவடிக்கை எடுத்தார்?

தமிழகத்துக்குள் கொண்டு வரப்படும் பொருட்களுக்கு நுழைவு வரி, அரிசிக்கும் பருப்புக்கும்கூட வரி, விற்பனை வரிக்கு மேல் சர்சார்ஜ் என்று ஜெயலலிதா விதித்துள்ள வரிகளின் வரிசையைப் பார்த்தால் ஒரு நிர்தாட்சண்ய கொடுங்கோல் ஆட்சியரின் செயல்பாடுபோல் தெரிகிறது.

பத்திரிகை காகிதத்துக்கு விதிக்கப்பட்டுள்ள நான்கு சதவிகித நுழைவு வரி, பத்திரிகைத் தொழிலகங்களின் பொருளாதாரத்தைச் சின்னாபின்னப்படுத்தக் கூடியது. காகிதச் செலவுதான் எந்த பத்திரிகைக்குமே மிக அதிகம். அதன் மீது விதிக்கப்படும் நுழைவு வரி என்பது லாபத்தை இரவோடிரவாக நஷ்டமாக்க வல்லது.

இந்தப் பொருளாதார அரிச்சுவடி விஷயங்கள் முதல்வருக்குத் தெரியாது என்றோ அவர் அவைகுறித்து யோசித்திருக்கமாட்டார் என்றோ சொல்ல முடியாது. அ.தி.மு.க. அரசு இதுவரை காட்டி வந்த பத்திரிகை விரோதப் போக்கின் தொடர்ச்சியாகவே இந்த நடவடிக்கையைக் கருத வேண்டியிருக்கிறது.

பெரும்பான்மை பலம் விளைவிக்கக் கூடிய யதேச்சதிகாரப் போக்கு இந்த அரசின் வேறு பல நடவடிக்கைகளிலும் பிரதிபலிப்பதைப் பார்க்கிறோம்.

ஒருவருக்கு ஒரு பதவிதான் என்ற சட்டம் கொண்டுவரும் முயற்சியில் அச்சட்டத்தைக் கடந்த காலத்துக்கும் செல்லுபடியாக்கக்கூடிய வகையில் அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது. தமது ஸ்டாலின் விரோதப் போக்கை மூடி மறைக்க முதல்வர் எந்த முயற்சியும் மேற் கொள்ளவில்லை.

இன்றியமையாத சேவைகள் வழங்கும் ஊழியர்களின் வேலை நிறுத்தத்தைத் தடை செய்யும் சட்டம் ஒன்று ஏற்கெனவே அமுலில் இருக்கிறது. ஆனால், அதைக் காட்டிலும் கடுமையான, மிகக் கடுமையான அபராத / தண்டனை வழங்கும் வகையில் ஒரு மசோதா அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. போக்குவரத்துத் துறை ஊழியர்களுள் ஒரு பிரிவினர்




உருவாக்கக் கூடிய பிரச்னைகளை ஒடுக்கவே இந்த மசோதா என்று வெளிப்படையாகவே அரசுத் தரப்பு ஒப்புக் கொண்டிருக்கிறது.

தொழிலாளர்களின் அடிப்படை உரிமைகளைப் பறிக்கின்ற இப்படிப்பட்ட ஒரு சட்டம் வரக்கூடாது என்று எதிர்க் கட்சியினர் ஆட்சேபித்தும் பயனில்லை. சட்டசபையில் அ.தி.மு.க.வுக்குப் பெரும்பான்மை இருப்பதால் மசோதா சட்டமாகிவிடும்.

இதே மெஜாரிட்டியை நம்பித்தான் பிளாஸ்டிக் மீதான திடீர்த் தடையையும் தடாலடியாக அறிவித்துள்ளது அரசு.

மண்ணோடு மண்ணாகாமல் சுற்றுச் சூழலை மாசுபடுத்தும் பிளாஸ்டிக், பூமியின் முகத்தை அலங்கோலமாக்கி, நிலத்தடிக்கு நீர் கசிவதையும் தடுத்து வருவது உண்மைதான். ஆனால், திடீரென்று எல்லா வகையான பிளாஸ்டிக் உபயோகத்தையும் நிறுத்திவிட முடியாது. உபயோகிப்பாளர்கள் மட்டுமின்றி உற்பத்தியாளர்களும் கடுமையாகப் பாதிக்கப்பட்டு நஷ்டமடைந்து நலிவார்கள். ஒரு காலக்கெடு நிர்ணயிக்கப்பட்டு, அதற்குள் பிளாஸ்டிக் உபயோகத்தையும் உற்பத்தியையும் படிப்படியாகக் குறைத்து நிறுத்த வேண்டும் என்பதுதான் முறை.

எதிர்க்கட்சிகளின் பலத்த ஆட்சேபனை காரணமாக இந்த மசோதா தேர்வு கமிட்டியின் பார்வைக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

சட்டசபையில் அறுதிப் பெரும்பான்மை இருக்கிற தைரியத்தில் எதிர்க்கட்சிகளை மட்டுமின்றி வியாபாரிகள், உற்பத்தியாளர்கள், மாணவர்கள், பத்திரிகையாளர்கள், அரசு ஊழியர்கள், தொழிலாளர்கள், பொது மக்கள் என்று அனைத்துத் தரப்பினரையும் கடுமையான அதிருப்திக்கு ஆளாக்கி வருகிறது தமிழக அரசு.

இன்று சட்டசபையில் முதல்வரும் அவரது கட்சியும் அனுபவிக்கிற பெரும்பான்மை பலம் என்பது அவர்களுடைய சொந்த பலம் அல்ல; அது தமிழக மக்கள் அவர்களுக்கு அளித்துள்ள பலம் என்பதை மறவாது இருக்கட்டும். இல்லாவிட்டால் ஐந்தாண்டு ஆட்சிக்காலம் முடிவதற்குள் ஒரு மாபெரும் மக்கள் விரோத அரசை நிறுவி நடத்திய அவப்பெயர் ஜெயலலிதாவை வந்தடையும்! ○




# கல்கி வைரவிழா
## வைட்டமின்
# சிறுகதைப் போட்டி!

**முதல் பரிசு – ரூ.10,000**

**இரண்டாம் பரிசு – ரூ. 7,500**

**மூன்றாம் பரிசு – ரூ. 5000**

*அலுப்பையெல்லாம் விரட்டியடித்து பி - **12** இன்ஜெக்ஷன் போட்ட மாதிரி இருக்க வேண்டும் உங்கள் சிறுகதை!*

இவ்வாண்டு **அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி**க்கான

*முதல் நிபந்தனை இதுதான்!*
*மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை:*

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை, உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2002'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 4, ஆண்டுமலரில் வெளியாகும்.



**பரிசுகள், கல்கி வைரவிழா நிகழ்ச்சி மேடையில், ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.**

திருமணம் என்பது கணவனின் விழிகளை மனைவியும், மனைவியின் விழிகளைக் கணவனும் ரசித்துப் பார்த்துக் கொண்டிருப்பதல்ல. இரண்டு பேரும் ஒன்றாக இருந்து ஒரே திசையில் ஒரு குறிப்பிட்ட இலக்கை நோக்குவதாகும்.

- பி. ருக்மணி, சிதம்பரம்





* படம் : யோகா



# தேன்கூடு

அன்பைக் கொடுப்பது என்பது, நம் வாழ்க்கையில் ஒரு பகுதியைக் கொடுப்பது. நம் மகிழ்ச்சி, இன்பம், மனோதைரியம் போன்றவற்றைப் பங்கிட்டுக் கொள்வது.

எல்லாவகை அன்பிலும் ஓரிரு அடிப்படைக் காரணிகள் காணப்படுகின்றன. இந்த அடிப்படைக் காரணிகள் நேசிப்பவன் மனத்தில் கண்டிப்பாகக் குடியிருக்க வேண்டும். இல்லையென்றால் அங்கு தோன்றும் அன்பு பொய்யானது.

- சுவாமி சின்மயானந்தர்

- வயலூர் பார்த்திபன்

வாழைப் பழம் 4000 ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவில் தோன்றியது. இந்தியா மீது படையெடுத்து வந்த மகா அலெக்ஸாண்டர் இந்தியர்கள் வாழைப்பழம் சாப்பிடுவதைக் கண்டு அதிசயத்தார். இங்கிருந்து வாழைப்பழங்களையும், கன்றுகளையும் எடுத்துச் சென்றார்.

கோவை எம். கதிர்வேல்

# எல்லாம் தெரிந்த பொண்ணாட்டி!

சிகாகோவில் விமானத்தில் அமர்ந்ததும், அவசரமாய் விமான பணிப்பெண் உள்ளே நுழைந்து, ''இரு பிரயாணிகள் எமர்ஜன்ஸியாகப் பிரயாணம் செய்ய வேண்டும். அவர்களுக்காக யாராவது இருவர் பிரயாணத்தை விட்டுக் கொடுக்க முடியுமா! அடுத்த விமானத்தில் பிரயாணம் செய்யலாமே?'' என்றதும் நானும் என் மனைவியும் ''அதுக்கென்ன அடுத்த விமானத்தில் போனால் போகிறது'' என்று சொல்லி இறங்கினோம். ''பாவம் என்ன அவசரமோ'' என்று மனத்திற்குள் நினைத்தோம். விமானம் கிளம்பியதும் உதவிய எங்கள் இருவர் கையிலும் நூறு நூறு டாலர்கள் அன்பாய்த் தந்து நன்றி சொன்னார்கள் சிகாகோ விமான அதிகாரிகள்.

இப்படி உதவுவதற்கு இந்திய விமான நிலையங்களில் ஏற்பாடு உண்டா?

- ராமமூர்த்தி தம்பதி.
தகவல்: பத்மஜா,
நெய்வேலி.







ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், சுவிஸ், ஸ்பானிஷ், டேனிஷ், நார்வே, டச்சு, போர்ச்சுகீஸ் ஆகிய 9 மொழிகளிலும் 'டேக்ஸி' என்ற வார்த்தை இருக்கிறது. எல்லாவற்றுக்கும் 'வாடகைக்கார்' என்பதுதான் அர்த்தம்.

தகவல்: கே.விஜயலட்சுமி

பிரிட்டிஷ் நாவலாசிரியரான கிரஹாம் கிரீன் தமது நூலொன்றை இவ்வாறு சமர்ப்பணம் செய்திருக்கிறார்.

''என் மாமியாருக்கு இந்நூல் சமர்ப்பணம். என் மீது தயை கூர்ந்து என் மனைவியைத் தம் வீட்டுக்கு அவர் அழைத்துச் சென்றிராவிட்டால் என்னால் இந்நூலை எழுதியிருக்கவே முடியாது.

- ஜரீனா பானு.

முருக பக்தர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் பிறந்தது *30.10.1908 வியாழன் காலை 4.55 மணி. முக்தியடைந்தது 30.10.1963 வியாழன் காலை 4.55 மணி.*

'நியூயார்க் போஸ்ட்' இதழில் ஒரு விளம்பரம் வந்தது.

''என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா - 45 வால்யூம்கள். நல்ல நிலையில். விலை 1000 $. இனிமேல் எனக்குத் தேவையில்லை. சமீபத்தில்தான் திருமணம் செய்துகொண்டேன். மனைவிக்கு எல்லாம் தெரியும்!''

*(காசு குடுத்து கிண்டல் அடிக்கிறாங்க!)*

— அரிச்சந்திரன், சென்னை.

உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டின் உபயோகப்படுத்திய புகை பிடிக்கும் பைப் அமெரிக்காவில் பத்து லட்சம் ரூபாய்க்கு ஏலமிடப்பட்டது.

முதுகுக்குப் பின்னால் ஒரே ஒரு காரியம்தான் செய்ய வேண்டும். அது முதுகை தட்டிக் கொடுப்பதாக இருக்கட்டும்.

(ஆஸ்கார் ஒயில்ட்)

- வீ.பா. கிருஷ்ணன்.

ரஷ்யாவில் பிறக்கும் குழந்தையை முதலில் ஆணா ? பெண்ணா ? என்று கேட்பதில்லை. எத்தனை கிலோ எடை என்றுதான் கேட்கிறார்கள்.

*சரியான நபர் மீது, சரியான அளவில், சரியான நேரத்தில், சரியான காரணத்திற்காக, சரியான வழிமுறையில், கோபத்தைக் காண்பிப்பது சுலபமல்ல!*

*- அரிஸ்டாட்டில்*

- ச. இராசன்

கல்யாணக் கனவுகள் காணும் வயதை எப்போதோ தாண்டி விட்டிருந்தாள் சுமதி. காதோர நரைகள் அந்த உண்மையை அவ்வப்போது எடுத்துரைத்தாலும் அதை ஏற்றுக் கொள்ள அவள் மனம் இடம் தரவில்லை. அவளுடைய கடைசித் தங்கைக்கே வயது இருபத்தெட்டு... நடுவில் இன்னும் மூன்று பேர் இருந்தார்கள். இனிமேல் திருமணம் என்ற வசந்தம் தன் வாழ்வில் வீச வாய்ப்பே இல்லை என்று சுமதிக்குத் தெரிந்திருந்தாலும், 'ஏதாவது அதிசயம் நடந்து நம் வாழ்விலும் வசந்தம் வீசிவிடாதா' என்ற நப்பாசைக் கனவுகளில் அவ்வப்போது அவள் மூழ்கி விடுவதுண்டு.

வயது ஏற ஏற, தனக்குத் திருமணமாகவில்லை என்ற ஏக்கத்தை விட, தான் கவனிக்கப்படுவதே இல்லை; யாரும் தன்னை ஒரு பொருட்டாகவே மதிப்பதில்லை என்ற உணர்ச்சி அவளை ஆக்ரமித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டிருந்தது.

அலுவலகத்தில் உடன் பணிபுரியும் ஆண்கள் அவளிடம் புன்னகை செய்யாதது, ஜோக் அடித்துப் பேசாதது.. வார்த்தைக்கு வார்த்தை 'மேடம்' என்று மிகுந்த மரியாதையுடன் விளிப்பது... இரண்டு அடி தள்ளி நின்றே அவளுடன் பேசுவது... எல்லாமே அவளுக்குத் துன்பத்தையளித்தன.

வீட்டிலும் அவளுடைய பெற்றோர் அவளது திருமணப் பேச்சை நிறுத்தி விட்டிருந்தார்கள். அடிக்கடி அவர்கள் மகளைப் பார்த்து விடும் பெருமூச்சுகள் கூட நடிப்பாகத்தான் பட்டது சுமதிக்கு.

'அவர்களைக் குற்றம் சொல்வதில் பயனில்லை' என்று தோன்றும். சமயங்களில், அவர்கள்தான் உண்மையான குற்றவாளிகள் என்றும் தோன்றும்! வரிசையாக ஐந்து பெண்களை யார் பெற்றுக் கொள்ளச் சொன்னார்கள்? அடிக்கடி பெற்றோரை மனத்திற்குள் நொந்து கொள்வாள் சுமதி. அதுவும், ''சுமதி பொறக்கறச்சே எனக்கு பதினெட்டு வயசுதான். என்ன செய்யணும், எது செய்யணும்னு கூட எனக்குத் தெரியாது... எல்லாம் எங்க அம்மாதான்'' என்று சுமதியின் தாயார் சொல்லிக் கொள்ளும் போது பற்றிக் கொண்டு வரும் சுமதிக்கு. ''பதினெட்டு வயசுலே குழந்தையைப் பெத்துக்க தெரிஞ்சது இல்லே. அதே மாதிரி அந்தக் குழந்தைக்கும் காலாகாலத்தில் கல்யாணம் பண்ணி வைக்கணும்னு உனக்கும் அப்பாவுக்கும் ஏன் தோணலை? என்று 'பளா'ரென கன்னத்தில் அறைவது போல் கேட்கத் தோன்றினாலும் கேட்க மாட்டாள்.

# மூத்தவள்

சுமதியின் வாழ்க்கையிலும் தென்றல் வீசாமல் இருக்கவில்லை. அவள்தான் ரயிலைத் தவற விட்டு விட்டாள்.

சுமதி கல்லூரி படிக்கும் போதே, பக்கத்து வீட்டு பரந்தாமன் காதல் பார்வையால் அழைப்பு விடுத்த போது, 'அதெல்லாம் தப்பு' என்று மறுத்திருக்கிறாள். அவள் அலுவலகத்தில் சேர்ந்த புதிதில் மானேஜர் ராமகிருஷ்ணன் அவளிடம் நெருங்க நினைத்த போது, 'அதற்கெல்லாம் வேறு ஆளைப் பாரு' என்றாள் முகத்தில் அடித்தாற் போல... அவன் வேறு ஆளைப் பார்த்துக்கொண்டு இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பன். பரந்தாமன் மனைவியுடன் அமெரிக்காவில் இருப்பதாகக் கேள்வி.

''ஹலோ... மணி இப்போ ஆறு. எல்லோரும் போயாச்சு. இன்னும் என்ன பண்ணிட்டிருக்கீங்க?'' என்ற இனிமையான கம்பீரமான குரல் சுமதியை தன்

நினைவுகளிலிருந்து மீட்டது.

திடீரென கனவுகளிலிருந்து எழுப்பப்பட்ட சுமதி, இலேசான மிரட்சியுடன் நிமிர்ந்தாள்.

எதிரே நந்து... நந்தகுமார்.

'சட்'டென பட்டாம்பூச்சி பறந்தது சுமதியின் மனத்தில்.

''அட, இவனை எப்படி மறந்தோம்?'' என்று தனக்குள் ஆச்சரியப்பட்டுக் கொண்டாள் சுமதி.

வறண்ட பாலைவனப் பிரதேசமாக இருந்த அவள் மனத்தில் தென்றலாக வீசத் தொடங்கியிருந்தான் நந்தகுமார். அவ்வப்போது அவனே வலிய வந்து அவளிடம் பேசுவான். உதவி செய்வான்.

''நீங்க ஏன் எல்லாருடனும் சேர்ந்து லஞ்ச் சாப்பிடறதில்லே?''

''ஏன் ஆபீஸ்லே தர்ற காப்பியைக் கூட குடிக்க மாட்டேன்றீங்க?''

# சத்யா ஸ்ரீனிவாசன்

சில வருடங்கள் சிறியவன்.

''இதோ புறப்பட வேண்டியதுதான்'' என்றபடி புறப்பட்டாள் சுமதி. அவனும் உடன் நடந்து வர, ஏனோ சுமதிக்குப் பெருமையாக இருந்தது.

''உங்ககிட்டே கொஞ்சம் பர்சனலா பேசணும்'' என்று அவள் சொன்னதும்



''என்ன திடீர்னு ரெண்டு நாள் லீவு போட்டுட்டீங்க?'' என்று அவளுடைய தனிப்பட்ட விஷயங்களில் எல்லாம் மூக்கை நுழைக்க ஆரம்பித்திருந்தான்.

''தனியா, ரொம்ப லேட்டா, லேடீஸ் ஆபீஸ்லே வேலை செய்யக் கூடாது'' என்று அவன்தான் அக்கறையுடன் சொல்வான். ''அது காதலா?'' என்ற கேள்வி எழும் சுமதியின் மனத்தில்.

இருக்காது. சுமதியை விட நந்தகுமார்

மனசு சிறகடித்தது.

'வயது வித்தியாசம் எல்லாம் ஒரு பொருட்டல்ல. காதலுக்குத்தான் கண் இல்லையே...! நம்மிடம் உள்ள ஏதோ ஓர் அம்சம் அவனுக்குப் பிடித்திருக்கலாம். தன்னை விட வயதில் மூத்த பெண்களை எத்தனையோ ஆண்கள் மணம் முடித்துக் கொண்டிருக்கிறார்களே. இப்போதெல்லாம் அது ரொம்ப சகஜமாகி விட்டதே. நம்முடைய விஷயத்திலும் அப்படி நடக்கக் கூடாதா?' என்



"கலி ரொம்ப முற்றி விட்டது, பிரபோ!"

"எதனால் சொல்கிறீர்?"

"இரண்டு வருஷம் முன்பே யமலோகத்துக்கு வந்திருக்க வேண்டிய ராமசாமி, யம தூதர்களுக்கு லஞ்சம் கொடுத்துவிட்டு இன்னும் பூவுலகில் வாழ்ந்து கொண்டிருக்கிறான்!"

- வந்தவாசி பா. ஜெயக்குமார்



"சீனியாரிடியை மெய்ன்டெய்ன் பண்றதுல நம்ம மானேஜர் மாதிரி யாரையும் பார்க்க முடியாது."

"அப்படி என்ன செய்துட்டார்...?"

"ஹெட்கிளார்க்கை விட பியூன் அதிகமா லஞ்சம் வாங்கினதைக் கண்டு பிடிச்சு உடனே பியூனை சஸ்பெண்ட் பண்ணிட்டார்!"

- வே. ஈஸ்வரன்

"என்னம்மா, மாப்பிள்ளை தம்பி உன்னிடம் ஐந்து நிமிடம் தனியா பேசணும்னு கேட்டானே, அப்படி என்னதான் பேசினீங்க?"

"இந்தக் கல்யாணம் நடக்கணும் என்றால் ஆயுசுக்கும் நீ வாயைத் திறந்து பாடக்கூடாது என்று சத்தியம் வாங்கிக்கிட்டார், அப்பா!"

– பி. சிவஞானம்



றெல்லாம் எண்ணங்களை தன் மனத்தில் ஓடவிட்ட சுமதி தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள். 'அவன் தன் மனத்தைத் திறந்து காட்டியதும் உடனே 'ஓகே' சொல்லிவிட வேண்டும். இல்லையென்றால் இதுவும் பரந்தாமன், ராமகிருஷ்ணன் கதை போலாகிவிடும். இனிமேலாவது நமக்காக வாழ வேண்டும்.' அவசர அவசரமாகத் தனக்குள் முடிவெடுத்துக் கொண்டாள் சுமதி.

**கா**ப்பியை உறிஞ்சியபடி, "உங்ககிட்டே எப்படிச் சொல்றது" என்று ஆரம்பித்தான்.

சுமதிக்கு இதயம் படபடத்தது.

"ம்... அது வந்து... பானு உங்ககிட்ட ஒண்ணும் சொல்லலையா?" அவன் கேட்டதும் பதறிப் போனாள் சுமதி.

"பானுவா? எந்த பானு?"

"உங்க சிஸ்டர் பானுங்க... உங்களுக்கு அடிக்கடி சாப்பாடு கொண்டாருவாங்களே." என்ற நந்தகுமார்,

"ஒண்ணும் தப்பா நடந்திடலைங்க. சும்மா மீட் பண்ணியிருக்கோம். அவ்வளவுதான். ப்ளான் போட்டு எல்லாம் சந்திக்கலே. மனம் ஒத்துப் போச்சு. அவளுக்கு எல்லாமே நீங்கதான்னு சொல்லிட்டா. நீங்க 'ஓகே'ன்னா தான் ஓகேவாம். இல்லேன்னா அவ்வளவுதானாம்..." என்று அவன் இழுக்க.. அதிர்ச்சியில் உறைந்து போனாள் சுமதி.

தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்ள ஓரிரு நிமிடங்கள் பிடித்தன சுமதிக்கு. விரக்திப் புன்னகை மலர்ந்தது அவள் உதடுகளில்.

"ப்ளீஸ், முடியாதுன்னு சொல்லிடாதீங்க... என் லைஃபே உங்க கையிலேதான் இருக்கு..."

சுமதியின் விழிகளில் நீர் திரையிட்டது.

"ஐயையோ, என்னங்க இது?" என்று பதறினான் நந்தகுமார்.

"ஒண்ணுமில்லே. ஆனந்த கண்ணீர்" என்றாள் சுமதி. ○

# நற... நற... நரேஷ்குப்தா!

பிற பத்திரிகைகளில் வெளியான சில கடிதங்கள். சற்றே சுருக்கமாக.

**பா**துகாப்பு அமைச்சர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் குஜராத் மக்களுக்கு ஓர் அறிவுரையை வழங்கியிருக்கிறார். ஒரு காலத்தில் எதிரியாக இருந்தாலும் அமெரிக்காவுடன் இப்போது நட்பாக இருக்கும் வியட்னாம் மக்களை குஜராத் மக்கள் பின்பற்ற வேண்டுமாம். அவர் இந்த உதாரணத்தைக் கூறியிருக்கக் கூடாது. அதற்குப் பதிலாக தம்மையே அவர் உதாரணம் காட்டியிருக்க வேண்டும். சில வருடங்களுக்கு முன் வரை காவிக்கூட்டத்தின் கடும் எதிரியாக இருந்த அவருக்கு இப்போது அவர்கள் தானே மிகச் சிறந்த நண்பர்கள்!

(தி டைம்ஸ் ஆஃப் இந்தியா - ஆர்.பி. தோண்டே, மும்பை.)





**சி**றுநீரக வியாபாரம் குறித்த அறிக்கை அதிர்ச்சி தருவதாக இருந்தது. ஏழ்மையை ஒழித்தால்தான் இந்த நிலை மாறுமே தவிர சட்டத்தினால் இதற்குத் தீர்வு கிடைக்காது.

ஒரே மாற்றுவழி - செயற்கை சிறுநீரகங்களைத் தயாரிப்பதுதான். விஞ்ஞானிகள் இந்தக் கோணத்தில் தீவிரமாக ஆராய்ச்சிகள் செய்ய வேண்டும். சாலமாண்டர் போன்ற விலங்குகள் தங்களது கண்கள், வால், இதயம் போன்றவற்றைப் புதுப்பித்துக் கொள்ளும் சக்தி கொண்டவை. மனித இனத்தில்கூட தலைமயிர், நகம், சருமம், தசைகள் மற்றும் கல்லீரலில் உள்ள உயிரணுக்கள் தங்களையே புதுப்பித்துக் கொள்ளவோ அல்லது புதிதாக உருவாக்கிக் கொள்ளவோ முடிகிறதே.

(ஃப்ரண்ட்லைன், சி. ரமேஷ், இரமங்கலம், தமிழ்நாடு)

**இ**ந்தியா

தனது காரியத்தை மட்டும் பார்த்துக் கொண்டு சும்மாயிருப்பதே இலங்கைப் பிரச்னை தீர உதவி செய்தது போலாகும். ஏற்கெனவே இலங்கைப் பிரச்னையில் இந்தியா தலையிட்டதனால்தான் ராஜீவ்காந்தியை நாம்



இழக்க நேர்ந்தது. ராஜீவ்காந்தியை விடுதலைப் புலிகள் கொலை செய்யாமல் இருந்திருந்தால் இந்நேரம் தனி ஈழம் பெற்றிருப்பார்கள்.

**(தினமணி - எஸ். நாச்சியப்பன், அம்பத்தூர்.)**

தாங்கள் கூறியது நிஜமென்றால் தெலுங்கு தேசம் கட்சியும் திரிணாமுல் காங்கிரஸும் எதிர்க்கட்சியுடன் சேர்ந்து அரசுக்கு எதிராக வாக்களித்திருக்க வேண்டும். ஆனால் மதச்சார்பில்லாத கட்சி என்று தன்னைக் காட்டிக் கொள்வதுதான் இவர்களது நோக்கம். இவர்களுக்கு கேக்கை சாப்பிடவும் வேண்டும், அதேசமயம் அது முழுமையாகக் கையில்

## மாற்றான் தோட்டம்

இருக்கவும் வேண்டும்!

**(தி ஹிந்து - பி. சந்திரசேகர், காச்சி)**

நாவரசு கொலை வழக்கில் ஜான் டேவிடை நீதிமன்றம் விடுவித்தது அதிர்ச்சியாக இருந்தது. அதற்கு முக்கிய காரணம் ஊடகங்கள் ஜான் டேவிட் தான் கொலைகாரன் என்று மீண்டும் மீண்டும் சித்திரித்ததுதான். இறுதியில் டிவிஷன் பெஞ்ச்சின் தீர்ப்பை மாற்றியமைத்தது விசாரணை நீதிமன்றத்தின் முடிவு. ஒரு நீதிமன்றத்தின் தீர்ப்பை அதை விடப் பெரிய நீதிமன்றம் மட்டுமே கேள்விக்குரியதாக்கலாம் என்னும் இந்த நீதிமன்றத் தீர்ப்பில் கூறியிருக்கிறார்கள். அதுவும் நியாயமே. இல்லாவிட்டால் நாட்டில் கலவரங்கள்தான் பெருகும்.

**(தி நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ், ஜி. முத்துகிருஷ்ணன், சென்னை.)**

அ.தி.மு.க ஆட்சியில் நடைபெற்ற குற்றங்கள் குறித்து முதல்வர் ஜெயலலிதா புள்ளி விவரங்கள் தெரிவித்தார். இதற்குப் பதிலளித்து தி.மு.க தலைவர் கருணாநிதி அறிக்கை விடுத்தார். அந்த அறிக்கைக்கு தமிழக அரசின் உள்துறைச் செயலாளர் நரேஷ்குப்தா பதிலளித்து அறிக்கை வெளியிட்டுள்ளார். அதில் தி.மு.க ஆட்சி, அ.தி.மு.க ஆட்சி எனப் பிரித்துக் காட்டியுள்ளார்.

இது போன்ற ஓர் அறிக்கையை ஜெயலலிதாவோ, அவரது அமைச்சர்களோ தான் வெளியிட வேண்டுமே தவிர அரசு அதிகாரிகள் அல்ல. அரசு அதிகாரிகள் அரசியல்வாதிகளைப் போல செயல்படக் கூடாது.

**(தினமலர், வீ. கணேசன், கோவில் பட்டி.)**

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்.**

# சின்னாச் பெங்களூர் நாரங்களே?

'இந்தியத் தொலைக்காட்சிகளில் முதல் முறையாக' என்பது போல, இந்தியக் கல்வி வரலாற்றிலேயே முதல் முறையாக பெங்களூரில் பெண்களுக்கென தனி சட்டக் கல்லூரி தொடங்கவிருக்கிறது. பிஷப் காட்டன் பெண்கள் கிறித்துவக் கல்லூரியில் ஐந்து வருட சட்டப் படிப்பு ஆரம்பிக்க, பார் கவுன்சில் ஆப் இந்தியா(BCI) அனுமதி வழங்கியுள்ளது. 'சட்டப் படிப்புத் துறையின் முதல் படி இது. சுமார் 24,000 சதுர அடி அளவிலிருக்கும் சட்டக் கல்லூரியில் ஐந்து வகுப்பறைகள், ஆசிரியர்களுக்கான இரண்டு அறைகள், நூலகம், கோர்ட் ஹால்... என இப்போதைக்கு ஐடியா செய்திருக்கிறார்கள். எண்பது மாணவிகளுக்கு மட்டுமே அனுமதி என்றும் பிஸிஐ சொல்லியிருக்கிறது. (பிஸிஐ பார்வை நர்ஸரி, கிண்டர் கார்டன் பள்ளிகள் பக்கம் திரும்பினால் எவ்வளவு நன்றாக இருக்கும்!)

ஆபீஸ் என்றாலே கோப்புகள், மேலதிகாரியின் கெடுபிடி, வெட்டிப் பேச்சு, மதிய தூக்கம்... இப்படித்தானா? பெங்களூரிலிருக்கும் சில அலுவலகங்களில் கேளிக்கைகளும் கலாட்டாக்களும் பொங்கி வழிந்து கொண்டிருக்கிறது. சில நாட்களுக்கு முன் அனிமேஷன் நிறுவனமொன்றில் அத்தனைப் பணியாளர்களும் தத்தம் உடைகளை மாற்றி போட்டுக் கொண்டு வந்திருந்தார்கள். கல்லூரிகளில் 'எத்னிக் டே', 'ஸாரி டே', 'டை டே' என்றிருப்பது போல அன்று 'இன்ஸைட்-அவுட் டே'யாம்! அன்று நாட்பூராவும் ஆபீஸுக்கு வந்த விசிட்டர்களையும் கூட இதே உல்டா ரூபத்தில் சந்தித்திருக்கிறார்கள். மெடிக்கல் ட்ரான்ஸ்க்ரிப்ஷன் கம்பெனியில் ஊழியர்கள் பூ அலங்காரம், பொம்மை, போஸ்டர், கலர் பல்பு என... புதுக்கோலத்தில் அசத்தினார்களாம். இன்னொரு தனியார் நிறுவனத்தில் தலைமை அதிகாரியிலிருந்து வாட்ச்மேன் வரை காகித ஏரோப்ளேன் செய்து நாள் முழுக்க பறக்க விட்டனராம்... ஆபீஸுக்குள்ளேதான்!

வேலை பளுவைக் குறைக்க டென்ஷன் பார்ட்டியாகாமலிருக்க, நேரத்துடன் முடிக்க வேண்டுமே என்ற படபடப்பைக் குறைக்க இப்போது பல நிறுவனங்களில் சில கேளிக்கைகளை அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள். இந்த புரோகிராமுக்குப் பெயர் 'பான்ஸர்'. ஸர் ப்ராட்மென் நம் சூறாவளி சச்சினைப் பார்த்து 'பான்ஸர்' என்றாராம். அதனால் இந்த நாமகரணம். "ஒரே மாதிரியாக வேலை செய்து கொண்டிருந்தால் போரடிக்கும். சில மணி நேர விளையாட்டுக்குப் பிறகு டபுள் உற்சாகத்துடன் வேலையில் ஈடுபட முடியும். அது தவிர, நாங்கள் ஊழியர்களின் நலனில் அக்கறை கொண்டுள்ளோம் என்பதையும் தெரிந்துகொள்வார்களே" என்கின்றனர் நிறுவனத்தினர்.


• மீரா

பெங்களூர்வாசிகள் ஏதோ உற்சாக பானம் குடித்தது போல் முகம் முழுக்க

மலர்ச்சியுடன் ஆபீஸ் போவது இதனால் தானா?

**பெ**ங்களூரில் கர்நாடகா பத்ரிகா அகாதமி விருது வழங்கப்பட்டது. மூத்த பத்திரிகையாளரும், இந்திராகாந்தியின் மீடியா அட்வைஸருமான ஹெச்.வொய். சாரதா பிரசாதிற்கு முதல்வர் எஸ்.எம். க்ருஷ்ணா வழங்கினார். சாரதா பிரசாத் மூன்று பிரதமர்களுக்கு மீடியா ஆலோசகராக பணிபுரிந்திருக்கிறார். "இந்திராகாந்தியின் சுறுசுறுப்புக்கும் வேகத்துக்கும் ஈடுகொடுப்பது சிரமம். ஒரு நாளில் எத்தனை ஃபைல்களைப் பார்ப்பார், எத்தனை பேரைச் சந்திப்பார், எத்தனை போன் கால்கள் பேசுவார் என்று சொல்லுவது மிகக் கஷ்டம். மொரார்ஜி தேசாய்


• பான்ஸர் உற்சாகம்

வெளிப்படையாகப் பேசும் மனிதர். ராஜீவ் காந்தி பல சீர்திருத்தங்களைக் கொண்டு வர நினைத்தார். அரசியல் அனுபவங்கள் இல்லாது போனாலும் நிர்வாகத் திறமை கொண்டவர். ஒரே நேரத்தில் பல வேலைகளில் காலை வைப்பது அவரது ஸ்டைல். பிரதமர் வாஜ்பாய் பதினைந்து வருடம் இளையவராக இருந்தால் இன்னும் சிறப்பாகச் செயல்படலாம்" என்கிறார் இந்தப் பழுத்த பத்திரிகையாளர்!

**க**ல்லூரியில் விரிவுரையாளர் வேலை பார்த்துக் கொண்டே பார்ட் டைமாக சம்பாதிக்க அதிகமாக மெனக்கெட வேண்டாம். தூக்க மருந்து கலந்த பிஸ்கட், காப்பி, கூல் டிரிங்க்ஸ் கொடுத்து சக பயணிகள் தூங்கியவுடன் அவர்களுடைய நகைகள், உடைமைகள் எடுத்துக் கொண்டு கம்பி நீட்ட வேண்டியதுதான்... சிம்பிள்! பொருளாதாரத்தில் முதுகலை பட்டம் வாங்கிய ரவிகுமார் ஸ்ரீரங்கபட்டணத்தில் வேலை பார்த்திருக்கிறார். ஊதியம் போதவில்லை. தமிழ்நாட்டிலிருந்து வரும் பஸ்களாகப் பார்த்து ஏறி விடுவாராம். அவர்களுடன் நைச்சியமாகப் பேசி, நட்பை வளர்த்துக் கொண்டு பிறகு கைவரிசையைக் காண்பிப்பாராம். ஆனால் அந்தக் கைவரிசையைப் பார்க்கத்தான் கொடுப்பினையில்லாமல் சொப்பன லோகத்தில் சஞ்சரிப்பார்களாம் சக பயணிகள்!

## ‘கோத்திகளு லார் கோத்திகளு’


• பத்ரிகா விருது


• ஆபிஸில் விளையாட்டு

சிறந்த திரைப்படமாகத் தேர்வு செய்யப்பட்டிருக்கிறது. சிறந்த கன்னட நடிகைக்கான விருது பிரேமாவுக்கு - 'கனகரா' என்ற படத்திற்காகவும், சிறந்த நடிகராக சுதீப் - 'ஹுச்சா' படத்திற்காகவும் என அறிவிக்கப்பட்டிருக்கிறது. "வெள்ளிக்கிழமை எனக்கு அதிர்ஷ்டமான நாள். கிரிக்கெட் வீரனான என் தம்பி லீக் மாட்சில் ஏழு விக்கெட்டுகள் எடுத்தார். என் சகோதரி இந்துவுக்குச் சம்பள உயர்வு கிடைத்துள்ளது. எனக்குச் சிறந்த நடிகை விருது... அப்பா...! கடந்த ஐந்து வருடமாக நானும் அவார்டுக்காக காத்திருந்தேன். அது இப்போதுதான் நிறைவேறியிருக்கு" என குதூகலிக்கிறார் பிரேமா.

— லதா சேகர்

பீக் அவர் டிராபிக்கில் மாட்டிக் கொண்டு, 'உஸ்... அப்பாடா!' என்று வீடு திரும்புகிறான் சுந்தர். மனைவி ஹேமா, ஹவுஸ் வொஃய்ப் ('ஃபாரஸ்ட் வொஃய்ப்'னு யாராவது இருக்காங்களா?' என்று கேட்காதீர்கள். 'நாட் எம்ப்ளாய்ட்' என்பதை இப்படித்தானே சொல்கிறோம்.)

செருப்பைக் கழற்றி விட்டு, வேட்டி அல்லது லுங்கிக்கு மாறும் சுந்தர், (சில சமயம் ஷூ, டை கழற்றாமலும்தான்) மனைவி இருக்கிறாளா என்று ஒரு பார்வை பார்த்துக் கொள்கிறான். அவளது நடமாட்டம் உறுதியானதும் நேராக... நேராக... அதேதான்; டீ.வி முன் உட்கார்ந்து கொள்கிறான்.

"டீ தரட்டுமா?" ஹேமாவுக்கு, தான் அணிந்திருக்கும் புதுப் புடைவை (நைட்டி?) பற்றி கணவனிடமிருந்து ஏதாவது விசேஷ குறிப்பு வருமா என்றறிய ஆசை!

ஆனால் சுந்தர் அதையெல்லாம் கவனித்தானில்லை. அதான் கையில் ரிமோட் இருக்கிறதே.

ஹேமாவின் சீட்டுக்கட்டு மனசுக்குள் முதல் சீட்டு 'லொட்' என்று சரிந்து விழுகிறது.

"அடே! லவங்க டீயா? கமகமனு இருக்கே"... கண்டிப்பாக சுந்தர் பாராட்டுவான் என்ற எதிர்பார்ப்புடன் அவனையே பார்க்கிறாள்.

ஊஹூம். அந்தப் பக்கம்

'இரு...மனசே!' தம்பிடித்து, அடக்கிவிட்டு, அடுத்த அஸ்திரத்தைப் ப்ரயோகிக்கிறாள்.

"இன்னிக்கு டிபன் ஏதும் பண்ணலைங்க"... ரொம்ப சாமர்த்தியமாய், காய்களை நகர்த்துவதாக ஹேமாவுக்கு நினைப்பு. 'ஏன் பண்ணலை?' என்று



# ஆகாம்-எவாள்

## ஜீதி தியரி

எந்த ரியாக்ஷனும் இல்லை.

"ஏங்க... இன்னிக்கு டீலே சம்திங் ஸ்பெஷல்... என்ன கண்டு பிடியுங்க."

"என்ன?"

"லவங்க டீ!"

"ஓ...அப்படியா?" ரொம்ப சாதாரணமாகக் கேட்கவும், ஹேமாவுக்கு ஏமாற்ற எரிச்சல். ஆசை கோபுரத்தில் இன்னொரு சீட்டு, 'விழட்டுமா?' என்று கேட்டுத் தள்ளாடுகிறது.

அவன் கேட்பான்; உடனே வேலைக்காரம்மா அஞ்சலை திடீரென்று மட்டம் போட்டுவிட்டதைச் சொல்லி, அனுதாப அலையில் மிதக்கலாம் என்ற திட்டம். பாவம், சுந்தருக்கு அவ்வளவெல்லாம்

சூட்சுமமில்லை.

'உம்பரவாயில்லை.' அவன் டீ.வி. வால்யூமை

1



அதிகரிக்கவும், ஹேமாவுக்குச் சப்பென்று போய்விட்டது... ஆனாலும் விட்டால் தானே?"

"அஞ்சலையோட பொண்ணுக்கு உடம்பு சரியில்லையாம். வெள்ளிக்கிழமையும் அதுவுமா டிமிக்கி கொடுத்துட்டா. பாத்திரம் தேய்ச்சு, வீடு பெருக்கி சுத்தம் செஞ்சு, இரண்டு வாளி துணி துவைச்சு... மார்க்கெட் போயிட்டு வந்து... நீங்க வேறே பாங்குக்குப் போகச் சொல்லிட்டீங்க... அங்கே ரொம்ப லேட் பண்ணிட்டாங்க."

"ஸாரிடா...பாவம் நீ... ரொம்ப கஷ்டப்பட்டுட்டே... வீட்டு வேலையும் செஞ்சு, வெளி வேலையும் சமாளிக்கிறே... இப்போ ஏதாவது ஹெல்ப் பண்ணட்டுமா?" என்று பதினைந்து வார்த்தைகளுக்கு மிகாமல் பேசியிருந்தான்னு வைச்சுக்குங்க...

அவ்வளவுதான்! ஆறு பாட்டில் ஸலைன் ஏற்றிய சுறுசுறுப்போடு, கணவனைத் தலைக்கு மேல் ஏற்றிக் கொண்டு, தனக்குத் தெரிந்த தாளத்தில் கரகாட்டமே ஆடியிருப்பாள் ஹேமா!

ஆனால் சுந்தர் என்ன சத்புருஷனா! சாதாரண சூரியக் குஞ்சுதானே?

மனைவி சிரமப்பட்டிருக்கிறாள் என்பது தெரிகிறது. அவளைச் சுகமாய் வைத்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும் தெரிகிறது. ஆறுதலாய் இரண்டு வார்த்தை சொல்லி, ஹேமாவுக்குப் பன்னீர் தெளித்திருக்கலாம்தான். ஆனால் ஈகோ தடுக்கிறது. குற்ற உணர்வும் குறுகுறுப்பும் வேறு மாதிரி வார்த்தைகளைத் தடாலெனக் கொட்டுகிறது.

"ஆமாண்டீ... அறுநூறு சதுர அடி வீட்டைப் பெருக்கி, துடைக்கிறது பெரிய விஷயமா...? இப்படி அலுத்துக்கறே... குனிஞ்சு நிமிர்ந்து வேலை செய்... அப்பவாவது உடம்பு குறையுதான்னு பார்ப்போம்..." ஹேமாவின் மனசுக்குள் அடித்த சூறாவளியில், சீட்டுக் கட்டு கோபுரம் எகிறிப் போகிறது.

தன்னுடைய சின்சியர் வேலைக்கு, பாராட்டு கூட தேவையில்லை; அட்லீஸ்ட் சின்ன அங்கீகாரம் கூட கிடைக்கவில்லையே! இதுலே கிண்டல் வேறே! சே!

இதெல்லாம் ஒரு புருஷனா... அவனவன்

அனுராதா சேகர்



குதிரைமேல் வந்தவன் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதை பூங்குழலி அறிந்தாள். கையில் தான் தேங்காய் மூடி வைத்துக் கொண்டு, பல்லினால் சுரண்டித் தின்று கொண்டிருப்பதையும் நினைத்தாள். உடனே எங்கிருந்தோ ஒரு நாண உணர்ச்சி வந்து அவளைப் பற்றிக் கொண்டது. பிராகார மதில் சுவரிலிருந்து வெளியே வெண் மணலில் குதித்தாள். மதில் சுவர் ஓரமாக ஓடத் தொடங்கினாள்.

அதைப் பார்த்த உடனே வந்தியத்தேவனுக்கும் குதிரை மேலிருந்து குதிக்கத் தோன்றியது. குதித்துப் பூங்குழலியைப் பின்தொடர்ந்து பிடிப்பதற்கு ஓட வேண்டும் என்று தோன்றியது. அவ்வாறே அவளைத் துரத்திக் கொண்டு ஓடினான்.

இந்த அர்த்தமற்ற செயலின் காரணகாரியங்களை யார் கண்டு பிடித்துச் சொல்ல முடியும்? ஆயிரம் பதினாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வந்த மனித குலத்தின் பரம்பரை இயற்கைதான் பூங்குழலியை ஓடச் செய்தது என்றும், அதுவே வந்தியத் தேவனைத் துரத்திப் பிடிக்கச் செய்தது என்றும் சொல்ல வேண்டியதுதான்.

**— அமரர் கல்கியின் 'பொன்னியின் செல்வன்'**
**(இரண்டாம் பாகம் — முதல் அத்தியாயம்)**

சோம்பேறி, உதவாக்கரை பொண்டாட்டியையெல்லாம் எப்படித் தாங்கறான். என்ன ஒரு திமிர்..ஹா..நான் அவ்வளவு மட்டமா போயிட்டனா?" மடமடவென்று மனசுக்குள் தகித்த ஆத்திரமெல்லாம் லாவா குழம்பாகி வார்த்தைகளாக வெளியே கொட்ட, சுந்தருக்கு எரிச்சல்.

"சே! உன்னோட இதே ரோதனையா போச்சு! வீட்டுக்கு வந்தாலே நிம்மதி கிடையாது" அவன் கோபித்துக் கொண்டு வெளி நடப்புச் செய்ய, ஹேமா இன்னும் நொறுங்கிப் போகிறாள்.

'இந்தப் பெண்களுக்கு என்ன தான் வேண்டும்?' - ஆண்களுக்குக் குழப்பம்.

'இந்த ஆம்பிளைங்க, பெண்களைப் புரிஞ்சுக்கவே மாட்டாங்களா?'

இது பெண்களின் தவிப்பு.

வழிவழியாக ஆண்கள் குழம்புவதும், பெண்கள் தவிப்பதும், நடந்து கொண்டுதான் இருக்கிறது. ஆணின் இயல்புகள் வேறு பெண்ணின் இயல்புகளும் எதிர்பார்ப்புகளும் வேறு.. உடல் ரீதியாக, மனரீதியாக, உணர்வு ரீதியாக ஆதாம் வேறு, ஏவாள் வேறு...

பூங்குழலியின் நாணமும் வந்தியத்தேவனின் ஓட்டமும்போல் (காண்க பெட்டிச் செய்தி) காலங்காலமாக ஓடுவதும் துரத்துவதும்... இன்னும் விழுவதும் எழுவதும் அழுவதும் சிரிப்பதுமாக உலகை அழகுபடுத்தி மனித குலத்தைத் தழைக்கச் செய்து வருகிறது ஆண் — பெண் உறவு.

இந்த சமத்துவ யுகத்தில், இயற்கையின் அடிப்படை வேற்றுமைகளை மறக்கிறோமா? மறைக்கிறோமா? அனுபவ ரீதியாக இந்தத் தொடர் உங்களுடன் பேசும்.

(அடுத்த இதழில்)

# கதையை மாத்திட்டியே தலைவா!



''பதவிங்கிறது தலைவருக்குத் தோளுல கிடக்கிற துண்டு மாதிரி.''

''தூக்கி எறிஞ்சிட்டுப் போயிட்டே இருப்பாரா?''

''இல்லை... இல்லை... ஈசியா பணம் குடுத்து வாங்கிடுவாரு...!''

- வி. சகிதா முருகன்

''தலைவர் உண்ணாவிரதத்தை திடீர்னு முடிச்சுக்கிட்டாரே, கோரிக்கை நிறைவேறிடுச்சா...?''

''ஊஹூம், பக்கத்து ஹோட்டலிலிருந்து கிளம்பிய மீன் குழம்பு வாசனை மூக்கிலேறிடுச்சு!''

- எஸ். மோகன்





''தலைவா, ஒரு தொண்டன் திடீருன்னு தீ குளிச்சுட்டான்.''

''எதுக்காக? எனக்கோ, கட்சிக்கோ ஒரு பிரச்னையும் இப்ப இல்லையே?''

''அவனுக்குச் சொந்தத்தில் ஏகப்பட்ட பிரச்னைகளாம்!''

- வி. சகிதா முருகன்

''நான் ஒரு இயற்கைப் பிரியன்!''

''மின்சார விசிறியில் பிளேடைக் கழட்டிட்டு அதுல பனை ஓலை விசிறியைக் கட்டி வச்சிருக்கிறப்பவே நினைச்சேன்!''

- பர்வதவர்த்தினி











# முழக்கத் தெரிந்த நடிகர் யார்?

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? ரஜினி, விஜயகாந்த்; விஜய், அஜித், அனைவருக்குமே அரசியல் ஆசை இருக்கும்போல் தெரிகிறதே?

! உங்கள் பட்டியலில் பலரை விட்டுவிட்டீர்கள்; போகட்டும். ஒரு நடிகர் அரசியலில் இறங்க விரும்புவதில் தவறுமில்லை; அதற்குத் தடையுமில்லை. ஆனால் நடிப்புத் திறன், சினிமா புகழைப் பயன்படுத்தி அரசியலுக்குத் தகுதியற்ற ஒருவர் வந்து பதவியைப் பிடிக்கக் கூடாது. இதை மக்கள் அனுமதிக்கவும் கூடாது. இதில் மக்கள் ஏமாந்தால் கொள்ளிக்கட்டையை எடுத்து முதுகைச் சொறிந்து கொண்ட கதை தான்.

● ஜோதிகுமாரி, சேலம் - 6

? தெலுங்கு தேசத்துக்கு சபாநாயகர் பதவி இல்லையாமே?

! வேண்டாம் என்று அக்கட்சியே முடிவு செய்து அந்தந்த பிரச்னையைப் பொறுத்து பி.ஜே.பிக்கு ஆதரவு என அறிவித்துள்ளது. எஞ்சியிருக்கும் பதவிக் காலத்தில் மத்திய அரசு மிக எச்சரிக்கையாய் இருந்தாக வேண்டும்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? 'தி.மு.க. - அ.தி.மு.க. அல்லாத கட்சிகள் ரஜினியுடன் இணைந்து மூன்றாவது அணி அமைத்தால் 2006ல் ஆட்சியைப் பிடிக்கலாம்' என்று ப.சிதம்பரம் கூறியிருக்கிறாரே...?

! ரஜினி சம்மதித்தால் நல்லது! ஆனால் ரஜினியை மட்டும் நம்பி திட்டத்தில் இறங்காமல் கட்சிகளின் தலைமையைப் பலப்படுத்த திட்டமிட்டு உழைப்பதுதான் புத்திசாலித்தனம். அடிப்படையில் சோனியாவின் முடிவு சரியானதாக அமைய வேண்டும். அவர் கேட்பார் பேச்சைக் கேட்டு, நாடாளுமன்றத் தேர்தல் நெருங்குகிற நிலையில் மறுபடி முதுகு சவாரிக்குத் தயாராகி விடுவார்!

● பா. ஜெயக்குமார், வந்தவாசி ★

? குஜராத் கண்டனத் தீர்மான விவாதத்தின்போது, 'காங்கிரஸ் ஆட்சிகளில்தான் கலவரங்கள் அதிகமாக நடந்தன' என ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் பேசினாரே.... ஒரு தவறுக்கு மற்றொரு தவறு எவ்வாறு பிராயச்சித்தமாகும்?

! அந்த அறிவு இருந்திருந்தால் பாப்ரி மஸ்ஜித் தகர்ப்பே நிகழ்ந்திராதே! இன்று குஜராத் பற்றி எரியக் காரணமான அயோத்தி பிரச்னை இத்தனை தூரத்துக்கு வந்திராதே!

● கு. கணேசன், பனங்கோட்டூர்

? 'கண்டனத் தீர்மானத்தின் மீதான வாக்கெடுப்பில் தெலுங்கு தேசமும் தேசிய மாநாடு கட்சியும் கலந்து கொள்ளாததே எங்

## நீங்கள் கேட்டவை - தராசு



● டூப்பர் ஜோக்!


• மூன்றாமணி முனைப்பு!


• இரட்டை வெற்றி!


• நடிப்பும் பிழைப்பும்!

களுக்குக் கிடைத்த வெற்றி' என சோனியா காந்தி பெருமிதப்படுவது பற்றி...?

! சோனியாவின் செயல்பாடுகளில் அரசியல் ஆதாயம் தேடும் நோக்கமில்லை என்று சொல்லிவிட முடியாது. எனினும், ராஜ்ய சபாவில் கண்டனத் தீர்மானத்தை எதிர்க்காமல் பி.ஜே.பி. ஏற்றுக் கொண்டதேகூட சோனியாவின் வெற்றிதான்!

● கே. வெங்கடேசன், வேலூர்-4

? ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் கிடைத்த மிகப் பெரிய பொக்கிஷம் எது...?

! வாழ்க்கையேதான்! அதை உணர்ந்து விட்டால், எதிர்ப்படும் எல்லாமே அழகான, பொக்கிஷமான அனுபவங்களாக மாறிவிடும்.

● சி.எஸ்.ராஜமழை, சின்னமனூர்

? 'தமிழகத்தில் பெண்களுக்கென்று தனி நூலகம் இல்லை. தேவைப்பட்டால் அரசு பரிசீலிக்கும்' என்று சட்டசபையில் கல்வி அமைச்சர் தம்பிதுரை தெரிவித்திருப்பது...?

! தமிழ் சினிமாவுக்கு இது நஷ்டம். நாயகனும் நாயகியும் நூலகத்தில் சந்தித்துக் காதல் வளர்ப்பதைக் காட்ட முடியாதே!

● பூஜா, வேலூர் - 1

? சின்னத்திரை சீரியலுக்கான விளம்பரங்கள் ஏன் இப்படி மனம் வருத்தும்படி அமைகின்றன...

! காவியாஞ்சலி தொடருக்கான விளம்பரத்தில் சிவா இறந்து விட்டதாக நாளிதழில் பெரிய விளம்பரம் செய்யப்போக, அவரது உறவினர்களேகூட பதறியடித்துக் கொண்டு ஃபோன் செய்தார்களாம். இது போன்ற அநாகரிக விளம்பரங்கள் தவிர்க்கப்படுவதுதான் நல்லது.

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி

? ஈழத்தமிழர் தலையில் மண் அள்ளிப் போடாதீர்கள் என்கிறாரே பாரதிராஜா?

! ஈழத் தமிழர்களின் நம்பிக்கை அங்கு அமைதி திரும்ப வேண்டும்; நல்லாட்சி மலர வேண்டும் என்பதுதான். இதற்கு ஒரு பெரிய இடையூறு, இங்கே பலர் தங்களைத் தாங்களே ஈழத் தமிழரின் தலைவராகப் பாவித்துக் கொண்டு தான்தோன்றித்தனமாகப் பேசிக் கொண்டிருப்பதுதான். இதை பாரதிராஜா தவிர்க்க நினைத்தால் வரவேற்க வேண்டியதே!

● ஆர்.அப்துல் சலாம், திருச்சி - 21 ❒

? மோடி ராஜினாமா செய்துவிட்டால் மட்டும் குஜராத் பிரச்னைக்குத் தீர்வு ஏற்பட்டுவிடுமா...?

! முதல்வர்தானே அந்த மாநிலத்தின் தலைமைப் பிரதிநிதி. அவர் விலகும்போது, அச்செயல் நீந்த தவறுகளுக்குப் பொறுப்பு ஏற்பதாக மட்டுமல்ல.. காயங்களுக்கு மருந்தாகவும் அமையும். இது முதல் படி; தவறுகள் மீண்டும் நடக்காமல் பார்த்துக் கொள்வது இரண்டாம் கட்டம்.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? எனக்குப் பதவி ஆசை இல்லை என்று நரேந்திர மோடி கூறியிருப்பது நகைச் சுவைதானே?

! அதைவிட நகைச்சுவை கேளுங்க : கில் குஜராத்துக்கு ஆலோசகராக நியமிக்கப்பட்டது குறித்துத் தமக்கு ஏதும் தெரியாது என முதலில் சொன்னவர், அவரைப் பார்த்ததும் 'நானே உங்களை அனுப்பும்படி மத்திய அரசைக் கேட்கலாம் என நினைத்தேன்...!' என்று 'ஓ' போட்டாரே...! அடேயப்பா!

● பொன்விழி, அன்னூர்

? பிழைக்கத் தெரிந்த நடிகர் யார்...?

! சுசுவாமி!

● ந. ஐயப்பன், காவல்கிணறுபுதூர்

? மனிதப் பண்புகளில் தலையாயது எது...?

! அன்பு. அது இருந்தால் மற்றவை சுலபமாய்க் கைவரும். அது இல்லாவிட்டால் மற்றவை இருந்தும் பயனில்லை.

● ஜி.ஜி. சரவணன், மயிலாடுதுறை

? தி.மு.க. ஆட்சியின்போது நடந்த குற்றங்களையும் அ.தி.மு.க. ஆட்சியின்போது நடந்த குற்றங்களையும் உள்துறைச் செயலர் நரேஷ் குப்தா ஒப்பிட்டுப் பேசியிருக்கிறாரே...?

!அரசியல்வாதிகளின் கையிலிருந்து ஜால்ரா அதிகாரிகளின் கைக்கும் மாறுவதை இந்த அ.தி.மு.க. ஆட்சியில் கண்டு வியந்து விசனிக்கலாம்.

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
ஆர்.அப்துல் சலாம்,
பிளாட் எண்.ஏ37, மேடம் கியூரி தெரு,
சேஷாயி நகர், கே.கே.நகர்,
திருச்சி - 620 021.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
பா. ஜெயக்குமார்,
45, புதுத் தெரு, வந்தவாசி - 604 408.

**கடந்து வந்த பாதை குறித்து நிறைவு இருக்கிறதா?**

"என்னோடு வந்தால் பதவிகள் கிடைக்காது; துன்பத்தையும் துயரத்தையும் தாங்கக்கூடியவர்கள் மட்டும் என்னுடன் வாருங்கள். மற்றவர்கள் விலகி நில்லுங்கள்" என்று கட்சி துவங்கும்போது சொன்னேன். அதே போல் கொள்கைக் குன்றுகளாக, தியாகச் சீலர்களாக என்னுடன் பெருவாரியாக இணைந்தார்கள். இந்த இடைக்காலத்தில், இயக்கம் பல தோல்விகளைக் கண்ட போதும் ஒரு சிலரைத் தவிர தொண்டர்களும் தளபதிகளும் உறுதியாக துணைநிற்கிறார்கள். வெள்ளத்தில் எதிர் நீச்சல் போடுகிறோம். ஆனால் கரை சேரவில்லை. உடல் வலிவும், மன வலிமையும் இருக்கிறது. நான் மட்டுமல்ல, என்னோடு இருப்பவர்களையும் கரை சேர்ப்பேன் என்று தன்னம்பிக்கையோடு பயணத்தைத் தொடர்கிறேன்.

**மாநிலக் கட்சியாக இருந்தும், மாநில சட்டசபையில் உங்களால் இதுவரை இடம்பிடிக்க முடியவில்லை; ஆனால் பாராளுமன்றத்தில் இடம்பெற்று விட்டீர்கள். இதை ஒரு பின்னடைவாகக் கருதுகிறீர்களா?**

கட்சி துவங்கிய பதினைந்தே நாட்களில நடந்த பெருந்துறை இடைத் தேர்தலில் எல்லோரும் ஆச்சர்யப்படத்தக்க விதத்தில், பம்பரச் சின்னத்தில் நின்று 23000 வாக்குகள் பெற்றோம். மயிலாப்பூர் இடைத் தேர்தலில் 11000 வாக்குகள் பெற்றோம். எங்களுக்கு தமிழக மக்களிடையில் கிடைத்த வரவேற்பைப் பார்த்து சி.பி.எம். கூட்டணி சேர முன்வந்தது. 1996 தேர்தலில், எங்கள் முத்திரையை அழுத்தமாகப் பதிக்கவிருந்த சூழலில்தான் ரஜினி ஆதரவுடன் வந்த தி.மு.க. த.மா.கா. அலையில் அடித்துச் செல்லப்பட்டோம். 'மலைச்சரிவுகளில் வெள்ளம் பாய்ந்து வரும் போது சந்தன மரங்களும் சாய்வதுண்டு' என்று அப்போது நான் சொன்னேன். ஆனால் அதற்குப் பிறகு நடந்த உள்ளாட்சித் தேர்தல்களில் தமிழகம் முழுவதும் கணிசமான அளவில் வென்றோம். 1998 மக்களவைத் தேர்தலில் வாஜ்பாய் தலைமையை அதி.மு.க. ஏற்றதால் அதனுடன் கூட்டணி அமைத்து மக்களவையில் நுழைந்தோம். 1999ம் ஆண்டு தே.ஜ. கூட்டணியில் தி.மு.க. இணைந்த நிலையில், கலைஞருடன் எங்கள் உறவு தொடர்ந்தது. அவரைக் கூப்பிட்டு பல நிகழ்ச்சிகளை நடத்தினோம். 2001 சட்டமன்றத் தேர்தலில் கலைஞர் எங்களுக்குரிய இடங்களைத் தந்து கௌரவமாக நடத்துவார் என்று நம்பினோம். ஆனால் முதுகில் குத்தப்பட்டோம். தனியாகக் களம் கண்டோம். தோற்றோம். ஆனால் துவண்டு போகவில்லை. எந்த சலசலப்புமில்லை. கழகம் கட்டுக்கோப்பாக இருக்கிறது. இப்போது வரும் இடைத்தேர்தல்களில் மக்கள் எங்களுக்கு ஆதரவு கொடுப்பார்கள் என்று நம்புகிறோம். மாநில சட்டசபையில் இதுவரை எங்கள் குரல் ஒலிக்க வாய்ப்பு கிடைக்காதது துரதிர்ஷ்டமே!

# எதிர் நீச்சல் போடுகிறோம்!

ம.தி.மு.க. ஒன்பதாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. இடைத் தேர்தல்களில் ம.தி.மு.க. சார்பில் வேட்பாளர்களை அறிவித்த நிலையில், வைகோவைச் சந்தித்தோம்.

**தி.மு.க., அ.தி.மு.க.வுக்கு எதிராக மூன்றாவது அணி என்றெல்லாம் சொல்கிறார்கள். அப்படியானால் உங்கள் அணி நான்காவது அணியா?**

ஆண்டிபட்டி தேர்தலில் மூன்றாவது அணி எங்கு போயிற்று? பெரியார் - அண்ணா கொள்கைகளிலிருந்து சறுக்கி வருவதால், தி.மு.க. திராவிட இயக்கம் என்று சொல்லிக் கொள்வதற்கான தகுதியை இழந்து வருகிறது. அராஜக அரசியல் நடத்தும் அ.தி.மு.க.வுக்கும் திராவிட இயக்கத்துக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. திரா



களது ஆதரவைப் பெறும் வகையில் கடுமையாக உழைக்கும். தமிழக அரசிய லில் உரிய இடத்தைப் பிடிக்கும்.

**தமிழக சட்டசபையில் புலிகள் பற்றிய தீர்மானத்தை நீங்கள் கடுமையாக எதிர்த்தீர்கள்! இது போன்ற தீர்மானம் கொண்டு வர ஜெயலலிதாவுக்கு அரசியல் நோக்கம் இருக்கிறது என்று கருதுகிறீர்களா?**

நிச்சயமாக! காங்கிரஸுடன் தி.மு.க. கூட்டு சேரப் போகிறது என்ற செய்தி அடிபடுவதால் இது போன்ற தீர்மானத்தின் மூலம் தி.மு.க.வைச் சங்கடப்படுத்தாலம் என்ற எண்ணத்தின் அடிப்படையில் கொண்டு வரப்பட்டது அது. அந்தக் கிடுக்கிப் பிடியில் மாட்டிக் கொணடு 'நடு நிலை' என்றதன் மூலம் தமிழர்களுக்கு நம்பிக்கை துரோகம் செய்துவிட்டார் கலைஞர். இந்தத் தீர்மானத்துக்கு என்ன அவசியம்? உள்துறை அமைச்சர் அத்வானிகூட "இந்த சமயத்தில் இது தேவையா?" என்று என்னிடம் கருத்தைப் பகிர்ந்து கொண்டார். யதார்த்தமாக பார்த்தால்கூட ஸ்ரீலங்கா இறையாண்மையைப் பாதிக்கும் விதத்தில் நாம் ராணுவத்தை அனுப்பி பிரபாகரனைப் பிடித்து வர முடியுமா? நமது பாராளுமன்றத்தைத் தாக்கிய தீவிரவாதிகள் பாகிஸ்தானில் இருக்கிறார்கள். அவர்களைப் பிடித்துவர ராணுவத்தை அனுப்ப வேண்டும் என்று தீர்மானம் போடுவாரா ஜெயலலிதா? உலக வரலாற்றில் பார்த்தால் ஆயுதம் ஏந்திய புரட்சியாளர்கள் பலர் பின் நாட்களில் அரசியல் உடன்பாடுகளை ஏற்று ஜனநாயகப் பாதைக்கு திரும்பியிருக்கிறார்கள். பாலசிங்கத்துக்குச் சிகிச்சை பெற தமிழகத்தில் இடம் கொடுக்க மாட்டோம் என்று சொல்வது மனித நேயமற்ற பேச்சு.

**குஜராத் கண்டனத் தீர்மானத்தின் போது மக்களவையில் நீங்கள் பேசிய பேச்சு சங் பரிவாரின் குரலாகவே ஒலித்ததே?**

என் பேச்சு முழுவதையும் நீங்கள் படித்திருந்தால் இதுபோல சொல்லமாட்டீர்கள். மதவெறியை ஒழித்து மனித நேய பண்புகளை வளர்க்க வேண்டும் என்ற அடிப்படையில்தான் என் பேச்சு அமைந்தது. மத தீவிரவாதம் எந்த பக்கமிருந்து வந்தாலும் அது அடக்கப்பட வேண்டும். தே.ஜ. கூட்

விட இயக்கத்தின் உண்மையான பரிணாமம் நாங்கள்தான். காலம் கனிந்து வருகிறது. தமிழக அரசியலில் ம.தி.மு.க. தனது முக்கியத்துவத்தைப் பெறும் வாய்ப்பு விரைவில் வரும். அப்போது நாங்கள் முதலணியாகக் களம் நிற்போம்.

**எதிர்கால தமிழக அரசியலில் ம.தி.மு.க.வின் நிலைதான் என்ன?**

பந்தா அரசியல் ஒழியணும், சேவை அரசியல் வரணும். இருபத்தைந்தாண்டு பல இயக்கங்கள் போராடியும் முடியாத சேது சமுத்திர திட்டத்துக்கு மத்திய அரசின் ஒப்புதல் பெற்றுத் தந்தது ம.தி.மு.க.தான். இது போல பல நல்ல காரியங்களை எங்களால் செய்ய முடியும். இப்போது மக்கள் அதிருப்தியில் இருக்கிறார்கள். "நமக்கு நல்ல காலம் எப்போது?" என்ற ஏக்கம் ஒவ்வொருவரிடமும் மண்டிக் கிடக்கிறது. வாக்குச் சாவடிக்கு எல்லோரும் வந்து வோட்டுப் போடாததால்தான் அவர்கள் எதிர்பார்க்கும் மாற்றம் தள்ளிப் போகிறது. எனவே முதலில் குறைந்தது 75 சதவீத மக்களாவது ஓட்டுப் போட வர வேண்டும். அப்படி வாக்காளர்கள் திரளும்போது அமைப்பு ரீதியாக பலமாக இருக்கும் எங்கள் இயக்கம், அவர்

டணியின் நான்கு வருட ஆட்சியில் நாட்டில் எந்த மதக்கலவரமும் நடக்கவில்லை. குஜராத் ஓர் எல்லை மாநிலம். அங்கு மத மோதல்கள் வருவதற்குச் சில குறிப்பிடத்தக்க காரணங்கள் இருக்கின்றன. நமது நாட்டின் அமைதியைக் குலைப்பதற்கு நடக்கும் சதியில் சிலர் துணை போவதால்தான் இது போன்ற கலவரங்கள் நடக்கின்றன. ஆனால் காங்கிரஸுக்குக் கலவரத்தை அடக்க வேண்டுமென்ற நோக்கம் இல்லை. அதைப் பயன்படுத்தி எப்படி அரசியல் நடத்தலாம் என்பதே அவர்கள் திட்டம். ஆயிரக்கணக்கான 'சீக்கியர்களை தில்லியில் கொன்று குவித்து உடனே தேர்தல் நடத்திய காங்கிரஸுக்கு குஜராத் பற்றிப் பேசும் தகுதியே இல்லை. என்.டி.ஏ. கூட்டங்களில் சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு வலியுறுத்தியும், மத தீவிரவாதம் வளருமானால் இந்தியா சிதறுண்டு போகும் என்பதைக் குறிப்பிட்டும் பலமுறை பேசியுள்ளேன். 1998ல் பாராளுமன்றத் தேர்தலில் பா.ஜ.க.வோடு கூட்டு வைத்தபோது நெல்லைப் பொதுக்கூட்டத்தில் "மதச் சார்பற்ற முறையில் பா.ஜ.க. இயங்கும்" என அத்வானியிடம் உறுதிமொழி வாங்கியவன் நான்.

**அ.இ.அ.தி.மு.க., பா.ஜ.க.வுடன் நெருங்கி வருகிறது என்பது வெளிப்படை. இந்த நிலையில் தேசிய ஜனநாயக கூட்டணியில் அ.இ.அ.தி.மு.க. அங்கம் வகிக்கும் நிலை வந்தால் ம.தி.மு.க.வின் நிலை என்னவாக இருக்கும்?**

யூகத்தின் அடிப்படையிலான கேள்வி இது. இப்போதிருக்கும் நிலையில் நீங்கள் சொல்வது போல் நடப்பதற்கான சூழல் ஏதும் இருப்பதாக நான் கருதவில்லை.

**அரசியல் நாகரிகப்படி பார்த்தால் வாணியம்பாடியிலும் பா.ஜ.க. உங்களைத்தானே ஆதரித்திருக்க வேண்டும். இப்போது எடுத்துள்ள நிலை அ.தி.மு.க.வுக்கு ஆதரவாகத்தானே முடியும்.**

வாணியம்பாடியில் எங்களுக்கு ஆதரவு தர வேண்டுமென்று பா.ஜ.க.வைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். இங்கும், தில்லியிலும் அதற்கான முயற்சியை எடுப்போம்.

**உங்கள் சிவகாசி தொகுதியில் இலவச மருத்துவ உதவி, ஏழை மாணவ, மாணவிகளுக்கு நுழைவுத் தேர்வுக்கு இலவச பயிற்சி என்று பல சமூகப் பணிகளை சொந்த முயற்சியில் செய்து வருகிறீர்கள். ஆனால் பெரிய தொழிலதிபர்களிடம் லட்சக் கணக்கில் பணத்தைப் பெற்று அவர்களுக்கு தில்லியில் பணி முடித்து அதிலிருந்துதான் இந்த பணிகளைச் செய்கிறீர்கள் என்று உங்கள் தொகுதி வாக்காளர் ஒருவர் எங்களுக்குக் கடிதம் எழுதி இருக்கிறார். இதுதவிர, கேஸ் ஏஜென்ஸி, பெட்ரோல் பங்க் என சொத்து சேர்த்து விட்டதாகவும் சொல்கிறார் அவர்.**

உங்களுக்கு மட்டுமல்ல. இன்னும் சில பத்திரிகைகளுக்கும் இது போன்ற கடிதங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. என்மீது அவதூறுகளை அள்ளித் தெளிப்பதற்காகவே கலைஞர் ஆதரவுடன் தி.மு.க.வில் ஒரு புள்ளி இயங்கி வருகிறார். அவரது வேலைதான் இது. 1996ல் என் சொத்துக் கணக்கை பனகல் பார்க் பொதுக் கூட்டத்தில் அறிவித்தேன். அதன்பிறகு ஊரிலிருந்து பர்மா தேக்கு மரங்களை எடுத்து வந்தும் கடன் வாங்கியும் அண்ணா நகரில் வீடு கட்டினேன். என் மகன்கள் பெயரிலோ, என் தம்பிக்கோ சொந்த வீடு கிடையாது. என் மகன் எம்.பி.ஏ. பட்டதாரி. அவன் தன் முயற்சியில் சில தொழில்களைச் செய்கிறான். அது தவறா? நான் செய்யும் சமூகப் பணிகளுக்கு எனக்கிருக்கும் நல்ல நண்பர்களே பணமும் பொருளுமாக உதவி செய்கிறார்கள். சொந்த லாபத்துக்காக மற்றவர்களுக்கு உதவி செய்வது என்பது என் வரலாற்றில் கிடையாது. இது போன்று சேற்றை வாரி இறைப்பதன் மூலம் வைகோவை முடங்கிப் போகச் செய்ய முடியாது.

சந்திப்பு : ப்ரியன்
படம் : ராஜன்



# சிவகாமியின் சபதம்

## முப்பதாம் அத்தியாயம்

## மாமல்லர் ஊகம்

**அமரர் கல்கி**

பாறைகளின் மீது மோதாமல் தெப்பத்தைத் தீவின் ஓரமாய்ச் செலுத்துவதற்குக் குண்டோதரனும் மாமல்லரும் தங்களாலான மட்டும் முயற்சி செய்தார்கள். ஆனால் தெப்பம் நேரே பாறையில் மோதுவதற்கே போவதுபோல் அதிவேகமாகப் போயிற்று.

தெப்பத்திலிருந்தவர்கள் 'செத்தோம்' என்று தீர்மானித்தார்கள். சுகப்பிரம்மரிஷி அலறிக்கொண்டு பறந்து போய்ப் பாறையில் உட்கார்ந்து கவலையுடன் பார்த்தார்.

தெப்பம் பாறையில் மோதிற்று. பானைகள் ,சடசடவென்று உடைபட்டன. மூங்கில்கள் நறநறவென்று முறிந்தன. தெப்பம் ஒரு சுற்றுச் சுற்றுவிட்டுத் தபதபவென்று தண்ணீரில் மூழ்கிற்று.

பாறையிலே தெப்பம் மோதப் போன சமயத்தில், சிவகாமி 'ஆ' என்று சப்தமிட்டுக் கொண்டு, படகில் எழுந்து நிற்க முயன்றாள். அடுத்தகணத்தில் அவள் தூக்கித் தண்ணீரில் எறியப்பட்டாள்.

கண் முன்னால், ஆயிரம் மின்னலின் ஒளிபோல் பிரகாசமாயிருந்தது. அப்புறம் ஒரே இருள் மயமாயிற்று. காதில் 'ஙொய்' என்ற சப்தம் ஒலித்துக்கொண்டிருந்தது.

வெகுநேரமாகத் தோன்றிய உணர்ச்சியற்ற நிலைக்குப் பிற்பாடு, ஏதோ உணர்ச்சி உண்டாவதுபோல் இருந்தது. கால் விரல்களிலே மணல் தட்டுப்படுவது போல் தோன்றியது. பானைத் தெப்பத்தில் ஏறி வந்தது, தெப்பம் பாறையிலே மோதப் போனது முதலிய விவரங்கள்,

ஒருகணத்தில் ஞாபகத்துக்கு வந்தன. உடனே, தான் தண்ணீருக்குள்ளே மூழ்கியிருப்பதும், மூச்சு விடுவதற்குக் கஷ்டப்படுவதும் உணர்வில் தோன்றியது.

"ஆகா! மாமல்லரும் மூழ்கியிருப்பாரல்லவா? இரண்டு பேரும் சேர்ந்து தானே வெள்ளத்திலே மூழ்கினோம்? ஒருவர் கையை ஒருவர் பிடித்துக்கொண்டு செத்துப் போகக் கூடாதா?" என்ற எண்ணம் மின்னல் போல் உதித்தது. அதேகணத்தில், ஒரு கரம் அவளுடைய கரத்துடன் தட்டுப்பட்டது. மறுகணத்தில் அந்தக் கரம் அவளுடைய கையைப் பற்றியது. ஆகா! அது மாமல்லரின் உறுதியான கரம்தான்; சந்தேகமில்லை. நமது கடைசி மனோரதம் உண்மையிலேயே நிறைவேறப் போகிறதா? சண்டையும், சூழ்ச்சியும், வஞ்சகமும், கொடுமையும் நிறைந்த, இந்த உலகைவிட்டு நீங்கிச் சொர்க்க லோகத்தில் புகும்போது, நானும் மாமல்லரும் கைகோத்துக் கொண்டு போகப் போகிறோமா?

இதென்ன! கால் நன்றாய் ஊன்றுகிறதே! இதோ கூழாங்கற்கள் காலில் தட்டுப்படுகின்றனவே! இதோ திடீரென்று வெளிச்சம்.

தண்ணீர் வரவரக் கீழிறங்கி, கழுத்து மட்டுக்கும் வந்து, மார்பு மட்டுக்கும் வந்து, பிறகு இடுப்பு மட்டுக்கும் வந்துவிட்டது. ஆனால் பிரவாகத்தின் வேகம் மட்டும் குறையவில்லையாதலால் சிவகாமியை உருட்டித் தள்ளப் பார்த்தது. அதோடு, மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் தண்ணீர் கொட்டியபடியால் சிறிதுநேரம் மிக்க வேதனையாயிருந்தது. இவ்வளவு அவஸ்தைகளுக்கிடையில் தன் கரத்தை மாமல்லர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நிற்பதையும் தன்னைப் போலவே ஆயனர், குண்டோதரன், அத்தை எல்லோரும் வெள்ளத்தின் வேகத்தினால் தடுமாறிக் கொண்டிருப்பதையும் சிவகாமி கண்டாள். சுகர்வட்டமிட்டுக் கொண்டு 'கீச்' 'கீச்' என்று கத்துவதையும், ரதி எப்படியோ வெள்ளத்திலிருந்து பிழைத்து, கரை மீதிருந்த பாறையில் தலையை வைத்துக் கொண்டு, ஏற முடியாமல் கால்களை உதைத்துக் கொள்வதையும் பார்த்தாள்.

பாணைத் தெப்பம் மோதிய இடத்தில் வெள்ளத்தின் வேகத்தினால் பெரிய பள்ளம் ஏற்பட்டிருந்தது. ஆனால் அடுத்தாற்போல் சமீபத்திலேயே ஆழம் குறைந்து, தண்ணீர் மேட்டுப்பாங்கான இடத்தில் பரவிப் பரந்து சென்றது. இக் காரணத்தினால் எல்லாரும் தப்பிப் பிழைப்பது சாத்தியமாயிற்று.

எல்லாரும் தட்டுத் தடுமாறிக் கரை ஏறியானதும் "ஐயோ! போச்சே!" என்றான் குண்டோதரன். மற்றவர்கள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தார்கள். "என்ன போய்விட்டது?" என்று ஆயனர் கேட்டதும், "அவல் மூட்டை போச்சே" என்றான்.

சற்று நேரம் எல்லாரும் கொல்லென்று சிரித்தார்கள். பிறகு புருஷர்களும் ஸ்திரீகளும் துணிகளைப் பிழிந்து உலர்த்திக் கட்டிக் கொள்வதற்காக வெவ்வேறு திசை நோக்கிச் சென்றார்கள்.

குண்டோதரனும் குமாரச் சக்கரவர்த்தியும் ஒரு பக்கமாகப் போனபோது, "குண்டோதரா! அவல் மூட்டைப் போனதைப் பற்றி அழுகிறாயே, தெப்பம் போய்விட்டதே! அதற்கு என்ன செய்கிறது" என்று மாமல்லர் கேட்டார்.

"பிரபு! நல்லவேளையாய் இந்தப் பாறைப் பிரதேசத்தில் தெப்பம் மோதிக் கவிழ்ந்ததே என்று எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது. இல்லாவிடில் கடலில் போய்த்தானே சேர வேண்டும்? சமுத்திரத்து அலைகளிலே இந்தப் பாணைத் தெப்பம் என்ன செய்யும்?" என்றான் குண்டோதரன்.

"இருந்தாலும் தெப்பத்தையும் காப்பாற்றியிருக்கலாம். நீ மட்டும் இன்னும் கொஞ்சம் லாகவமாய்க் கழி போட்டிருந்தால்."

"அப்படி அவசியம் வேணுமென்றால் அதோ கிராமம் தெரிகிறதே - அங்கே பாணைகள் சம்பாதித்துத் தெப்பம் கட்டிக் கொள்ளலாம். பிரபு! ஆனால், இப்

போது தெப்பம் எதற்கு? இந்த வெள்ளம் அடங்குகிற வரையில் இங்கேயே இருப்பதுதான் நல்லது!"

"அழகுதான் குண்டோதரா! என் சைனியத்தை எங்கேயோ விட்டு விட்டு நான் இங்கே இருக்க வேண்டும் என்றா சொல்கிறாய்? இவர்களை ஒரு பத்திரமான இடத்தில் சேர்த்த உடனே நாம் இதே தெப்பத்தில் புறப்படலாமென்று எண்ணியிருந்தேன்..."

"புறப்பட்டு என்ன பிரயோஜனம், பிரபு! இந்தப் பெருவெள்ளத்தில் எங்கே போகிறது? என்ன செய்கிறது? சைனியம் தாங்கள் விட்ட இடத்திலேயே இருக்குமா? தென் பெண்ணைக் கரையெல்லாம் இப்போது வெள்ளக் காடாய் இருக்குமே!"

"அதனால்தான் அவசியம் நான் போக வேண்டும். பரஞ்சோதியும் மற்றவர்களும் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்?"

"என்ன நினைப்பார்கள்? தாங்கள் பத்திரமாய் இருக்க வேண்டுமே என்றுதான் நினைப்பார்கள். அவர்களைப் பற்றித் தங்களுக்குச் சிறிதும் கவலை வேண்டியது இல்லை. ஏரி உடைத்துக்கொண்ட செய்தி, அவர்களுக்கு நல்ல சமயத்தில் போய்ச் சேர்ந்திருக்கும்!"

துணிகள் உலர்ந்து கொண்டிருக்கையில் குண்டோதரன் தன்னுடைய வரலாற்றை மாமல்லருக்கு விவரமாகக் கூறினான். நாகநந்தி விஷயமாக, ஆதியில் சக்கரவர்த்திக்குச் சந்தேகம் ஏற்பட்டு, அதன்பேரில் ஆயனர் வீட்டுக்குச் சத்ருக்னர் தன்னைக் காவல் போட்டதில் தொடங்கி, முதல்நாள் இரவு நாகநந்தியைத் தொடர்ந்து, ஏரிக் கரைக்குப் போய், அவருடன் துவந்த யுத்தம் செய்தது வரையில் விவரித்தான். அப்போது ஒரு அதிகாரக் குரல் தன்னை எச்சரித்ததையும், அதன்படியே தான் திரும்பி வந்து, வயோதிக புத்த பிக்ஷுவை வெள்ளத்தில் தள்ளிவிட்டுத் தெப்பத்தைக் கைப்பற்றி கொண்டு வந்ததையும் விவரமாகக் கூறி முடித்தான்.

## அருள்வாக்கு

'டைவர்ஷ'னுக்கு இடமேயில்லாமல், பரிபூர்ண ப்ரம்மசர்ய அநுஷ்டானத்துக்கு எதிரான சபலங்கள் கொஞ்சமும் இல்லாமல், படிப்பே குறி என்று ஒரு முகப் படுத்தித்தான் பண்டைய குருகுலங்கள் வனங்களிலேயே நடந்தன. (அப்போது நாடு நகரம் குறைச்சல், காடுதான் அதிகம் என்பதையும் சொல்ல வேண்டும்) கட்டடத்துக்குள்ளே கட்டிப் போட்டிருக்காமல், இப்படி இயற்கையோடு இயற்கையாகப் பச்சை மரங்களும் ஆற்றுப் பிரவாஹமும் சூழ்ந்த இடங்களில், மான்களோடு விளையாடிக் கொண்டு, மாடு மேய்த்துக் கொண்டு அந்தப் பசங்கள் வாழ்ந்ததும், பரந்த ஆகாசமே கூரையாக உட்கார்ந்துகொண்டு, காயத்ரீ அநுஸந்தானம் பண்ணினதுமே, அவர்களை இப்

குண்டோதரன் கூறியதையெல்லாம் கேட்டு, மகேந்திர பல்லவரின் முன் யோசனையிலும், இராஜதந்திரத்திலும் மாமல்லருக்கு இருந்த மதிப்பு பன்மடங்கு அதிகமாயிற்று. குண்டோதரனுடைய சாமர்த்தியத்தைப் பற்றியும் அவர் மிக வியந்து பாராட்டினார்.

"ஆனால் நீ அந்த வயோதிக பிக்ஷுவைத் தெப்பத்திலிருந்து தள்ளியது மட்டும் எனக்குப் பிடிக்கவில்லை, குண்டோதரா! அந்தப் பாவத்தை ஏன் செய்தாய்?" என்று கேட்டார்.

"அது பாவமில்லை பிரபு! பெரிய புண்ணியம்! அவன் புத்த பிக்ஷுவுமில்லை; ஒன்றுமில்லை. காஞ்சி நகரத் தெற்குக் கோட்டை வாசலில் காவலனாக இருந்தவன். இந்த நாகநந்தியின் வலையில் விழுந்து, தேசத் துரோகியாகி விட்டான். அவனை வெள்ளத்தில் தள்ளியது போதாது. அவன் தலையில் ஒரு கல்லையும் தூக்கிப் போட்டிருக்க வேண்டும்!" என்றான் குண்டோதரன்.

"அப்படியானால், எல்லாவற்றுக்கும் மூலகாரணமான நாகநந்தியை ஏன் உயிரோடு விட்டாய்? அவரையும் கொன்று விடுவதற்கென்ன?" என்று மாமல்லர்

போது போல் செயற்கையான, 'மெகானிக'லான போக்குகளில் போக விடாமல், நல்ல ஜீவ சக்தியுடன் ஒவ்வொரு நிமிஷத்தையும் நிஜமாக வாழ்ந்து ஸந்தோஷிக்கும்படி செய்தது. இதை ரொம்பவும் ச்லாகித்தே டாகூர் ஒரே தோப்பும் துரவுமான இடத்தில் 'ஃபாரஸ்ட் யூனிவர்சிடி' என்பதாகத் தம்முடைய விச்வ பாரதி ஸர்வ கலா சாலையை அமைத்தார். 'யூனிவர்சிடி' என்று சொல்லத் தக்க விதத்தில் ஒரே பெரிய வித்யாசாலை அதிகம் ஏற்படாத ஆதிகாலத்தில்கூட பல ரிஷிகள் பர்ணசாலைகள் அமைத்துக்கொண்டிருந்த வனப் பிரதேசங்களில் ஒவ்வொரு பர்ண சாலையும் ஒரு குருகுலமாக இருந்ததால் இயற்கை அழகு



நிறைந்த விஸ்தாரமான பகுதிகள், அப்படியே ஒட்டு மொத்தமாக வித்யாபூமியாக விளங்கின.

தற்போது டவுன் லைஃப் இருக்கும் சீர்கேடான ஸ்திதியில், எவ்வளவுக்கெவ்வளவு ஊருக்கு வெளியே இருக்க முடியுமோ, அப்படி, கூடிய மட்டும் இயற்கையான சூழ்நிலை பாதிக்கப்படாத விதத்தில், பெரிய கட்டுமானம், நாகரிக உடுப்பு ஆகியன இல்லாமல் நம் ஸ்வதேசிய சாஸ்த்ரங்களுக்கும் கலைகளுக்கும் வித்யாசாலைகள் ஒரு சிலவேனும் அமைக்க வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சாரிய சுவாமிகள்**

---

கேட்டார்.

"பிரபு! எப்படியும் அந்த நாகப்பாம்பைக் கொன்று தீர்த்துவிடுவது என்றுதான் எண்ணியிருந்தேன். ஆனால் 'சண்டையை நிறுத்து!' என்று இருளில் கேட்ட அதிகாரக் குரலின் கட்டளையை மீற முடியவில்லை. ஆகையினால்தான் உடைப்பிலே தள்ளிவிட்டு வந்தேன். யார் கண்டார்கள்? உடைப்பு வெள்ளத்தில் அந்த வேஷதாரி பிக்ஷு, மூழ்கி ஒழிந்து போயிருக்கலாமல்லவா?"

"கூடாது! குண்டோதரா! கூடாது! அப்பேர்ப்பட்ட பாதகனுக்கு அவ்வளவு சுலபமான மரணம் கூடாது. அந்தக் கள்ள பிக்ஷுவால் ஆயனரும் சிவகாமியும் எப்பேர்ப்பட்ட அபாயத்துக்கு உள்ளாகி விட்டார்கள்...!"

"பிரபு! மன்னிக்க வேண்டும். நாகநந்தியைப் பற்றி இவர்களிடம் ஒன்றும் பிரஸ்தாபிக்காமல் இருப்பதே நலம். இவர்களுக்கு விஷயம் ஒன்றும் விளங்காது. வீணில் மனத்துன்பம் அடைவார்கள்."

மாமல்லர் அதை ஒப்புக்கொண்டார். பிறகு, "ஏரிக்கரையில் உனக்குக் கட்டளையிட்ட குரல் யாருடையது என்று தெரியவில்லையா?" என்று கேட்டார்.

"ஊகித்தேன் பிரபு! ஆனால் தங்களிடம் சொல்லத் தைரியம் இல்லை. மன்னிக்க வேண்டும்!" என்றான் குண்டோதரன்.

எச்சரித்தவர் மகேந்திர சக்கரவர்த்தியாயிருக்குமோ என்ற எண்ணம் ஏற்கெனவே அவர் மனத்தில் தோன்றியிருந்தது. குண்டோதரனும் அப்படியே ஊகிக்கிறான் என்று இப்போது தெரிந்தது.

மாமல்லரின் உள்ளத்தில் மகிழ்ச்சி, வெட்கம், வேதனை ஆகிய உணர்ச்சிகள் ஏககாலத்தில் உதயமாயின. குண்டோதரனை எச்சரித்தது மகேந்திர சக்கரவர்த்தியாயிருக்கும் பட்சத்தில் சைனியத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. எல்லோரும் காப்பாற்றப்பட்டிருப்பார்கள். ஆனால், தம்மிடம் நம்பிக்கையில்லாமல்தானே அவர் தொடர்ந்து வந்திருக்க வேண்டும்? அதற்குத் தகுந்தாற்போல் இருக்கிறதல்லவா தம்முடைய காரியமும்? நதிக்கரையிலே சைனியத்தை நிறுத்திவிட்டுத் தனியாக வந்து வெள்ளத்திலேயும் சிக்கிக்கொண்டோமல்லவா? சக்கரவர்த்தியை மறுபடியும் சந்திக்கும்போது, அவர் முகத்தை எவ்விதம் ஏறிட்டுப் பார்ப்பது?

இதற்கு மாறாக, இன்னொருவிதச்

சிந்தனையும் உண்டாயிற்று. எது எப்படி வேணுமானாலும் போகட்டும்! என்ன அபகீர்த்தி, அவமானம் ஏற்பட்டாலும் ஏற்படட்டும். இந்த ஒரு நாள் ஆனந்த வாழ்வுக்காக எதைத்தான் சகித்துக் கொள்ளக்கூடாது? இனி வருங்காலமெல்லாம் இந்த ஒரு தினத்தின் இன்பமயமான வாழ்க்கையை நினைத்து நினைத்துப் பார்த்து மகிழ்ச்சியடையலாம் அல்லவா?

"பிரபு! நடந்தது நடந்துவிட்டது. இனிமேல் நடப்பதைப் பற்றித்தானே யோசிக்க வேண்டும்?" என்று குண்டோதரன் கூறி, மாமல்லரின் சிந்தனையைக் கலைத்தான்.

"வேறு என்ன யோசனை செய்ய இருக்கிறது? வெள்ளத்திலே வந்து மாட்டிக் கொண்டுவிட்டோம். இங்கிருந்து போகும் வழியைத் தேட வேண்டும்..."

"பிரபு! இன்றிரவு தங்குவதைப் பற்றி முதலில் யோசிப்போம். திறந்தவெளியிலே தங்க முடியாதல்லவா? இரவு மழை பிடித்துக்கொண்டால் என்ன செய்கிறது?"

"எங்கே தங்கலாம் என்று நினைக்கிறாய்?"

"அதோ சற்றுத் தூரத்தில் ஒரு கிராமம் தெரிகிறது. அங்கே போய் நான் முதலில் விசாரித்துக் கொண்டு வருகிறேன்."

"அப்படியே செய்" என்றார் மாமல்லர்.

அப்போது "மாமல்லா! மாமல்லா!" என்ற சுகரிஷியின் குரல் கேட்டது. அந்தக் குரல் வந்த வழியே சென்ற மாமல்லர், பாறையருகில் மகிழ மரத்தடியில் சிவகாமி தனியாக உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவள் அருகில் தாமும் உட்கார்ந்தார்.

## முப்பத்தோராம் அத்தியாயம்

## மகிழ மரத்தடியில்

விரைந்து சென்ற வெள்ளத்தின் இரைச்சலைத் தவிர, வேறு சப்தம் எதுவும் சற்று நேரத்துக்கு அங்கு இல்லாமலிருந்தது.

மாமல்லர் கண் கொட்டாமல் சிவகாமியின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். சிவகாமி சிறிது நேரம் தரையைப் பார்ப்பாள்; சிறிது நேரம் வெள்ளத்தையும் வானத்தையும் பார்ப்பாள். இடையிடையே மாமல்லரின் முகத்தாமரையிலும் அவளுடைய இரு விழிகளாகிய கருவண்டுகள் ஒருகணம் மொய்த்து விட்டு, விரைவாக அவ்விடமிருந்து அகன்று சென்றன.

புயலுக்கு முன்னால் ஏற்படும் அசாதாரண அமைதியைப் போன்ற இந்த மௌனத்தைக் கண்டு, சுகரிஷியும்கூட வாய் திறவாமல் சிவகாமியின் முகத்தையும் மாமல்லரின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார். கடைசியில் பொறுமை இழந்தவராய், "இந்த வாய் மூடி மௌனிகளுடன் நமக்கு என்ன சகவாசம்!" என்று சொல்கிறதைப் போல், இறகுகளைச் சட



சடவென்று அடித்துக்கொண்டு, அங்கிருந்து பறந்துசென்றார்.

இனி அங்கிருந்து அகன்றதும் மாமல்லரும் மௌனத்தைக் கலைக்க விரும்பியவராய், ''சிவகாமி என்ன சிந்தனை செய்துகொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார்.

சிவகாமி மாமல்லரின் முகத்தை ஏறிட்டு நோக்கி, ''சற்று முன்னால் தண்ணீரில் மூழ்கினேனே, அப்படியே திரும்பிக் கரை ஏறாமல் வெள்ளத்தோடு போயிருக்கக் கூடாதா - என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றாள்.

''அப்படியானால் நான் உன்னைத் தேடிக்கொண்டு வந்ததெல்லாம் பிசகு என்று ஏற்படுகிறது. ஆனால், இப்போது கூட ஒன்றும் மோசம் போய்விடவில்லையே? பெரு வெள்ளம், இங்கேயிருந்து வெகு சமீபத்தில்தானே ஓடுகிறது!'' என்றார் மாமல்லர்.

''உண்மைதான்! வெள்ளம் வெகு சமீபத்தில் ஓடுகிறது! ஆனால் தானாக வெள்ளத்தில் விழுந்து சாவதற்கு மனம் வருகிறதா? அதுவும் நீங்கள் அருகில் இருக்கையில்'' என்று சிவகாமி கூறியபோது, அவளுடைய கண்களில் கண்ணீர் ததும்பிற்று.

"இது என்ன! ஏதாவது சந்தோஷமாகப் பேசலாம் என்று பார்த்தால், நீ இப்படி ஆரம்பித்து விட்டாயே!'' என்றார் மாமல்லர்.

"பிரபு! இன்றைய தினத்தைப் போல் நான் என்றைக்கும் ஆனந்தமாயிருந்தது கிடையாது. அதனாலேதான் இன்றைக்கே என் வாழ்நாளும் முடிந்திருக்கக்கூடாதா என்று தோன்றுகிறது!"

''அழகாயிருக்கிறது. நீ ஆனந்



தம் கொண்டாடுகிற விதம்" என்றார் நரசிம்மவர்மர்.

"சென்ற ஒரு வருஷகாலமாக நான் அனுபவித்த துன்பத்தையும் வேதனையையும் அறிந்தால் இப்படித் தாங்கள் சொல்ல மாட்டீர்கள்!" என்றாள் சிவகாமி.

"துன்பமா? உனக்கு என்ன துன்பம் நேர்ந்தது? ஏதாவது உடம்பு அசௌகரியமா? ஏன் எனக்குச் சொல்லி அனுப்பவில்லை?"

"உடம்புக்கு ஒன்றுமில்லை, பிரபு! உடம்பு மூன்று வேளையும் சாப்பிட்டுக் கொண்டு, ஆடை ஆபரணங்களை அணிந்துகொண்டு, சௌக்கியமாய்த்தானிருந்தது; எல்லாத் துன்பத்தையும் வேதனையையும் உள்ளந்தான் அனுபவித்தது!"

"ஆஹா! துன்பமும் வேதனையும் உனக்கேன் வர வேண்டும்? யாராவது உன்னை உபத்திரவப்படுத்தினார்களா என்ன? உன் தந்தை ஆயனர் அதைத் தடுக்காமல் என்ன செய்துகொண்டிருந்தார்?"

சிவகாமி எதைக் குறிப்பிட்டு இவ்விதமெல்லாம் பேசுகிறாள் என்பது, பல்லவ குமாரருக்குத் தெரிந்துதான் இருந்தது. எனினும், அவள் வாயினால் சொல்லிக் கேட்பதற்காகவே அவ்விதம் புரிந்து கொள்ளாதவர் போலப் பேசி வந்தார்.

அதற்குச் சிவகாமி, "ஒருவராலும் எனக்கு ஒரு உபத்திரவமும் ஏற்படவில்லை. காட்டிலே வளர்ந்த பேதைப் பெண்ணாகிய எனக்குப் பேசத் தெரியவில்லை. பிரபு! என் மன வேதனைக்கெல்லாம் காரணம், தங்களை மறக்க முடியாமைதான்" என்று கூறிக் கண்களிலிருந்து கலகலவென்று கண்ணீர் வடித்தாள்.

மாமல்லர் ஆர்வம் பொங்கிய கண்களினாலே அவளைப் பார்த்து, "இவ்வளவுதானே, சிவகாமி! அதற்காக இப்போது ஏன் கண்ணீர் விட வேண்டும்? நானுந்தான் உன்னுடைய நினைவினால் எவ்வளவோ வேதனைகளை அனுபவித்தேன்! என்னுடைய ஓலைகளையெல்லாம் நீ படிக்கவில்லையா?"

"தாங்கள் எழுதியிருந்த ஒவ்வொரு எழுத்தையும் மனப்பாடம் செய்திருக்கிறேன். ஒவ்வொரு ஓலையையும் நூறு தடவை ரதிக்குப் படித்துக்காட்டியிருக்கிறேன். ஓலையைப் படிக்கும்போது சந்தோஷமாயிருக்கும். அப்புறம் அவ்வளவுக்கவ்வளவு வேதனை அதிகமாகும்; தங்கள் பேரில் கோபம் கோபமாய் வரும்...!"

"சிவகாமி! உனக்கு என் பேரில் கோபித்துக் கொள்ளும் சௌகரியமாவது இருந்தது. எனக்கு அதுகூட இல்லையல்லவா? யாருடைய துன்பம் அதிகம் என்று சொல்!"

"என் பேரில் தாங்கள் கோபித்துக் கொள்ளவில்லையா? அப்படியானால், அசோகபுரத்துப் புத்தவிஹாரத்தின் வாசலிலே என்னைப் பார்த்துவிட்டு, ஒரு கண நேரங்கூடத் தாமதிக்காமல் போனீர்களே, ஏன்? என் பேரில் இருந்த அன்பினாலேயா?"

"ஆம், சிவகாமி! நான் வரும்வரையில் அரண்ய வீட்டிலேயே இருக்கும்படி சொல்லியிருந்தும் நீங்கள் கிளம்பி வந்து விட்டீர்களே என்று எனக்குச் சிறிது கோபமாய்த்தானிருந்தது. ஆனால் அன்றிரவே புயலையும் மழையையும் பொருட்படுத்தாமல் நான் வரவில்லையா? எவ்வளவு முக்கியமான காரியங்களை விட்டுவிட்டு வந்தேன்? இப்போதுகூட அங்கே என்ன நடந்திருக்கிறதோ என்னவோ? அதையெல்லாம் மறந்துவிட்டு உன்னுடைய பொன்முகத்தில் ஒரு புன்சிரிப்புக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். நீயோ கண்ணீர் விட்டு என்னைக் கலங்க அடிக்கிறாய்!" என்றார் மாமல்லர்.

"எல்லாம் உங்களால் ஏற்பட்ட மாறுதல்தான். இரண்டு மூன்று வருஷத்துக்கு முன்னாலே ஓயாமல் சிரிப்பும் சந்தோஷமுமாய்த்தானிருந்தேன். காட்டில் யதேச்சையாய்த் திரியும் மானைப் போல் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தேன். என் தந்தைகூட என்னை அடிக்கடி 'இப்படிச் சிரிக்காதே, சிவகாமி. பாஞ்சாலி சிரித்துத்தான் பாரதப்போர் வந்தது. பெண்கள் அதிகமாய்ச் சிரிக்கக்கூடாது' என்று எச்சரிப்பதுண்டு. அந்தச் சிரிப்பும்

குதூகலமும் இப்போது எங்கோ போய் விட்டது! நினைத்தால் எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது..."

"சிவகாமி! நீ சிரிப்பும் சந்தோஷமாய் இருந்த காலத்தைப் பற்றிப் பேசு! உன் குழந்தைப் பிராயத்தைப் பற்றிச் சொல்லு. அந்த நாட்களைப் பற்றிக் கேட்க வேணுமென்று எனக்கு ஆவலாயிருக்கிறது!'' என்றார் நரசிம்மவர்மர். மேலும் அவர் வற்புறுத்திக் கேட்டதின் பேரில், சிவகாமி சொல்லத் தொடங்கினாள்:

"நான் சின்னஞ்சிறு பெண்ணாயிருந்த போது, என் தந்தையின் செல்வக் கண் மணியாய் வளர்ந்து வந்தேன். அரண்யம் சூழ்ந்த சிற்ப அரண்மனையிலே நான் ராணியாயிருந்து தனி அரசு செலுத்தினேன். என் தந்தையிடம் சிற்ப வேலை கற்றுக் கொண்ட சீடர்கள் என்னிடம் பயபக்திகள் கொண்ட பிரஜைகளாய் இருந்து வந்தார்கள். கண்ணிமையை அசைத்தால் போதும்! அவ்வளவு பேரும் விரைந்து ஓடிவந்து, 'என்ன பணி?' என்று கேட்பார்கள். அப்போதெல்லாம் எனக்குக் கவலை என்பதே தெரியாது; துன்பம் என்பதையே நான் அறிந்த தில்லை.

"உலகத்திலே எதைப் பார்த்தாலும் எனக்கு வியப்பும் மகிழ்ச்சியுமாயிருக்கும். காலையிலே எழுந்ததும் தகதகவென்று பிரகாசித்துக் கொண்டு உதயமாகும் தங்கச் சூரியனைக் கண்டு ஆனந்திப்பேன். மாமரங்களில் தளிர்த்திருக்கும் இளஞ் சிவப்பு நிறத் தளிர்களைக் கண்டு களிப் படைவேன். மரம் செடி கொடிகளில் புஷ்பிக்கும் விதவிதமான வர்ண மலர்கள், எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சியை அளிப்பதுண்டு. செடி கொடிகளுக்கு மத்தியில் ஆடிக்கொண்டே பறக்கும் பட்டுப் பூச்சிகளை ஓடிப் பிடிக்க முயல்வேன். அவை என் கையில் அகப்படாமல் தப்பித்துக் கொள்ளும்போது, கலீரென்று சிரிப்பேன். மது உண்ட வண்டுகளின் ரீங்காரத்தைக் கேட்கும்போதெல்லாம் எனக்கும் ஆனந்த போதை உண்டாகிவிடும். காட்டுப் பறவைகள் இசைக்கும் கீதத்தைக் கேட்டுப் பரவசமடைவேன்.

"இரவிலே அகண்ட வானத்திலே மின்னும் நட்சத்திரங்களெல்லாம் தங்களுடன் வந்து சேரும்படி என்னைக் கண் சிமிட்டி அழைப்பது போலத் தோன்றும். அவற்றின் அழைப்புக்கிணங்கி நானும் மனோரதத்தில் ஏறி உயர உயரப் பறந்து செல்வேன். சில சமயம் சந்திரனைப் பார்த்தால் எனக்கு அன்னப் பட்சியைப் போலிருக்கும். அதன் மேல் ஏறிக்கொண்டு, நட்சத்திரங்களுக்கிடையே வட்டமிட்டுக் கொண்டிருப்பேன். சில சமயம் நிலாமதியானது ஒரு அழகிய சிறு தோணியைப் போல எனக்குத் தோன்றும். அதன் மேல்ஏறிக்கொண்டு வானமாகிய நீலக் கடலில் மிதந்து வருவேன். வழியிலே தென்படும் நட்சத்திரச் சுடர் மணிகளையெல்லாம் கைநிறைய அள்ளி அள்ளி மடியிலே சேர்த்துக் கட்டிக் கொள்வேன்.

"இப்படிக் குதூகலமாகக் காலம் போய்க் கொண்டிருக்கையில் என் தந்தை எனக்கு நாட்டியக் கலை கற்றுக் கொடுக்க ஆரம்பித்தார். அது முதல் எனக்கு நடனக் கலைப் பைத்தியம் பிடித்துவிட்டது. சதா சர்வகாலமும் நாட்டியமாடிய வண்ணமாகவே இருந்தேன். காட்டுக்குள் விளையாடப் போனால்ஆடிக்கொண்டே போவேன்; தாமரைக் குளத்தில் குளிக்கப் போகையில் என் கால்கள ஜதி போட்டுக் கொண்டே போகும். அந்த நாளில் பூமியும் வானமும் ஒரு பெரிய நடன அரங்கமாக எனக்குக் காட்சி தந்தன.

"தடாகத்தில் வண்ணத் தாமரைகள் தென்றல் காற்றில் அசைந்தாடும்போது, அவை ஆனந்த நடனமாடுவதாகவே எனக்குத் தோன்றும். வான அரங்கத்தில் விண்மீன்கள் விதவிதமான ஜதி பேதங்களுடன் நடனம் புரிந்துகொண்டு திரும்பத் திரும்பச் சுழன்று வருவதாகத் தோன்றும்.

"இப்படி ஆனந்த வெள்ளத்தில் மிதந்த வண்ணமாக என் வாழ்க்கை நடந்து கொண்டிருந்த காலத்திலேதான், தாங்கள் ஒருநாள் தங்கள் தந்தையாருடன் எங்கள் அரண்ய வீட்டுக்கு வந்தீர்கள்...'' என்று கூறிச் சிவகாமி கதையை நிறுத்தினாள்.

(தொடரும்)

# கமல் மகாத்மாவா?

இந்த வாரம், தமிழினத்தை ஒட்டு மொத்தமாக ஈர்த்த மும்பைச் சம்பவம் என்ன என்கிறீர்கள்? சங்கராச்சார்யார் நடத்தி வைத்த சங்கர மட கும்பாபிஷேகம்? ஜெயேந்திரர் தம் திருக்கரங்களாலேயே முதன் முதலாக மஹாலக்ஷ்மிக்கு செய்த கும்பாபிஷேகம்? ம்ஹூம்... சண்முகானந்தாவில், மே தினத்தன்று ஒரு கல்யாணக் களை கட்டியிருந்தது பாருங்கள். புதுப்பித்தபின் அங்கே இப்படி ஒரு தமிழ்க் கூட்டத்தை முதன் முறையாகப் பார்க்க முடிந்தது. எல்லாம் 'கல்யாண மாலை'யின் சிறப்புதான். அமிதாப்புக்காக கே.பி.சி. ஷோவைப் பார்த்தவர்களைப்போல, மோகனின் 'உங்களுக்கு நல்ல மருமகன்/ள் கிடைப்பாங்கம்மா' என்ற அருள்வாக்கில் மோஹித்து, அவருக்காகவே 'கல்யாணமாலை' பார்க்கும் 'ஃபான்களைப்' பூராவும் திரண்டிருந்தது. அந்தத் தேவதூதன் (ஒரே ஒயிட் & ஒயிட்தானே) குறைந்தது நூறு முறை (அத்தனை வரன்கள்!) அதை இங்கு சொல்லியிருப்பார்.

'கல்யாண மாலை' புத்தகத்தின் முதல் பிரதியை வாங்கிக் கொண்ட ஜீ.வி. "இந்த வயசுல நான் எதுக்கு இதைப் பாக்கறேன்னு என் மனைவிக்கு ஒரே சந்தேகம்'' என்றதும் குலுங்கத் தொடங்கிய ஆடியன்ஸ் சூப்பர் ஜோடி நிகழ்ச்சி முடியும் வரை குலுங்கிக் கொண்டேயிருந்தது. 'இல்லறம் சிறக்கக் காரணம் காதலா? கடமையா?' என்ற பட்டிமன்றத்திற்குத் தலைமை வகித்த நடுவர் குஞானசம்பந்தம் தம் இயல்பான நகைச்சுவையால் ஆடியன்சைக் கலக்கிக் கொண்டிருந்தார். கூட்டத்திலிருந்து திடீர்ப் பிரவேசம் செய்த திருமதி கணேஷ், 'வத்தலகுண்டு' புராணத்தில் சம்பந்தமில்லாமல் நேரத்தைக் கடத்த, அதை உணர்த்த, "சரிம்மா... அப்பிடியே அதோட பின் கோடும் சொல்லிடுங்க" என்ற நடுவரின் நையாண்டியில் அரங்கமே அதிர்ந்தது. சொல்லாமல் சொன்னதைப் புரிந்து கொண்டால்தானே?



சொல்லாமல் சொல்வது புரியாமல் போவது பெரிசில்லை. நேரடியாகச் சொன்னாலே சிலர் புரிந்து கொள்ள மாட்டேனென்கிறார்களே?

பாருங்களேன்... ''நான் தான் கமல்ஹாசன். டொராண்டோவில் பஞ்சதந்திர ஷூட்டிங்குக்கு வந்திருக்கிறேன். லாஸ் ஏஞ்சல்சுக்கு ப்ராஸ்தடிக் மேக்கப்புக்குப் போகிறேன்" என்று பளிச்சென்று சொல்லப்பட்ட விஷயத்தை, ''நான் தான் கமால் ஹூசைன், டொராண்டோவில் தந்திரமாக ஷூட் பண்ண வந்திருக்கிறேன். லா.ஏ. சென்று மேக்கப்பால் முகத்தை மாற்றிக் கொள்ளப் போகி



றேன்'' என்று அர்த்தம் பண்ணிக் கொண்டு பயணத் தடை விதித்தால் எப்படி? தாடி மீசை வைத்துக் கொண்டாலே பின்லாடனின் அடியாள் என்று சந்தேகப் பார்வை பார்க்கும் அமெரிக்கக் கஸ்டம்ஸ் அதி

காரிகளை என்ன செய்ய முடியும்? மும்பை பத்திரிகையாளர்களிடம் ''நல்ல வேளை... தென்னாப்பிரிக்காவில் காந்திஜியை ரயிலை விட்டே கீழே தள்ளினார்களே... அந்தளவு மோசமில்லை'' என்று குமுறத்தான் முடியும். சீச்சி... கமல் தம்மை மகாத்மா காந்திக்கு ஒப்பிடுவதாக நீங்கள் வேறு தப்பாகப் புரிந்து கொள்ளாதீர்கள்!

தப்பாகப் புரிந்து கொண்டதால்தானே இன்று ஷாருக்கும் சச்சினும், ஹ்ருத்திக்கும், தங்களுக்குக் கிடைக்க வேண்டிய 2½, 3, 3½ கோடிகளில் பாதிக்குமேல் கோட்டை விட்டுவிட்டு நிற்கிறார்கள். 'ஹோம் -ட்ரேட்' என்ற 'ஆன்லைன்' ட்ரேடிங் கம்பெனி, இந்த நட்சத்திர அந்தஸ்து ஹீரோக்களை வளைத்துப் போட்டு, ''லைஃப் மீன்ஸ் மச் மோர்'' என்ற பஞ்ச் லைனையும் கொடுத்து, ஆஹா ஓஹோ என்று விளம்பரப்படுத்தியபோது, இவர்களுக்கு, யாருக்காக, எதை விளம்பரப்படுத்துகிறோம் என்பதே புரியாமல்தானே இருந்தது? ஷாருக் இருக்கிறார் என்று சச்சினும், இவர்கள் இருவரும் இருக்கிறார்களே என்று ஹ்ருத்திக்கும் இந்த வலையில் வீழ்ந்திருக்கிறார்கள். கடைசியில் இன்று அந்தக் கம்பெனிக்காரர்கள் கோவிந்தா



• 'கல்யாணமாலை'யில்...

வாகி விட்டார்கள். அவர்களுக்குக் கடன் கொடுத்த கோ-ஆபரேடிவ் வங்கிகளின் சேர்மன்கள் 'அம்போ'வாகி விட்டார்கள். இங்கே லேடஸ்ட் ஸ்காம்' இப்போது இதுதான். ஈமெயில் என்பதே இப்போதுதான் நம்மவர்களுக்குப் பரிச்சயமாகி வருகிறது. அதற்குள் 'ஈ ப்ரோக்கிங் ஃபைனான்ஸ்' என்பதெல்லாம் யாருக்கு விளங்கப் போகிறது? ஏதோ இன்று ஈ அடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற அளவில் புரிந்து கொண்டால் சரிதான்.

புரிந்து கொண்டால் சரிதான், அந்நியர்கள் பாலிவுட்டின் மகிமையை! லண்டனிலும் மான்செஸ்டரிலும் மே 3 முதல் 26 வரையில் இந்திப்பட உலகின் பிரதாபங்களை, மும்பை சூழலை உருவாக்கி, விழாவாக்குகிறார்கள் லண்டனின் Selfridges நிறுவனத்தார். யு.எஸ்.ஏ.டுடே, நியூயார்க் டைம்ஸ், ஆமீரை 'இந்தியாவின் டாம் க்ரூயிஸ்' என்று வர்ணித்து, 'ஃபிப்த் அவென்யூவில் டின்னரெல்லாம் கொடுக்கிறது. அட... ஆமீரை, 'உங்களுக்குப் பரிச்சயமான பாடகர்தான்' என்று உளறிக் கொட்டி அறிமுகப்படுத்தியதைக் கண்டுக் காதீங்க... ஏதோ பாலிவுட்டிலும் ஹாலிவுட் அளவு பெரிய ஸ்டார்ஸ் இருக்காங்கன்னு புரிஞ்சுக்கிட்டா சரித்தேன்.

- ஜெயஸ்ரீ ராஜ்











# வந்தாச்சே அடுத்த மஜா!







படம், ஜோக்ஸ் : பிரபுராம்





# பே சேனல் கொள்ளையில் பெரும் பங்கு யாருக்கு?

"அய்யய்யோ சன் டீவி வரலையே! கடவுளே! கே டீவியும் காணோங்க! இந்த சன் நியூஸ் சேனலுக்கு என்னாச்சு?" போன்ற அதிர்ச்சி கலந்த புலம்பல்கள் எப்போது வேண்டுமானாலும் கேட்கலாம். ஒருவேளை, சன் குழுமத் தமிழ்ச் சேனல்கள் திடீரென்று நிறுத்தப்பட்டால், அ.தி.மு.க ஆட்சிதான் அதற்குக் காரணம் என்று நினைப்பது தவறாகி விடக்கூடும்! எப்படியென்று உங்கள் புருவம் கேள்விக்குறியாக வளைகிறதுதானே?

கடந்த மார்ச் மாதம் கார்ட்டூன் நெட் ஒர்க், எச்பிஓ என்று ஏகத்துக்கும் சேனல்கள் திடீரென மறைந்துபோய் பிறகு மர்மமான முறையில் மீண்டும் தெரிய ஆரம்பித்ததை, பொதுமக்கள் மறந்திருக்கமாட்டார்கள். அதிக நேயர்களைக் கொண்ட வெற்றிகரமான பே சேனல் ஒன்றுடன், ஒன்றுக்கும் உதவாத உப்பு சப்பில்லா வேறு பல சேனல்களையும் சேர்த்து 'பேக்கேஜ்' என்று விலையை உயர்த்தி அறிமுகம் செய்தார்கள் சாட்டிலைட் முதலாளிகள். இந்தப் பே சேனல் பேக்கேஜ் கொள்ளை கடகட வென்று பிளேக் வேகத்தில் பரவியதில் ஸ்டார், சோனி, டர்னர், ஜீ, மோடி, ஈஎஸ்பிஎன் என்று எங்கும் பேக்கேஜ் மயம். சிறு கேபிள் ஆபரேட்டர்களின் கழுத்தில் சேனல்காரர்கள் கை வைக்க, ஆபரேட்டர்களோ பே சேனல்களின் கட்டண உயர்வை, கூலாக சந்தாதாரர்களின் மீது சுமத்த, வெடித்தது பூகம்பம்.

இப்போது பழையபடி பே சேனல்கள் திரும்பத் தெரிந்தாலும், பேக்கேஜ் வியாபார உத்திக்குச் சிறு கேபிள் ஆபரேட்டர்களும் சந்தாதாரர்களும் பயந்து பணிந்துவிட்டதால், சன் டீவியும் தனது குடும்பச் சேனல்களை 'சன் நெட்ஒர்க்' என்ற பே சேனல் பேக்கேஜ்

ஆக எந்த நேரத்திலும் அறிவிக்கக்கூடும் என அலறுகிறார்கள் பெயர் சொல்ல விரும்பாத சென்னை மாநகர ஆபரேட்டர்கள் பலரும்.

உண்மையில் சந்தாதாரர்களை ஏமாற்றுவது யார்? சேனல்காரர்களா? மெயின் ஆபரேட்டர்களா? இல்லை சிறு கேபிள் ஆபரேட்டர்களா? ஆராய்ச்சியில் இறங்கினால் தலை இல்லாமல் வால் ஆடுமா என்று மெயின் ஆபரேட்டர்கள் மீது விரலை நீட்டுகிறார்கள் சிறு கேபிள் ஆபரேட்டர்கள்!

**“த**மிழ் மக்களின் முக்கிய பொழுது போக்காகிவிட்டது செயற்கைக்கோள் தொலைக்காட்சி. அதை நம்பி, பல ஆயிரம் சிறு கேபிள் ஆபரேட்டர்களும், அவர்களை நம்பி பல ஆயிரம் படித்த இளைஞர்களும் பிழைத்து வரும் நிலையில், இதை ஒரு சில பகாசுர மெயின் ஆபரேட்டர்கள் தங்கள் ஏக போக சொத்தாக மாற்றி விட்டனர். இது தான் குழப்பம், விலையேற்றம் எல்லாவற்றுக்கும் காரணம். இந்த நிறுவனங்களிடம் நாங்கள் படும்பாடு சொல்லி மாளாது” என்று குமுறுகிறார் திருவல்லிக்கேணியில் ராகவேந்திரா கேபிள் நெட் ஒர்க் நடத்தி வரும் அழகிரி.

ஆரம்பத்தில் டிஷ் ஆன்டனா இல்லாமல் தான் தொழில் நடத்தினோம். சன் டீவி ஆரம்பித்த பிறகு அதையும் இன்ன பிற சேனல்களையும் ஒளிபரப்ப டிஷ் ஆண்டனாக்கள் வாங்கினோம்... தனித்தனியே சிதறிக் கிடந்ததால் நல்ல தரம் தர முடியவில்லை என்பதை உணர்ந்து முதலீடுகளை ஒருங்கிணைத்தோம். ஒரே இடத்தில் பொதுவான கட்டுப்பாட்டு அறை அமைத்து, பதினாறு சேனல்களைக் கொடுத்து, சந்தாதாரர்களைப் பிரித்துக் கொண்டோம். இந்த ஏரியா டிமார்க்கிங் (Area Demarking) எங்கள் தொழிலில் ஒரு திருப்புமுனை என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்த நேரத்தில் தான் முதல் பே சேனலாக ஈஎஸ்பிஎன் அறிமுகம் செய்யப்பட்டது. விளம்பரமில்லாமல் இந்தச் சேனலைத் தருவதாகவும், விளம்பர வருமானம் வரத் தொடங்கியதும் இலவசமாகத் தருவதாகவும் (Free to Air) சொல்லிக் கொண்டுதான் வந்தார்கள். ஆனால் அந்த உறுதிமொழியைக் காற்றில் பறக்க விட்டு விட்டார்கள். ஈ.எஸ்.பி.என் மட்டுமல்ல. டிடி ஸ்போர்ட்ஸ் உள்ளிட்ட முக்கிய விளையாட்டுச் சேனல்கள், நாளை மேட்ச் என்றால் முதல் நாளே சிக்னலை நிறுத்திவிட்டு நிலுவைத் தொகையைக் கட்டச் சொல்வார்கள். பே சேனலுக்கான சிக்னல்களை எங்களுக்குத் தரும் டிகோடர் சாதனத்தின் கட்டுப்பாடு அவர்கள் கையில் இருக்கும்... அந்தச் சாதனத்தை அவர்கள் குறிப்பிடும் விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும்... ஒருவர் ஐந்நூறு இணைப்புகளை மட்டும் நம்பிப் பிழைத்துக் கொண்டிருக்கிறார் என்றால், குறைந்த பட்சம் ஆயிரம் இணைப்புகளுக்குப் பணம் கட்டினால்தான் டிகோடர் தருவோம் என்றார்கள். அத்தனை இணைப்புகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும், தொழில் நடத்த வேண்டிய கட்டணத்தில் ஓரளவு லாபம் கிடைத்தால் போதும் என்று கட்டினோம். இந்த நேரத்தில்தான் பே சேனல்களின் தலைவலிக்கு அருமருந்து என்று நாங்கள் நினைத்த மெயின் கேபிள் ஆபரேட்டர்கள் எம்எஸ்ஓ (Multi system operator) என்று சொல்லிக் கொண்டு அறிமுகமானார்கள். முதலில் அறிமுகமானது 'ஹாத்வே' என்ற நிறுவனம். பே சேனல் கேட்டது போல்



அல்லாமல், 'உங்களிடம் இருக்கும் இணைப்புகளில் எழுபது சதவிகிதத்துக்குக் கட்டணம் செலுத்தினால் போதும்; உங்களுக்குரிய கஷ்டங்கள் எல்லாம் எங்களுக்குத் தெரியும்' என்றார்கள். நாங்களும் தலைவலி விட்டால் போதும் என்று எண்ணி அவர்களின் கட்டுப்பாட்டில் சிக்கி, இன்று திருகு வலியால் துடிக்கிறோம்" என்கிறார் அழகிரி.

"கடந்த தி.மு.க ஆட்சியின்போது அரசியல் வலுவோடு உருவானதுதான் சுமங்கலி கேபிள் விஷன் (எஸ்.சி.வி). களத்தில் ஓரளவு நியாயமாகத் தொழில் செய்து கொண்டிருந்த ஹாத்வே நிறுவனத்தைத் தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டு வந்து விட்டால் பிறகு ஏகபோக ராஜா நாம்தான் என்று முடிவு செய்தது சுமங்கலி. உடன் ஹாத்வேக்கு நெருக்கடி கொடுத்து, அவர்களோடு அதிரடி ஒப்பந்தம் செய்து கொண்டு ஹாத்வேயின் கட்டுப்பாட்டு அறையை இழுத்து மூடச் செய்து தனது கட்டுப்பாட்டு அறையிலிருந்து தொடர்பை வைத்துக் கொள்ளச் செய்தது. எல்லாம் எஸ்.சி.வியின் கட்டுப்பாட்டில் வந்ததும்... எங்களைக் கேட்காமலேயே விலையேற்றம் எங்கள் மீது திணிக்கப்பட்டது. அ.தி.மு.க ஆட்சி ஏற்பட்ட பிறகும் நிலைமை மாறவில்லை. சுமங்கலி – ஹாத்வே இடையேயான ஒப்பந்தம் மீண்டும் புதுப்பிக்கப்பட்டுவிட்டது. இப்போதும் பே சேனல் கட்டண உயர்வைப் பகிர்ந்து கொள்ள எஸ்.சி.வி தயாராக இல்லை" என்று குமுறுகிறார் பெயர் வேண்டாம் என பயப்படும் தி.நகர் பகுதி கேபிள் ஆபரேட்டர் ஒருவர்.

"மெயின் ஆபரேட்டர்களின் பிடியில் சீரழிவது போதாதென்று, ஓசி இணைப்புகள், லோக்கல் ரவுடிகள், லோக்கல் அரசியல் புள்ளிகளுக்கு மாமூல் கொடுத்து அழுகிறோம். தவிர ஓர் இணைப்புக்கு ரூபாய் இருபதை மாநகராட்சிக்குக் கேளிக்கை வரியாகக் கட்டுவதையும் சேர்த்து, கூட்டிக் கழித்துப் பார்த்தால் எங்கள் போராட்டம் புரியும்" என்கிறார் தென் சென்னை ஆபரேட்டர் பாஸ்கரன்.

"இங்கே எஸ்.சி.விக்கு போட்டியாக மெயின் ஆபரேட்டர் தொழில் செய்ய புதிதாக எந்தப் பெரிய தொழில் நிறுவனமும் முன் வரத் தயாராக இல்லை. மத்தியில் தொழில் அமைச்சராக இருக்கும் முரசொலி மாறனைப் பகைத்துக்கொண்டு அவரது மகன்கள் நடத்தும் எஸ்.சி.விக்கு எதிராகச் செயல்பட முடியாது என்று கைவிரித்து விட்டார்கள்" என்கிறார் முகம் காட்ட விரும்பாத மத்திய சென்னையைச் சேர்ந்த கேபிள் ஆபரேட்டர்.

இது பற்றி விசாரிக்க எஸ்.ஸி.வியைப் பலமுறை அணுகியும் பதில் கிடைக்கவில்லை.

"நகராட்சிக்குக் கேளிக்கை வரி செலுத்தும் நடைமுறை அமலுக்கு வந்து இருபது மாதங்களாகிவிட்டன. சென்னையில் மட்டும் பதினைந்து இலட்சம் கேபிள் இணைப்புகள் இருக்கின்றன. ஓர் இணைப்புக்கு மாதம் ஒன்றுக்கு இருபது ரூபாய் வீதம் வைத்துக் கொண்டால் இதுவரை பலகோடி ரூபாய் கிடைத்திருக்க வேண்டும். ஆனால் வசூலாகி இருப்பது வெறும் இருபத்தைந்து இலட்சத்தைத் தாண்டாது என்கிறார்கள் மாநகராட்சி அதிகாரிகள். "இணைப்புகளின் எண்ணிக்கையைக் குறைத்துக் காட்டி, கேளிக்கை வரி செலுத்தாதது கேபிள் ஆபரேட்டர்கள்தான் என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?" என்று கேட்கிறார் சென்னை ராயபுரம் பகுதியில் அறுபது ரூபாய்க்கு முப்பது ஃப்ரீ டு ஏர் சேனல்களைத் தரும் அந்தப் பகுதியின் மாநகராட்சி கவுன்சிலரும், த.மா.க மாவட்ட தலைவருமான மனோ. இவரின் இந்த அதிரடி மலிவு விலை கேபிள் இணைப்புக்கு கடகட வென்று பெருகி வருகிறது ஆதரவு.

"இந்த இனத்தின் கீழ் மாநகராட்சிக்கு வரி வசூல் குவியாததற்குச் சம்பந்தப்பட்ட மாநகராட்சி அதிகாரிகள்தான் காரணம். "இணைப்புகளின் எண்ணிக்கை பற்றி எங்களுக்குக் கவலை இல்லை. குத்து மதிப்பாக ஒரு கணக்கைக் கொடுத்துவிட்டு எஞ்சுவதில்


• அழகிரி • ராயபுரம் மனோ • ரவிச்சந்திரன்

கணிசமாக எங்களுக்கு வெட்டி விட்டுப் போங்கள்" என்று மேஜைக்குக் கீழே கையை நீட்டிக் கொழுத்துக் கிடக்கிறார்கள் என்று குற்றம் சாட்டுகிறார் இன்னொரு அனுபவப் பட்ட கேபிள் ஆபரேட்டர்.

இது குறித்து உண்மை நிலவரம் அறிய மாநகராட்சி தொழில் வரித்துறையை அணுகினோம். "வணிகவரித் துறை இதுவரை செய்து வந்த இந்தப் பணியை, மூன்று மாதங்களுக்கு முன்புதான் எங்களிடம் ஒப்படைத்தார்கள். கேபிள் டீ.வி. வரி வசூல் செய்வதற்கென்று இன்னும் பிரத்தியேக ஊழியர்கள் நியமிக்கப்படவில்லை. இதுவரை வசூலான வரி குறித்தும் உடனடியாகத் தகவல்களைத் தரமுடியாத நிலையில் இருக்கிறோம்" என்று சொல்லிவிட்டார் இத் துறையின் வருவாய் அதிகாரியான குப்பு சாமி!

தடியெடுத்தவன் எல்லாம் தண்டல்



• தைரியநாதன் • பாஸ்கரன் • சாரா

காரன் என்று இந்தத் துறை ஆகிவிட்டதை சரி செய்ய முடியாதா என்றால் முடியும். "ஒரே வழி மத்திய அரசு இதைத் தொழிலாக அங்கீகரித்து, தனி துறையாக்குவதுதான். ஆனால் தாராளமயத்தைக் காரணம் காட்டி அரசு மறுக்கிறது. இதனால் இந்தத் தொழிலுக்கு இன்ஷூரன்ஸ் இல்லை, கடனுதவி இல்லை... தொழில் பாதுகாப்பும் இல்லை. இதைத் தெரிந்துகொண்டு எங்கள் பிழைப்பில் லேட்டஸ்டாக மண் போடக் கிளம்பி விட்டார்கள் லோக்கல் அரசியல்வாதிகள்" என்று பிரச்னையை முன் வைக்கிறார் ஈரோடு சம்பத் நகரில் கேபிள் டீவி தொழில் நடத்தி வரும் ரவிச்சந்திரன்:

"கடந்த பதின்மூன்று வருடமாக இந்தப் பகுதியில் கேபிள் ஆபரேட்டராகத் தொழில் செய்கிறேன். அதிமுக ஆட்சிக்குப் பிறகு, இங்கேயுள்ள முன்னாள் நகரச் செயலாளர் ஒருவர், அஞ்சல் அலுவலகம் சென்று கேபிள்டீவி நடத்துவதாக மத்திய அரசுக்குக் கொஞ்சம் சர்வீஸ் சார்ஜ் கட்டிவிட்டு, அந்த ரசீதைக் கொண்டு கேபிள் டீவி நடத்தாமலேயே உரிமமும் பெற்றுள்ளார். இப்படி பெற்ற உரிமத்தைக் கொண்டு அவரது ஏரியாவில் பிற ஆபரேடர்களை மிரட்டி தாம் கேபிள் டீவி நடத்தி வருவதாகவும், உடனடியாக இணைப்புகளைத் தம்மிடம் ஒப்படைத்து வெளியேறும்படியும் வக்கீல் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறார்..." என்று குமுறுகிறார்.

இப்படிப் புதிதாக முளைக்கும் கேபிள் ரவுடிகள், கேபிள் ஒயர்களைக் கண்டபடி வெட்டிவிட்டு, பணம் பறிக்கும் கொள்ளைகளில் ஈடுபடுவது என்பது ஈரோடு, கடலூரில் அதிகரித்து விட்டதையும் சுட்டிக் காட்டுகிறார்கள்.

மினி கேபிள் ஆபரேட்டர்களின் குமுறல்கள் இப்படி மெகா தொடர் மாதிரி போய்க் கொண்டிருக்க, சந்தாதாரர்கள் நிலையோ இன்னும் மோசம்.

"எங்களுக்கு பே சேனல் எதுவும் வேண்டாம். கேட்பவர்களுக்கு மட்டும் கொடுக்கட்டும். பார்க்காத சேனலுக்கும் பணம் கட்டு என்றால் எப்படி?" என்கிறார் ராயபுரத்தைச் சேர்ந்த குடும்பத் தலைவி சாரா.

"வாடிக்கையாளர் விரும்பும் சேனலை மட்டும் பார்க்கும் வசதியை உருவாக்க இப்போது அட்ரஸெபிலிட்டி (Addressability) என்ற புதிய முறையை அயல்நாடுகளில் பயன்படுத்துகிறார்கள். இதில் டெலிபோன் பில்போல எந்தச் சானலை எவ்வளவு நேரம் பார்க்கிறாரோ அதற்கு மட்டும் பணம் கட்டினால் போதும் என்ற நிலை வரும். பணம் கட்டாத சந்தாதாரர்களின் இணைப்பையும் நிறுத்தி வைத்து விடலாம். ஆனால் இதற்கான சாதனங்களுக்கும் சாப்டுவேருக்கும் பெரிய தொகை முதலீடு செய்ய வேண்டி வரும். செலவைப் பகிர்ந்து கொள்ள சேனல்காரர்களும், மெயின் ஆபரேட்டர்களும் தயாரா என்று கேட்கிறார்கள் சிறு ஆபரேட்டர்கள்.

ஆனால், "பொன்முட்டையிடும் சந்தாதாரர்களை அட்ரஸபிலிட்டி மூலம் கொல்ல அவர்கள் என்ன பைத்தியமா?" என்கிறார் இன்னொரு சந்தாதாரர் தைரியநாதன்.

— ஸ்ரீ சக்கரத்தாழ்வார்

படங்கள்: வர்ஷா



ஒவ்வொரு கோடையும் வந்து போகும் பிரச்னைதான் என்றாலும் இப்படியொரு ஆங்காரத்தில் இந்தப் பிரச்னையை யாரும் எதிர்நோக்கவில்லை.

கீழத்தெருக்காரப் பச்சைமுத்து வியர்க்க விறுவிறுக்க ஓடிவந்து, "ஏல பறம்புக்காரனுவ தண்ணிய கெழக்க வுடாம உத்ராணியிலேயே திருப்பிட்டானுவலே" என்ற போது வேறு ஏதோ யோசனையில் சென்று கொண்டிருந்த மேலத் தெருக்காரர்களுக்கும் அதிர்ச்சியாயிருந்தது.

மனத்தில் கனன்று கொண்டிருந்த வன்மத்தைக் கழற்றி ஓரம் வைத்து விட்டு ஆவலாய் ஓடி வந்தனர். விஷயம் சில நொடிகளுக்குள் ஊர் முழுவதும் பரவியது. இரண்டு தெருக்காரர்களும் தெருவில் கூடி நின்றனர். "முதல்ல அவனுவ பேசட்டும். பெறவு நாம பேசுவோம்" என்று கொஞ்சமாய் எரிந்து கொண்டிருந்த கௌரவம் சில நிமிடங்கள் கூட நீடிக்கவில்லை.

"என்னடே இப்படி தண்ணிய திருப்பிட்டியோன்னு நொண்டி மவன்கிட்ட கேட்டேன். அவன், ஆமா... அதுக்கென்ன செய்ய முடியும்? நீங்க என்ன செய்வீனோ செய்யுங்கன்னு திமிரா பேசுதான்" என்று சப்தமாக பச்சை சொன்ன போது, திடுமென பாசம் பொங்கி மரகதத்தின் அண்ணன், "ஏ மாப்ள அப்டியாவே சொன்னாம், வாங்க எல்லாரும் போவும். உண்டு இல்லைனு பாத்திருவோம்" என்றான் பகை மறந்து.

"மூணு நாளா தண்ணியில்லாம காஞ்சு போய்க் கெடக்கு வயலுவோ... தண்ணி இப்ப வந்துரும், இப்ப வந்துரும்னு பாத்திட்டிருந்தா இப்டியா பண்ணுதானுவ. வாங்கல எல்லாரும் உத்ராணிக்குப் போவம்" என்றார் மரகதத்தின் அப்பா.

மண்வெட்டி, கடப்பாறை, கம்பு, அரிவாள் சகிதமாய் ஊரிலிருந்த ஆண்கள் படை போல திரண்டு புறப்பட்டனர்.

பார்த்துக் கொண்டிருந்த வேலைகளை அப்படியே போட்டு விட்டு அவர்கள் கிளம்பியதால் மேய்ச்சலுக்குச் செல்ல வேண்டிய மாடுகள் தெருவில் நின்று கொண்டே அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தன.

வாய்க்கால் பாலம் தாண்டிப் போன போது, எதிரில் சிறுகிழங்குக்கு மண்வெட்டி விட்டு வந்த குட்டியின் அப்பா அவர்களைப் பார்த்தார்.

எல்லோரும் ஒன்றாக வருவதைப் பார்த்ததும் அவருக்கு முதலில் பயம் வந்து விட்டது. ஏதும் வெட்டுக் குத்து காரியமாக இருக்குமோ என்பது போலத் தோன்றியது.

ஒரு நிமிடம் விசித்திரமாய்ப் பார்த்துக்

## ஏக்நாத்

கொண்டு நின்ற அவரிடம் பச்சைதான் விஷயத்தைச் சொன்னான்.

"அப்டியால, கதய கெடுத்துப் போட்டானுவளே. வாங்கல போவோம்" என்று அவரும் கிளம்பிவிட்டார்.

கலவரத்துக்குப் பிறகு முறைத்துக் கொண்டு சென்ற மரகதத்தின் அப்பாவும் குட்டியின் அப்பாவும் இப்போது அருகருகிலேயே சென்றனர். ஆனாலும் பேசவில்லை. கூட்டத்தில் யாராவது பேசி இவர்களில் ஒருவர் பதில் சொன்னால், 'அதுவும் சரிதான' என்று சொல்லி நெருங்கி வந்தனர்.

'அவன் முதல்ல பேசட்டுமே' என்று

இவரும் 'இவன் பேசட்டுமே' என்று அவரும் நடந்து கொண்டிருந்தனர்.

இருவரும் சிறு வயதிலிருந்தே ஒன்றாகச் சுற்றியவர்கள். ஒன்றாகக் கூத்தடித்து கும்மாளம் போட்டவர்கள். இவர்களுக்கான பிராயம் அன்பும் வீரமும் நிறைந்ததாக இருந்திருக்கிறது.

ஒரே நாளில்தான் இருவரின் கல்யாணமும் நடக்க வேண்டுமென்று நினைத்தனர். ஆனால் விதி வேறு மாதிரி ஆகிவிட்டது.

மரகதத்தின் அப்பா, மாமன் மகளைக் கட்ட வேண்டிய கட்டாயம். அந்த நேரத்தில் குட்டியின் அப்பாவுக்குத் தடபுடலாகப் பெண் பார்த்தார்கள். இவருக்குச் செவ்வாய்தோஷம் என்பதால் பெண் கிடைப்பதில் சங்கடமாகியது. இதனால் மரகதத்தின் அப்பாவுக்குத்தான் முதலில் திருமணம் நடந்தது.

இருவருமே தகிடுதத்தங்களில் பெரிய பார்ட்டிகள். இங்கிருந்து ஏழு கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கும் பாப்பாங்குளத்தில் போய் ஆடுகளைத் திருடிக் கொண்டு வருவார்களாம்.

ஒருமுறை இப்படித் திருடுகையில் நள்ளிரவில் ஆட்கள் விரட்டிக் கொண்டு வர, மரகதத்தின் அப்பா சிலம்பாட்டம் ஆடி அவர்களை விரட்டியதைப் பெருமையாகச் சொல்வார்கள்.

குட்டியின் அப்பாவும் சாதாரண ஆளில்லை. வெள்ளத்தின்போது மலைப் பாம்பு ஒன்று வயலுக்குள் புகுந்து விட்டது. கரையில் மேய்ந்து கொண்டிருந்த ஒரு ஆட்டை பாம்பு விழுங்க, எல்லோருக்கும் கிட்டே போக பயம். பாம்பு ஆட்டை முழுங்கிய சிறிது நேரத்திலேயே அங்குமிங்கும் நகர முடியாமல் கிடக்க, அதன் வயிறை கோங்கருவாளால் கிறி ஆட்டை உயிரோடு வெளியே எடுத்தாராம்!

இப்படியெல்லாம் பெருமை பெற்ற நண்பர்கள் இப்போது இப்படிச் செல்வது அவர்களுக்கே வேடிக்கையாக இருந்தது.

இருவருக்குமே பேசித் தொலைத்து விடுவோம் என ஆவல் பிராண்ட, மரகதத்தின் அப்பா ஒரு பீடியை பற்றவைத்துக் கொண்டு, அவரிடம் ''வேணுமா?'' என்று கேட்க நினைத்தார்.

அதற்குள் குட்டியின் அப்பா, ''பீடி இருக்கா?'' என்று வாய் விட்டுக் கேட்டு விட்டார். அடுத்த நொடியில் இருவரும் தாமாகப் புன்னகைத்துக் கொண்டனர்.

கோபம் ஓடியிருந்தது.

''கோடியில வந்த பகை, ஒரு பீடில போயிரும்னு சும்மாவா சொன்னான்'' என்று அவர்களுக்குத் தெரியாமல் ஒருவன் இன்னொருவனின் காதில் சொன்னான்.

அம்மன் கோவில் தாண்டிச் சென்று கொண்டிருந்தனர். வயல் வரப்பில் நடந்து ஒத்தத் தென்னம்பிள்ளை வழியாகச் செல்லவா? அல்லது கரையே நடந்து ரயில் பாலம் வழி உத்ராணி செல்லவா? என்பதில் குழப்பம் வந்தது.

வண்டி முருகன் கேட்டான்.

"எந்த வழியா போவ?"

மரகதத்தின் அப்பா, குட்டியின் அப்பாவைப் பார்க்க, இவர் அவரைப் பார்க்க, பேசாமல் நின்று கொண்டிருந்தனர்.

அதற்குள் சிலர் வரப்புக்குள்ளும், சிலர் ரயில் பாலம் வழியிலும் நின்றனர்.

குட்டி அப்பா, ''இப்படியே போவம்'' என்று ரயில் பால வழியைக் கை காண்பிக்க, நடந்தனர்.

நம்பியார் மந்தை, தேவர் தோப்பு, ரயில் பாலம், இடிஞ்ச மண்டபம் கடந்து உத்ராணி. அது சோலைகளால் சூழப்பட்டது போன்ற உணர்வைத் தரும். உத்ராணியின் இரு பக்கமும் மரங்கள். அடர்ந்த கிளைகளைக் கொண்ட பெரிய பெரிய மரங்கள். கடுங் கோடையிலும் அந்த இடம் ஜில்லென்று இருக்கும். அதனருகில் ஒரு பிள்ளையார் கோயில் இருக்கிறது. கோயிலுக்குக் கீழே மண்டபம். பெரிய பெரிய கற்களாலான தூண்கள் தாங்கி நிற்கும் பழைய மண்டபம். வெண் மணல் மண்டபத்தின் பாதி வரை மூடியிருக்கும். இதைச் சந்தையா மடம் என்பார்கள். இங்கு உட்கார்ந்தாலே தூக்கம் வந்து விடும். தூங்குவதற்கென்றே பலர் இங்கு வருவதுண்டு.

ஒவ்வொருவரும் வேகமாக நடக்க, மரகதம், குட்டியின் அப்பாக்கள் தோளில் கை போட்டு மெதுவாக நடந்து சென்று கொண்டிருந்தனர்.

அவர்கள் பேச்சில் சிரிப்பும் கிண்டலும் கலந்திருந்தது.

**எ**வ்வித சுரத்துமின்றி தொழுவத்தில் மாட்டுக்குத் தண்ணீர் வைத்துக் கொண்டிருந்த குட்டிக்கு, இப்போது மரகதத்தை இலகுவாகச் சந்திக்கலாம் போலிருந்தது. ஊரே உத்ராணி சென்று விட, வீட்டில் அவள் மைனியுடன் தான் இருப்பாள் என்று தோன்றியது.

மாட்டுக்குத் தண்ணீர் வைத்துவிட்டு படப்பிலிருந்து வைக்கோல் எடுத்து அள்ளிப் போட்டான். கடமைக்கு வாய் வைத்துத் திங்கத் துவங்கின மாடுகள்.

**''அவன் இத்தனை நாளா இரண்டு அடுக்கு கேரியர் கொண்டு வந்தான். இப்ப நாலு அடுக்கு கேரியர் கொண்டு வர்றானே.. ஏன்?''**

**''கேரியர்லே முன்னேற்றம் இருக்கணும்னு சொன்னதைத் தப்பாப் புரிஞ்சுக்கிட்டான் போலிருக்கு!''**

**- தஞ்சை தாமு**



ஓரத்தில் கட்டப்பட்டிருக்கும் பசுவுக்குப் புல்லுதான் இறங்கும். வைக்கோலை அது கண்டுகொள்ளாது. இன்று புல்லறுக்க யாரும் செல்லவில்லை. "ஒனக்கு இன்னைக்கு இது தான், பேசாம நின்னு" என்று பசுவுக்கு உத்தரவு போட்டுவிட்டு அவசரமாக முகத்தைக் கழுவினான்.

ஒரு துண்டைத் தோளில் போட்டுவிட்டுத் தெருவுக்கு வந்தான்.

அவள் வீட்டுக்கு எதிரில், தெருவில் நின்று கொண்டு, "வேலுண்ணே கடையில டீ இருக்கா?" என்று கத்தினான்.

இந்தக் கத்தல், 'நான் இங்கே நிற்கிறேன்' என்பது அவளுக்குக் கேட்க வேண்டுமென்பதற்கான சிக்னல்.

இதைப் புரிந்து கொண்டவனாக வேலு அங்கிருந்து கத்தினான்.

"ஒண்ணும் அவசரமில்ல. மெதுவா வா. டீ இருக்கு" என்றான்.

அடுத்த சில விநாடிகளில் மரகதம், அவள் வீட்டு வாசலில் கண்களில் மை தடவி நின்றிருந்தாள். மஞ்சள் கலரில் ஜிகினா பார்டர் போட்ட தாவணி உடுத்தியிருந்தாள். அதுக்கு ஏற்றாற்போல தீப் பெட்டிக் கலரில் சட்டையும் அதே கலரில் பாவாடையும் அணிந்திருந்தாள்.

அவளின் தெளிந்த, அழகான, பால் போன்ற முகத்தில் மட்டும் பாதி ஏக்கமும் பாதி மகிழ்ச்சியும்.

அவளைப் பார்த்த அடுத்த விநாடியே அவனுக்குள் உலகம் சுருங்கியது. ஒரு வெள்ளைக் குதிரையில் வேகமாகச் சென்று அவளை அங்கிருந்து லபக்கென்று அள்ளிக் கொண்டு செல்ல சினிமாக்களில் மட்டும் முடிகிறது. நிஜம் வேறாக இருக்கிறதே!

அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் சைகையால் 'சாப்டாச்சா?' என்றாள். அவன் "ம்...ம்" என்று தலையாட்டினான். பிறகு என்ன நினைத்தாளோ தெரியவில்லை. கழுத்தில் கிடந்த சங்கிலியை எடுத்து, 'எப்ப தாலி கட்டுவ?' என்பது போல் சைகை செய்தாள்.

இவன் இரண்டு கைகளையும் மேலே, வானம் நோக்கி காட்டி, 'அவனுக்குத்தான் தெரியும்' என்றான்.

இதைக் கேட்டதும் அவள், கதவில் முகம் புதைத்து அழுவதைப் போல பாவனை செய்தாள்.

இன்னும் எவ்வளவு நேரம்தான் தெருவிலேயே நிற்பது? பக்கத்து வீட்டுக்காரிகள் பாதகிகள். இதைப் பார்த்தால் அவர்களின் கணவர்கள் வீட்டுக்கு வந்ததும் வராததுமாக முதல் வேலையாக இதுபற்றி ஊதக்கூடும். அவர்களுக்கும் வாயசைய ஏதாவது அவல் வேண்டுமே! இப்போதுதான் நெருப்பு எரிந்து அடங்கியிருக்கிறது. மீண்டும் புகைச்சல் தகவல் வந்தால் அவ்வளவுதான். வேறு விபரீதங்கள் நடக்கக்கூடும்.

அவள் முகத்தில் இப்போது புன்னகை. அந்த இளஞ்சிரிப்பு ஏதேதோ சொல்லிற்று. மீண்டும் அவனுக்கு ஒரு கனவு வர எத்தனிக்கையில்,

"ஏல ஏம் இங்க நிக்க?" என்று கேட்டுக் கொண்டே எதிரில் நின்றாள் சித்தி.

"ஆங்... டீக்கடைக்குப் போறேன்" என்றான்.

சும்மா ஏதாவது பேச வேண்டுமே என்பதற்காகக் கூட அவன் சித்தி கேட்டிருக்கலாம். ஆனால் அவனுக்குப் பயம்.

"அந்தப் புள்ள வீட்டு முன்னால நின்னுட்டிருக்கான்" என்று சித்தப்பாவிடம் சொன்னால் மீண்டும் வீட்டுக்குள் பூகம்பம் வெடிக்கலாம்.

சித்தி நேராகப் போகாமல் தெருவிலிருந்தபடியே மேற்குப் பக்கம் திரும்பிப் பார்த்தாள். மரகதம் நின்று கொண்டிருந்தாள்.

இவனின் சித்தியைப் பார்த்ததும் அவள் தன்னை மறைத்துக் கொள்ளவோ, வேறு எங்கோ வேடிக்கை பார்ப்பது போல் நடிக்கவோ செய்யாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளைப் பார்த்த சித்தி, திரும்பி இவனைப் பார்த்தாள். அவன் அங்கேயே நின்று அவளைப் பார்த்துப் பல்லிளித்துக் கொண்டிருந்தான்.

"ஏல... கடைக்குப் போறன்னுட்டு அங்க ஏம் நிக்க..! போல?" என்று சித்தி அதிகாரத் தோரணையில் சொல்லவும், "ஆங்... சரி சரி" என்று அவளை ஓரக் கண்ணால் பார்த்துக் கொண்டே நகர்ந்தான் குட்டி.

அப்போது பூக்கள், பழங்கள் அடங்கிய ஒரு கூடையைத் தூக்கிக் கொண்டு இரண்டு நடுத்தர வயதுப் பெண்களும், ஓர் இளைஞனும், ஒரு பெரியவரும் மரகதத்தின் வீட்டுக்குள், "அப்பா இருக்காராம்மா?" என்று கேட்டுக் கொண்டே சென்றனர்.

"மரகதத்தைப் பொண்ணு பார்க்க வந்திருக்காங்க" என்றான் டீக்கடைக்கார வேலு.

(தொடரும்)













# புத்தகங்கள்

மருதம் பதிப்பகம், 38, கோமுட்டித் தெரு, ஒரத்த நாடு, விலை ரூ.30

**தைத்ரீய உபநிஷதம்**

தெய்வ வழிபாடுகளிலும், வைதிகச் சடங்குகளிலும் மங்கல நிகழ்ச்சிகளிலும் ஓதப்படும் இந்த உபநிஷத்தைத் தமிழில் எளிமையாக மொழி பெயர்த்திருக்கிறார் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் துறவியான சுவாமி ஆசுதோஷானந்தர். வாழ்க்கைக் கல்வி, மனிதன், கடவுள் ஆகிய மூன்று தலைப்புக்களில் விரிவாக விளக்குகிறது இந்நூல்.

ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை - 4, விலை ரூ.35

**கனவைச் சூடிய நட்சத்திரம் - திலகவதி**

நாவல். சினிமாவில் அடியெடுத்து வைக்கும் பெண்ணொருத்தி, தான் சார்ந்த சினிமாத் துறையை அடுத்தக் கட்டத்துக்கு முன்னெடுத்துச் செல்ல நடத்தும் போராட்டங்களே நாவலின் கரு. சுவாரஸ்யமாகச் செல்கிறது ஒவ்வொரு அத்தியாயமும்.

அகரம், பிளாட் எண்.1, நிர்மலா நகர், தஞ்சாவூர், விலை ரூ.100

**புதுயுகம் - சிறுகதைகள்**

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்க முப்பத்தியொரு உறுப்பினர்களின் சிறுகதைகளடங்கிய தொகுப்பை எழுத்தாளர் விக்கிரமன் தயாரித்துள்ளார். சில கதைகள் நெஞ்சில் பதிகின்றன.

மகாகவி பதிப்பகம், 3, ஜெய்சங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. விலை ரூ.100/-

**தமிழ்ப் பெரியார்கள் - வ.ரா**

ராஜாஜி, ஈ.வெ.ரா. பெரியார், திரு.வி.க, வ.உ.சி. உள்ளிட்ட பன்னிரண்டு பெரியார்கள் பற்றி, தமது அனுபவத்தை இதில் எழுதியுள்ளார் வ.ரா.

**காற்றுக்குப் பதிலாய்... - குகை மா.புகழேந்தி**

கவிதைகள், தலையைப் பிய்த்துக் கொள்கிற மாதிரி எழுதும் கவிஞர்களுக்கு மத்தியில், மனத்தை இதமாகத் தடவிச் செல்கின்றன இவரது இயல்பான கவிதைகள்.

மதி நிலையம், 4(39) தணிகாசலம் சாலை, பிருந்தாவன் அபார்ட்மென்ட்ஸ், தி.நகர், சென்னை - 17 விலை ரூ.25

— தம்பி

# பேஷ்...பேஷ்! போஷாக்கு காப்பி!




பொதுவாகவே தென்னிந்தியர்கள் காப்பி பிரியர்கள். அதிலும் சுத்தமான ஃபில்டர் காப்பிதான். இன்ஸ்டன்ட் காப்பி இரண்டாம்பட்சம்தான். காலை எழுந்து பல் துலக்கியவுடன் சூடான நுரை ததும்பும் காப்பியைக் குடிக்காத நபர் உண்டா? 'காப்பி குடிச்சா தான் 'மூட்' வரும்' என்று சொல்பவர்களும் உண்டு. தாமதமாகக் காப்பி கொடுத்தால் கணவர், மேலதிகாரியின் (இரண்டுமே ஒன்று தானா?) கோபத்துக்கு ஆளாகும் அபாயம் உண்டு. 'எங்காத்து குழந்தை இப்பவே பாலில் ஒரு சொட்டு டிகாக்ஷன் விட்டாத்தான் குடிக்கிறான். ...என்னை கொண்டிருக்கான்' என்று பூரித்துப் போகும் பாட்டிகள் அநேகம்.

இவ்வளவு வசீகரமான காப்பிக்கு, கெட்ட பெயரும் உண்டு. காப்பி அதிகம் குடித்தால் கெடுதல். தலைசுற்றல், வாந்தி, பித்தம், இரத்தம் கெடும் என்கிற கருத்தும் இருக்கிறது. ''காப்பியும் குடிக்கணும். ஆனால் அது ஆரோக்கிய பானமாகவும் இருக்கணும்'' என்று ஆசைப்படுபவர்களுக்காகவே, 'எஸ்ட்ரஸ் காப்பி' என்கிற ஊட்டச்சத்து காப்பியை அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.


• ராவ் தம்பதி

உலகிலேயே முதல் முறையாக போஷாக்கு காப்பியைத் தயாரிக்கும் பெங்களூர் நதாச் (Nutach) ஹெல்த்கேர் நிறுவனர்களான சேஷகிரி ராவ் சாஹிப் அவரது மனைவி லலிதா ராவ் சாஹிபைச் சந்தித்தோம்.

''குழந்தைகளை, வயதானவர்களை டாக்டர்கள் ஊட்டச்சத்துக்கள் அடங்கிய பானம், கஞ்சி குடிக்கச் சொல்ல, வேண்டாவெறுப்பாகக் குடித்து வைக்கிறார்கள். காப்பியை அவர்களால் விட முடியவில்லை. அதனால் பல ஆராய்ச்சிகளுக்குப் பிறகு இந்தக் காப்பியைக் கொண்டு வந்துள்ளோம். இதில் வைட்டமின்கள், புரதம், தாதுப் பொருட்கள், சோயா, காப்பி, சிக்கரி... என எல்லாமே உண்டு. தைரியமாக ஒரு நாளைக்கு மூன்றிலிருந்து நான்கு கப் வரை குடிக்கலாம்'' என்கிறார்கள்!

## ரெட்டிகாரு ரொட்டி!

**ஒ**ரு சோள ரொட்டி ஒரு ரூபாய், அதற்கு தொட்டுக் கொள்ள ஒரு கிண்ணம் பருப்பு ஒரு ரூபாய். ஆக இரண்டே ரூபாயில் ஒரு வேளை டிபன் முடிந்து விடுகிறது! மதிய உணவு இரண்டு ரொட்டிகள், ஒரு பிளேட் வெஜிடபிள் குருமா, ஒரு கப் ஃப்ருட் சாலட், அரை லிட்டர் மோர்... இத்தனைக்கும் ஐந்து ரூபாய்தான்!



ஆந்திராவில் நந்தியால் என்ற ஊரில் ஒரு சிறிய எளிமையான கடையில்தான் இந்த அதிசயம். மலிவு என்பதால் ஏகப்பட்ட வியாபாரம்! அதே ஊரில் இன்னும் 40 கிளைகள் திறக்கப்பட்டன. அல் நகரில் நான்கு, அனந்தபூர், கடப்பா மற்றும் ஆந்திராவிலுள்ள பல இடங்களில் கிளைகள் துவக்கப் போகிறார்கள்.

ஏழைகளுக்கு உதவ வேண்டும் என்ற எண்ணத்தில்தான் இந்த கடைகளைத் திறந்தாராம் 'நந்தி குரூஃப் ஆப் இண்டஸ்ட்ரீஸ்' நிறுவனத்தின் முதலாளி ரெட்டி.

''நாங்கள் மூலப் பொருட்களை விவசாயிகளிடமிருந்து நேரடியாக வாங்குகிறோம். ''பாதி விலைக்குக் கிடைக்கிறது. பிசினஸில் எங்களுக்குக் கொஞ்சம் லாபமும் கிடைக்கிறது. இன்னும் அதிகமான கிளைகள் திறந்தால் லாபம் அதிகரிக்கும்'' என்கிறார் ரெட்டி.

ஆதாரம்: 'அவுட்லுக்'

— அனிதா ராமச்சந்திரன்

"அதிகக் காப்பியும் கெடுதல்தானே?" என்றால் அதற்கும் பதில் வருகிறது.

''அதிகம் என்பது எதிலுமே நல்லதல்ல. ஆனால் மனிதகுலத்திற்குக் கிடைத்த ஓர் அரிய பானம் காப்பி. காப்பி அருந்தினால் ஆஸ்துமா, புற்றுநோய், மெனோபாஸ், பார்க்கின்ஸன் போன்ற வியாதிகள் தாக்குகிற ரிஸ்க் குறையும் என்பது உண்மை. ஒருநாளைக்கு சுமார் 395 மில்லி கிராம் காஃபைன் உட்கொண்டோமானால் கூட எந்தக் கேடும் விளை விப்பதில்லை. காஃபைன் மூலம் நம் உடலுக்கு நன்மைதான் உண்டாகிறது என மேல்நாட்டு விஞ்ஞானிகள் ஆணித்தரமாகக் கூறுகிறார்கள்.

**க**லிஃபோர்னியாவில் எம்.பி.ஏ. முடித்து, டாடா என்டர்பிரைசஸின் பல கிளை அலுவலகங்களில் மார்க்கெட்டிங் துறையில் இருந்தது நல்ல அனுபவமாக அமைந்ததாகச் சொல்கிறார் ராவ் சாஹிப். மார்க்கெட்டிங் சர்வே செய்யும்போதெல்லாம் ஊட்டக் குறைவினால் குழந்தைகளின் நிலை, பெரியவர்களின் பிரச்னைகள் மிகவும் யோசிக்க வைக்கவே ஏதேனும் செய்தே ஆக வேண்டுமென்ற வெறியில் பிறந்ததுதான் இந்த பானம். முதலில் சாக்லேட், பாதாம் என குழந்தைகளுக்கான பானம் தயாரித்தவர்கள் சமீபத்தில்தான் காப்பியை அறிமுகப்படுத்தியுள்ளனர்.

''இது ஊட்டச்சத்து மிக்க பானம்தான் என்பதற்கு என்ன உத்தரவாதம்?''

''இதைக் குடிக்குமாறு டாக்டர்களே பரிந்துரை செய்கிறார்கள். மேலும் இது சூப்பர் மார்க்கெட் மற்றும் பொது அங்காடிகளில் கிடைக்காது. மருந்துக் கடைகளில் மட்டுமே கிடைக்கும். நாங்களே கூட சாட்சிதான். பெங்களூரிலிருந்து திருப்பதிக்கு நடந்தே போய்த் திரும்பினோம். இங்கிருந்து சுமார் 273 கிலோ மீட்டர் தூரம். ஒன்பது நாட்கள் நடந்தே பிரயாணம் செய்து தரிசனம் செய்தோம்.

முதல் தடவை போனபோது காலெல்லாம் கொப்புளங்கள் வந்து ஏழு கிலோ வெயிட் வேறு இறங்கி விட்டது. இந்தத் தடவை கையோடு எங்கள் ஹெல்த் ட்ரிங்க் பவுடர் எடுத்துப் போயிருந்தோம். நல்ல வித்தியாசம். ரொம்ப புத்துணர்ச்சியாக இருந்தது. இதை விட வேறென்ன கியாரண்டி வேணும்?'' என்கின்றனர் ராவ் தம்பதி!

— பிருந்தாவனி

# இரண்டு நாடகங்கள்

**கே.**பாலசந்தரின் சீடர் வசீகரனின் 'இரண்டாவது இரவு', கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸின் கோடை நாடக விழாவில் எதிர்பார்ப்பைத் தாண்டியிருந்தது.

மழை கொட்டும் நள்ளிரவில் நெருங்கிய நண்பன் சகாவைத் தேடி வருகிறான் பாலா. ஆனால் சகா அன்று இரவுதான் வெளியூர் கிளம்பிப் போயிருக்கிறான். தங்கச் சொல்லுவதா, வேண்டாமா என்று மனைவி சாரு, தர்ம சங்கடத்தில் தவிக்கிறாள். வெளியே போகச் சொன்னால், வந்த பிறகு கணவர் கோபிப்பாரோ என்ற கவலையோடு, இருக்கச் சொல்லுகிறாள். உணவும் உடையும் கொடுக்கிறாள். மின்சாரம் போய்விடுகிறது. பாலா கிளம்புகிற சமயம், சகா வந்துவிடுகிறான், ரயில் ரத்து செய்யப்பட்டுவிட்டதாக. நண்பனையோ, மனைவியையோ தவறாக எடுத்துக் கொள்ளுவதில்லை.

நாடகத்தின் இரண்டாம் பகுதிதான் சுவாரசியமானது. இதைக் கதையாக எழுதிய ரம்யா, கணவன் நாச்சிமுத்துவைக் காதலித்து மணந்தவள். நாச்சிமுத்து ஏற்கெனவே மனைவிமீது அவநம்பிக்கை உள்ளவன். தனது உருவம் காரணமாக, தாழ்வு மனப்பான்மையில் தவிப்பவன். கதையைப் படித்துவிட்டு அவளைத் தேடி வரும் அவளுடைய பழைய காதலன் வந்துவிட்டுப்போனதை, பிரைவேட் டிடெக்டிவ் வைத்து அறிந்து கொண்டு நடத்துகிற ஆயிரம் சரவெடி. ஆர்ப்பாட்டம்தான் வசீகரனின் வசனத்துக்கும் நடிப்புக்கும் நிமிடத்துக்கு ஒரு கைதட்டலைக் குவிக்கிறது. நாடகம் முடிந்து, குருநாதர் சீடனைப் பாராட்டியதில் வியப்பேதும் இல்லை.

அத்தனை பேரும் சென்னைத் தொலைபேசி ஊழியர்கள். சபாஷ்! நாடக வறட்சி சீஸனில், 'சபா' நாயகர்களுக்கு இதை சிபாரிசு செய்கிறோம்.

**க**லாநிலயத்தின் 'பெண்புத்தி பொன் புத்தி', 'சாரி, கொஞ்சம் ஓவர்' ரகக் கற்பனை. தன்னைவிட்டால் வேறு ஆள் கிடையாது என்ற அகம்பாவம் பிடித்த அதிகாரியான மாப்பிள்ளை. திருமண தினத்தன்று வாழ்த்த வந்த மாமனார் - மாமியாரை 'எப்போ திரும்பப் போகிறீர்கள்?' என்று விரட்டும் டைப். நடுவே மாப்பிள்ளைக்கு வேலை போய்விடுகிறது. டிவோர்ஸ் செய்துவிட்ட மனைவியே ஆறுதல் தந்து அடைக்கலமும் கொடுக்கிறாள். இவ்வளவுக்குப் பிறகும் மாற வேண்டாமோ மாப்பிள்ளை? வேலை திரும்பக் கிடைக்கிறது. அகம்பாவம் மறுபடி தலைதூக்குகிறது. சினிமாத்தனமாக, தாலியைக் கழற்றி அவன் முகத்தில் வீசாமல், குட்டை சொல்லி விடுகிறாள் மனைவி.

'கலா நிலையம்' கே.எஸ்.நாகராஜன் எப்போதும் நடிப்பில் யாரையும் சோடை போக விடமாட்டார். கதையில்தான் கோட்டை விட்டுவிட்டார். (கதை : கேஎஸ்என். சுந்தர். மகனேதான்!)

**'ரா**து' ஏற்பாடு செய்த நாடகக் கருத்தரங்கம்,



கடைசியில் அடிதடியில் முடிந்தது. கதை (புராணங்களில் வரும் ஆயுதம்) ஒன்றை மேடையில் கட்டித் தொங்கவிட்டுவிட்டு, கடைசியில், "இந்த நாடகத்தில் கதை இல்லை என்று யாரும் சொல்லிவிடக் கூடாது என்பதற்காக இதைத் தொங்கவிட்டிருக்கிறோம்" என்று ஒரு நாடகத்தில் அறிவித்ததை ஒருவர் குறை சொல்லப்போக, ''டே, வாடா வெளியே", என்று அரசியல் மேடை ரேஞ்சுக்கு சம்பவம் போக, ராது பொறுத்தது போதும் எனப் பொங்கி எழ...

நமக்கு எதுக்குங்க இந்த மாதிரி கருத்தரங்கம் எல்லாம்?

— சாருகேசி



# பொய்யில் பூத்த நிஜம்

வாஸந்தி

எதிர்த்தாற்போல் விரிந்த புல்வெளியில் இன்று சோட்டுவும் பீட்டுவும் காணோம். அவர்களை சைத்தான் என்று சொன்ன அம்மாளையும் காணோம். நோயாளி குணமாகி டிஸ்சார்ஜ் ஆகிப் போயிருக்க வேண்டும் - ஆனால் இன்று வேறு ஒரு குடும்பம் இருந்தது. முடிச்சு முடிச்சாகப் பெரியவர்கள் நிழல் திட்டுக்களில் அமர்ந்திருக்க, நடக்கப் பழகும் வயதுக் குழந்தைகள் தன்னிச்சையாக விளையாடிக் கொண்டிருந்தன. அவர்களைக் கண்காணிப்பது போல அவற்றைவிட சற்றே பெரிய குழந்தைகள் கூடக் கூட ஓடிச் சிரித்தன. இந்தப்புல் வெளியையும் அங்கு சிரித்து விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகளையும் முதல் முறையாகப் பார்த்தபோது, குழந்தைகளை ஏன் ஆஸ்பத்திரிக்கு அழைத்து வருகிறார்கள் என்று சகுந்தலாவுக்குக் கோபம் வந்தது. பிறகு யோசித்துப் பார்த்ததில் இந்தக் குழந்தைகள் பெரியவர்களுக்கு ஒரு வகையில் ஜீவாதார உணர்வைத் தந்தார்கள் என்று தோன்றிற்று. அந்த ஐ.ஸி.யு.வுக்கு வெளியில் வாழ்வு உயிர்ப்புடன் தொடர்வதை உறுதிப் படுத்தும் அடையாளமாக. அறிவிற்கப்பாற்பட்டதற்கும் அறிவிற்குட்பட்டதற்கும் உள்ள பாலமாக. குழந்தைகளின் அண்மை பெரியவர்களுக்குத் தேவைப்பட்டதாகத் தோன்றிற்று. பரத் இப்போது அவளுக்குத் தேவைப்பட்ட மாதிரி, குழந்தையை அழைத்து வந்திருந்தால் இந்த நிமிஷத்தில் அவள் உணரும் சங்கடத்தை அதன் சிரிப்பில் புதைத்திருக்கலாம். விவேக் அவளைப் புதிதாய்ப் பார்ப்பவன் போல் பார்த்தான். பார்வையில் இலேசான சிரிப்புப் புலப்பட்டது. அப்பொழுதுதான் அவளுக்கு நினைவுக்கு வந்தது. அவள் வழக்கத்திற்கு மாறாக, ஜீன்ஸுக்கு பதில் சல்வார் கமீஸ், நெற்றிப் பொட்டுடன் வந்திருப்பது. இவன் பிறகு தன்னைப் பரிகாசம் செய்வான் என்ற நினைப்புடன்.

"ஹைய்!" என்றாள் அவள் மிக மெலிதாய்ப் புன்னகைத்து. "இவர்களுக்கு என்னை அறிமுகப்படுத்தமாட்டாயா?" என்றாள் ஹிந்தியில், அடிக்குரலில்.

"ஓ. ஆமாம் வா" என்று அவள் தோளைப் பிடித்து நகர்த்தி அவர்கள் அருகில் அழைத்துச் சென்றான். அந்த அம்மாளின் துளைக்கும் பார்வையில் தான் துளையுண்டு கந்தலாகிப் போய் விடுவோம் என்று சகுந்தலா நினைத்தாள்.

"மிஸ்டர் சரவணன், இதுதான் சகுந்தலா. ராஜாவின் மனைவி" என்று விவேக் அறிமுகப்படுத்தியபோது, அதை எதிர்பார்த்திராத திகைப்பு இருவர் முகத்திலும் தெரிந்தது. சரவணன் காமாட்சியைப் பார்த்துவிட்டு, சகுந்தலாவை ஒரு விநாடி பார்த்து, "ஓ?" என்றார்.

சகுந்தலா இருவருக்கும் கைகூப்பி 'நமஸ்தே' என்றபோது அது ஏதோ ஹிந்தி சினிமாக் காட்சி போலத் தோன்றிற்று. திடீரென்று காற்றே கனத்துப் போயிற்று. இறுக்கம் எல்லார் குரல்வளையையும் நெருக்கிற்று. இருவரும்

பதிலுக்கு நமஸ்தே சொல்லவில்லை என்பதை அவன் கவனித்தான். அது அதிர்ச்சியினாலா அல்லது சுபாவமான அகம்பாவத்தினாலா என்று அவளுக்குக் குழப்பமேற்பட்டது. இங்கித மற்றவர்கள் என்று உறுத்திற்று. தென்னிந்தியர்களே சிநேகிதமற்றவர்கள் என்று விவேக் நினைத்தால் ஆச்சரியம் ஏதுமில்லை. காமாட்சியின் வைரமும் தங்கமும் நடுவில் ஒரு சுவரை எழுப்பியிருந்தது. அவளுடைய வெற்றுக் கழுத்தைக் காமாட்சி பார்ப்பதன் அர்த்தம் புரிந்து சகுந்தலா மீண்டும் புல்வெளியைப் பார்த்தாள்.

''கல்யாணமாயிடுச்சா, இனிமேதான் ஆகப் போகுதான்னு கேளுங்க'' என்று காமாட்சி மெல்லிய குரலில் சொல்ல, சரவணன் விடுவிடுத்தார்.

''வைஃப்னு சொல்றான், இது என்ன அசட்டுக் கேள்வி?''

புல்வெளியில் அமர்ந்திருந்த பெரியவர்கள் கும்பலில் ஒரு பரபரப்பு தோன்றிற்று. அங்கிருந்து இருவர் பீதி கவ்விய முகத்துடன் ஐலியுவை நோக்கி ஓடினார்கள். இரண்டு குழந்தைகள் 'மம்மி மம்மி' என்று பின் தொடர ஒரு வாலிபன் அவர்களை அலாக்காகத் தூக்கி அவர்கள் அலற அலற விரைந்து புல்வெளியைத் தாண்டி மறைந்தான்.

''எப்ப நடந்தது கல்யாணம்?''

அவள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். சிறுவர்கள் அலறல் இன்னும் ஒலித்தது. விவேக் அவளை ஏறிட்டுப் பார்த்து அவள் வாயைத் திறப்பதற்குள், ''ஒன்றரை வருஷத்துக்கு மேலாயிற்று. குழந்தை இருக்கிறது. ஏழு, எட்டு மாதம், இல்லை சகுந்தலா?'' என்றான்.

''ஆமாம்'' என்றாள் அவள் தன் பார்வையைப் புல்தரைக்குத் திருப்பி. சிநேகிதமில்லாத நீதிபதியின் எதிரில் நிற்பதுபோல அவளுக்குக் கூசிற்று. சரவணனும் காமாட்சியும் வெகு நேரம் தீவிர யோசனையில் மௌனமாக நின்றார்கள். மேற்கொண்டு அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள எந்த ஆர்வமும் காண்பிக்காமல், அவளை எடைபோடுவதுபோல குற்றவாளியாக நினைப்பதுபோல அந்த மௌனம் அவளைச்



சிறுமைப்படுத்திற்று. இவர்களுடைய சந்தேகங்களுக்கும் பயங்களுக்கும் நான் பொறுப்பில்லை என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள். விவேக்கிடம்,

"ராஜாவைப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று ஆங்கிலத்தில் பொதுவாகச் சொல்லிவிட்டு அவள் உள்ளே சென்றாள். நேற்று பார்த்த மாதிரிதான் ராஜா தெரிந்தான். இன்று புதிதாக காரணம் விளங்காத கோபமும் துக்கமும் அடிவயிற்றைச் சுழற்றிக் கொண்டு எழுந்தது. "எந்த நிலைமைக்கு நான் ஆளாகியிருக்கேன் பார்" என்று அந்தத் தோள்களை உலுக்க வேண்டும்போல இருந்தது. "எப்போ கண் திறப்பே?" என்று படிப்பறிவில்லாத பெண் போல வாய்விட்டுப் புலம்ப வேண்டும் போலிருந்தது. கண் திறக்காமலேயே போயிடுவியா? மனசிலிருக்கிற ரகசியங்களையெல்லாம் வெளியிலே கொட்டாமலே கொட்ட வேண்டிய அவசியமில்லேன்னு போயிடுவியா? எதையெல்லாம் சுமந்துண்டு போகப் போறே? இரண்டு வருஷத்துக் கோபம், காதல், கொள்கை சித்தாந்தம், பரத் மேல இருக்கிற பாசம் - எத்தனைன்னு தூக்க முடியும் உன்னாலே? வேண்டாம் - என்னை ஏமாத்தாதே. வாழணும்னு ஆசைப்படு. அப்பத்தான் பிழைப்பே. கண் திறந்துடு - எனக்கு யாருமேயில்லே உன்னை விட்டா. பிழைக்க வேண்டிய கட்டாயம் இருக்கு உனக்கு. அது உன் கடமையா நினைச்சுக்கோ. பீறிட்டுக் கொண்டு மனசுக்குள் வார்த்தைகள் பொங்கிப் பொங்கிச் சீறின.

சினிமா வசனமில்லை இது என்பதால் எந்த மாயாஜாலமும் நிகழாது என்று அவளுக்குத் தெரியும். புல்வெளியில் அமர்ந்த கூட்டம் பதைத்து எழுந்து ஐ.ஸி.யுவை நோக்கி ஓடியது போல வெளியில் அவள் சென்றதும் அவளையும் யாராவது உலுக்கி இங்கு அழைத்து வரலாம். தங்கள் மேல் இருந்த கோபம் தணியாமலே பிள்ளை போய்ச் சேர்ந்தான் என்கிற துக்கத்தோடு அவனுடைய அப்பா அம்மா ஊர் போய்ச் சேர்வார்கள். அவளையும் பரத்தையும் குடும்பத்தின் அங்கத்தினர்களாக அங்கீகரிக்காமல், மகனே போய்விட்டான், அப்புறம் வேறே என்ன உறவு வைச்சிருக்கு என்று அந்த அம்மாள் சொல்லலாம். நட்பில்லாவிட்டால் உறவில்லை. உறவில்லாவிட்டால் நட்பு ஏற்படாது.

கல்யாணம் ஆயிடுச்சா, இனிமேதான் ஆகப் போகுதா?

அவள் ராஜாவின் முகத்தைப் பாத்தாள். 'அதைச் சொல்லவாவது நீ கண் விழிக்கணும்.' ஓ, கடவுளே, பிரச்னை இப்ப அது இல்லே என்று அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். ஆனால் கண்ணீர் பிரவாகமாகப் பெருக்கெடுத்ததைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஆஸ்பத்திரி கோவிலிலிருந்த சாமியின் தோளை உலுக்கி இரண்டு திட்டுதிட்ட முடிந்தால், முட்டி மோதமுடிந்தால் மனசில் பொங்கும் ஆவேசம் குறையலாம். ஐந்து வயதிலிருந்து பிரச்னைகளை எதிர்கொள்வதும், அதைச் சமாளிக்கும் வழிகளை வகுப்பதுமாகவே வாழ்வு அவளை நகர்த்திக் கொண்டு போவது ஏன் என்று கேட்க வேண்டும். 'ஒவ்வொருத்தருடைய ஜாதகம் அப்படி' என்பாள் பாட்டி: 'நீ சீட்டுக்கட்டை மாத்திப்போடு. அசகாய சூரத்தனம் செய் - இங்கே என்ன எழுதியிருக்கோ அதுதான் நடக்கும்" என்று நெற்றியைக் காண்பிப்பாள். அப்ப சாமி எதுக்கு? அது ஓர் ஊன்றுகோல், கைத்தடி. இந்தா பிடித்துக்கொள். விழுந்தாலும் காயம் அதிகம் படாது. உள்ளத்தில் அதை வசியம் செய்யத்தான் அந்தக் கைத்தடி பாட்டிக்கே கடைசியில் அந்த விளக்கத்தில் நம்பிக்கை இல்லை. மனித உறவுகளே நிரந்தரம் என்று நினைத்து உழைத்து ஓடாகிப் போனவள் விரக்தியின் பாதாளத்தில் விழுந்ததால் கண் மூடுகையில் சாமி பெயரை உச்சரிக்கவில்லை. சகுந்தலாவிடமும் பேசவில்லை. எந்த ஊன்று கோலும் தேவைப்படவில்லை. கடந்த ஒன்றரை ஆண்டுகளில் அனுபவித்த சந்தோஷத்தைப் பாட்டிக்குத் தெரிவிக்க முடியாமற் போனது சோகம். ப்ரியம், நேசம், என்கிறது உண்மை பாட்டி. காதல் என்கிறது சத்தியம். அது ஒரு பஞ்சாபி டாபாவில் பூத்தாலும். சினிமாவிலே பேசறமாதிரி இருக்கு என்றிருப்பாள் காதலை அனுபவித்திராத பாட்டி. நா பேசறது சினிமா இல்லே. நிஜம். அன்புங்கறது நிஜம். அதை நம்பித்தான் இருக்கேன். ராஜா கண் திறந்துட்டா எல்லா கஷ்டமும் தீர்ந்துடும்னு நா நம்பறேன். வெளியிலே உட்கார்ந்திருக்கிறவர்களுடைய சந்தேகங்கள், கோபங்கள் உள்பட.

வெளியில் சென்று அவர்களைப் பார்க்க தெம்பில்லை இப்போது. ஐ.ஸி.யு.வில் ராஜாவின் கட்டில் அருகிலேயே இருந்த ஸ்டூலில் உட்கார்ந்திருக்கலாம் போல் இருந்தது. எந்த நிமிஷத்திலும் அவன் கண் திறக்கலாம். கண் திறந்ததும் அவன் என்னைத்தான் தேடுவான். இனிமேல் திருடனைப் போல் எந்த வியாதியும் உனக்குள் நுழைவதை நான் அனுமதிக்கமாட்டேன் என்று அவனிடம் சொல்ல வேண்டும். உனக்குக் கவசமாக இருப்பேன்.

"நேத்து நான் மெகா சைஸ் இடியாப்பம் தின்கிறமாதிரி கனவு கண்டேன்..."

"ஓகோ..."

"விடிஞ்சதும் பார்த்தா கொசுவலையைக் காணோம்!"

— தஞ்சை தாமு



புராணகால சாவித்திரி மாதிரி - என்க்குப் புரி யறது இப்ப, சாவித்திரி எப்படிப் பரிதவிச்சி ருப்பாள்னு. நா டாக்டர் ஷர்டைப் பிடிச்சு நேத்து உலுக்கின மாதிரி எமனுடைய சட்டையை உலுக்க நினைச்சுதான் ஏழு லோகத்துக்கும் அவனைப் பின் தொடர்ந்து ஓடியிருப்பாள். ராஜாவுக்கு ஏதாவது ஆனால் கோர்ட்டுக்குக் கூட ஓட முடியாது நீதி கேட்க - டாக்டரே வேறு ஆளை நம்பியிருக்கிறார் - ஸாரி மிஸஸ் ராஜா - வி டிட் அவர் பெஸ்ட்.

சகுந்தலா பித்துப் பிடித்ததுபோல கண்களை மூடிக் கொண்டு தனக்குள் புலம்பிக் கொண்டிருந்தாள். பிழைச்சு எழுந்துடு. பரத்தைப் பார்த்துக்கற மாதிரி உன்னைப் பார்த்துப்பேன். இனிமே நீ கார் ஓட்ட வேண்டாம். டிரைவர் ஏற்பாடு செய்கிறவரை நானே உன்னை ஆபீஸ்லே விடுவேன். கொஞ்சம் உனக்குத் தெம்பு வந்ததும் எங்கேயாவது ஹாலிடே போகலாம். போகணும்னு நாம ரொம்ப நாளா ப்ளான் பண்ணின கோவாவுக்குப் போகலாம். நிலா வெளிச்சத்திலே கடற்கரையிலே விடிய விடிய கூச்சமில்லாம கட்டிப் பிடிச்சு டான்ஸ் ஆடலாம். வாழ்க்கையுடைய ஒவ்வொரு விநாடியையும் இனிமே அனுபவிக்கணும். ஒரு விநாடிகூட வீணாகிப் போகக் கூடாது. சட்டென்று உடைந்து போனவளாய் இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு விசித்து விசித்து அவள் அழ ஆரம்பித்தாள்.

யாரோ தோளைத் தொட்டார்கள். "உஷ், பேஷண்டுக்கு தொந்திரவு ஆகும். இங்கே உட்காரக் கூடாது, எழுந்திருங்கள்" என்றாள் நர்ஸ்.

"ப்ளீஸ் இங்கேயே இருக்கிறேன் சிஸ்டர்" என்று அவள் கெஞ்சினாள். "தொந்தரவு செய்யமாட்டேன்."

"கூடாது மேடம். டாக்டர் வந்தால் கோபிப்பார்."

அவளுடைய கஞ்சி போட்ட வெள்ளை மார்பில் முகத்தைப் புதைத்து அழவேண்டும். போலிருந்தது. இவரைவிட்டால் எனக்கு உலகில் யாருமேயில்லே சிஸ்டர் - சிஸ்டரின் கை இன்னும் அவள் தோள்மேல் இருந்தது. அவள் பேசாமல் எழுந்தாள்.

வெகுநேர மௌனத்திற்குப் பிறகு, சரவணன் நிதானமாக வார்த்தைகளைக் கோத்து விவேக்கைப் பார்த்துக் கேட்டார்.

"ஸோ- ராஜாவுக்குத் திருமணம் ஆகியிருக்கிறது. குழந்தையும் இருக்கிறது."

குற்றச்சாட்டைப் போல் தொனித்த அந்தக் கேள்வியின் உள் அர்த்தம் என்னவாக இருக்கும் என்று யோசித்தவனாய், "யெஸ் ஸார்" என்றான் விவேக்.

"வேடிக்கை!" என்றார் சரவணன் அதே த்வனியுடன். "எங்களுக்கு அவன் தெரிவிக்கவேயில்லை. இந்தக் காலத்துப் பையன்களை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை."

இதற்குத் தன்னிடமிருந்து என்ன பதில் இவர் எதிர்பார்க்கிறார் என்ற குழப்பத்துடன் விவேக் நின்றான். காமாட்சி தமிழில் முணுமுணுத்தாள்.

"முகத்திலே முழிக்காதேன்னீங்க. உங்களுக்கு எதுவும் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லேன்னு இருந்துட்டான் போல இருக்கு. உங்களாலே என்னையும் ஒதுக்கி வைச்சுட்டான்-?" அவள் மீண்டும் அழுதுவிடுவாள் போலிருந்தது.

"இப்ப என்ன அதைப்பத்திப் பேச்சு?" என்றார் சரவணன் சற்று அதட்டலான குரலில். விவேக்கைப் பார்த்து,

"ராஜாவின் ஆபீஸில் வேலை செய்கிறாளா?" என்றார்.

"இல்லை. சகுந்தலா ஒரு விளம்பர நிறுவனத்தில் வேலை செய்கிறாள்."

"அப்போது குழந்தையை யார் பார்த்துக் கொள்கிறார்கள்?"

"க்ரெஷ்ஷில் விடுகிறாள்."

"ஓ?" என்றார் சரவணன் அதை நம்ப முடியாதவர் போல். "அவளுடைய பெற்றோர்கள் எங்கே இருக்கிறார்கள்..?

"அவளுக்கு யாருமில்லே" என்றான் விவேக் சுருக்கமாக.

சரவணன் காமாட்சியைப் பார்த்து, "ஒரு அநாதை எந்தப் பொண்ணு" என்றார்.

"நான் நினைச்சேன் அப்பவே. உருவிவிட்ட மாதிரி அது நிக்கறதைப் பார்த்து" என்றாள் காமாட்சி.

இவர்கள் பிரச்னை என்ன என்று புரியாமல் விவேக் திகைத்தான். இவர்களுக்கு ராஜாவைப் பற்றின தகவலைத் தெரிவித்ததே புதிய பொறுப்புகளை அவர்கள்மேல் சுமத்த என்று அவர்கள் நினைக்கலாம் என்று சட்டென்று அவனுக்குப் புரிந்தது. எத்தனை விநோதமான, அவன் நினைத்துப் பார்க்காத கோணம் இது என்று சங்கடமேற்பட்டது. அவர்கள் அப்படிச் சந்தேகப்படுவதில் நியாயம் இருந்ததாக நினைக்கத் தோன்றிற்று.

"சகுந்தலாவும் மதராஸிதான்" என்றான் அவன் சமாதானப்படுத்தும் முயற்சியில். "தமிழ் பேசுபவள்."

"தமிழ்ப் பெண்ணாம் அது!" என்றார் சரவணன் மனைவியிடம்.

"பார்த்தா வடக்கத்திப் பொண்ணு மாதிரி இருக்கு" என்றாள் காமாட்சி.

விவேக் இலேசாக ஒரு பெருமூச்சு விட்டான். டாக்டர் சென்குப்தா நான்கைந்து இளம் இன்டர்ன்களுடன் வந்து கொண்டிருந்தார். விவேக் சற்றுமுன்னால் நகர்ந்து வணக்கம் தெரிவித்து, "டாக்டர் ராஜமோகனுடைய பெற்றோர்கள் வந்திருக்கிறார்கள்" என்றான்.

சரவணனை அவருக்கு அறிமுகப்படுத்தியதும், டாக்டர் அவரது கையைக் குலுக்கினார்.

"நீங்கள் வந்தது எனக்கு சந்தோஷம். ராஜமோகனுடைய உடல்நிலை சீராக இருக்கிறது. இன்று இரவுக்குள் பிரக்ஞை வந்துவிடும் என்று நம்புகிறேன். வருவதற்கான அறிகுறிகள் இருக்கின்றன. ஆனால், விபத்தைப் பற்றி உங்களுக்குத் தெரிவிக்காமல் இருக்கக் கூடாது என்று நினைத்தேன். உங்கள் குடும்பத்து ஹெல்த் ஹிஸ்டரியும் தேவைப்பட்டது."

"ஆமாம். விவேக் சொன்னார்" என்றார் சரவணன். "எனக்கு, என் அப்பா, தாத்தாவுக்கு எல்லாம் மாரடைப்பு வந்திருக்கிறது. ஆனால் 45 வயதுக்கு மேல். ராஜாவுக்கு 35கூட ஆகவில்லை."

டாக்டர் சிரித்தார். "நீங்கள் எல்லாரும் அனுபவிக்காத அழுத்தங்கள், வேலையில் நெருக்கடிகள் இந்தக் காலத்து இளைஞர்கள் அனுபவிக்கிறார்கள் என்பதை நீங்கள் மறக்கக்கூடாது."

சரவணனுடன் பேசிக் கொண்டே டாக்டர் நடந்தார். "உங்கள் மகனைக் கடைசியாக எப்பொழுது பார்த்தீர்கள்?"

"இரண்டு வருஷத்துக்கு மேலாயிற்று."

டாக்டர் வியப்புடன் அவரைப் பார்க்க, சொல்வது அவசியமா என்ற கேள்வி சரவணனுக்குள்ளே தோன்றும்போதே வாய் தானாகப் பேசிற்று.

"எங்களுடன் சண்டை போட்டுக் கொண்டு போனான்."

டாக்டர் அவரது தோளைச் சிநேகிதமாகத் தட்டினார்.

"எல்லா குடும்பத்திலேயும் நடக்கிறதுதான் அது. செய்தி கிடைத்ததும் பறந்து வந்தீர்கள். பிரக்ஞை வந்ததும் ராஜமோகனுக்கு பழைய கோபம் மறந்து போகும் - டோன்ட் ஒர்ரி. என்னுடைய அஸிஸ்டென்ட் கொடுக்கிற சில கேள்விகளுக்குப் பதில் எழுதிக் கொடுங்கள் கேஸ் ஹிஸ்டரிக்குத் தேவை.

டாக்டரின் அலுவலகத்துக்குச் சென்று சரவணன் எழுதிக் கொடுத்துவிட்டுக் காமாட்சி

உட்கார்ந்திருந்த இடத்துக்கு வந்தபோது மனசு சற்று இலேசாகி இருந்தது.

"ராஜாவுக்குப் பழைய கோபம் மறந்து போகும்." அது சாத்தியமா? சாத்தியமென்றால் அவரும் மறக்க வேண்டும். சற்றுமுன் ராஜாவை ஐ.ஸி.யு. படுக்கையில் பார்த்தபோது, தன்னில் ஓர் ஆதாரப்பகுதி விழ்ந்ததுபோல துணுக்குற்றது. வாழ்வின் அநித்தியத்துக்கு முன் தான் தூசாகிப் போனதுபோல் உடல் கூசிற்று.

"என்ன சொல்றாங்க டாக்டர்?" என்றாள் காமாட்சி.

"உயிருக்கு ஆபத்தில்லேங்கறாரு. இன்னிக்குள்ள பிரக்ஞை வந்துரும்கறாரு. வா, இங்க கான்டீன் இருக்கும். காபி டிபன் சாப்பிடலாம். பசிக்குது." என்றார் சரவணன். காமாட்சி வியப்புடன் அவரைப் பார்த்தாள். அவருடைய குரலில் ஒரு வித்யாசம் இருந்தமாதிரி இருந்தது. என்னவாக இருக்கும் என்று அவளால் ஊகிக்க முடியவில்லை. அவள் தயக்கத்துடன் சொன்னாள்.

"அந்தப் பெண் உள்ளே போனது; இன்னும் வரல்லே."

"அதும்பாட்டுக்கு இருக்கட்டும் - முன்னே பின்னே தெரியாதவங்க நாம."

"அதுவும் சரிதான்" என்று அவள் எழுந்தாள். சற்று எட்டி நின்றிருந்த விவேக்கிடம் சரவணன் தாங்கள் இருவரும் கான்டீனுக்குப் போவதாகச் சொல்லிக் கிளம்புகையில் அவர்கள் சகுந்தலாவைப் பற்றி ஏதும் பேசாததை அவன் கவனித்தான்.

சகுந்தலா ஐ.ஸி.யு.வின் வாசலுக்கு வெளியில் வந்தபோது அவளுடைய அழுது சிவந்திருந்த முகத்தைப் பார்த்து அவனுக்கு வருத்தமேற்பட்டது. விவேக்கைப் பார்த்து,

"அவர்கள் எங்கே?" என்றாள்.

"கான்டீனுக்குப் போயிருக்கிறார்கள்" என்றான் அவன் இலேசாக.

"என்னை அவர்களுக்குப் பிடிக்கல்லே!" என்றாள் அவள் மெல்லச் சிரித்து.

"இது, அசட்டுத்தனம்" என்றான் அவன் ஆறுதலாக. "உன்னைப்பத்தி எந்த அபிப்ராயமும் உருவாக முடியாத சமயம் இது."

"அதுவும் உண்மைதான்" என்றாள் அவள் தலைகுனிந்து. பிறகு நிமிர்ந்து இலேசாகச் சிரித்து இந்தியில் தொடர்ந்தாள். "என் பாட்டி ஞாபகம்தான் எனக்கு எப்பவும் வருது. கஷ்டமான சமயங்கள்லே, சாமிதான் கண் திறக்கணும்னு சொல்லுவா. எனக்கு ராஜா கண் திறந்தாலே போதும்!"

அன்று இரவு பரத்தைத் தூங்கச் செய்து கொண்டிருந்தபோது ஆஸ்பத்திரியிலிருந்து கதிர் போன் செய்தான், ராஜா கண் திறந்து விட்டதாக.

(தொடரும்)

# கல்கி






## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

## சுவரொட்டி சர்ப்ரைஸ்!

**ச**மீபத்தில் விஷமக்கார ஆசாமிகள் யாரோ கொடுங்கோலன் முசோலினியைத் துதிபாடி, ரோம் நகரம் முழுவதும் போஸ்டர்கள் அடித்து ஒட்டி, கலக்கியிருந்தனராம். இதே பாணியில், நம்ம ஊரிலும் என்ன வாசகம் கொண்ட போஸ்டர் ஒட்டப்பட்டால் தமிழ் மக்கள் இன்பத் திகைப்பில் மூழ்குவார்கள்? கற்பனை செய்து எழுதி அனுப்புங்கள். சிறந்த இரண்டு தமாஷ் போஸ்டர்களுக்குத் தலா நான்கு கிராம் தங்கம். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

புன்னகைப் போட்டி - **14**

என்று குறிப்பிட்டு உங்கள் சுவரொட்டி சர்ப்ரைஸை எழுதி, முகவரியைக் குறிப்பிடுங்கள். தபால் உறை அல்லது தபால் கார்டில், கீழே உள்ள கூப்பனை வெட்டி ஒட்டி அனுப்புங்கள்.

கடைசி தேதி : **27.5.2002**

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 097.**



வேண்டுதலின் பொருட்டு கோயிலுக்குக் காணிக்கையாகப் பசுக்களைத் தருவது இந்துக்களின் வழக்கம். பின்னர் அவற்றை, கோயில் நிர்வாகம் பகிரங்கமாக ஏலம் விட்டு விடும்.

கடந்த நான்கைந்து ஆண்டுகள் வரை தானம் தரப்படும் கோயில் பசுக்கள் பின்னாளில் என்னவாகின்றன என்கிற கேள்வி எழாமலே இருந்தது. சில ஆன்மிக அமைப்புகளின் விழிப்புணர்வு பிரசாரத்தினால், கோயில் பசுக்கள் சில இடைத் தரகர்களால் பொது ஏலத்தில் எடுக்கப்பட்டு, நேரடியாகவோ, மறைமுகமாகவோ கசாப்புக் கடைகளுக்கு அனுப்பப்படுகின்றன என்கிற கசப்பான உண்மை வெட்டவெளிச்சமானது.

ஆங்காங்கே பசு வதைத் தடுப்பு சங்கங்கள் தோன்றின. சமீபத்தில், சென்னை உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட ஒரு பொது நல வழக்கின் வாயிலாக, 'பக்தர்கள் கோயிலுக்குக் காணிக்கையாகத் தரும் மாடுகளை இனிமேல் ஏலம் விடக்கூடாது என்றும், கறவை நின்ற பசுக்களை வைத்து வளர்க்க விரும்பும் கோசாலைகளுக்கு தானமாகத் தரலாம் எனவும் பரிந்துரை செய்யப்பட்டது.

ஸ்ரீரங்கம் கோயிலில் எழுபது மாடுகள் சேர்ந்து விடவே, கோயில் நிர்வாகம் அவற்றை என்ன செய்வது என யோசித்தது. அப்போது, ராகவன் என்பவர் தம்மை 'ஸ்ரீ காஞ்சி காம கோடி பீட அகில பாரத கோ சம்ரக்ஷண சங்க'த்தின் தலைவர் என கோயில் நிர்வாகத்திடம் அறிமுகம் செய்து கொள்கிறார். சென்னை உயர்நீதி மன்றத்தின் பரிந்துரையைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, தாம் தலைவராக இருக்கும் பசு பாதுகாப்பு சங்க லெட்டர் பேட் தாள் ஒன்றில் கோயில் நிர்வாகத்திற்கு ஒரு விண்ணப்பம் செய்கிறார்.

அதில், தம்முடைய சங்கம் திண்ணியத்தில் நிர்வகித்து வரும் கோசாலைக்கு ஸ்ரீரங்கம் கோயிலின் எழுபது மாடுகளைத் தானமாகத் தருமாறும், அவற்றை, மேற்குறிப்பிட்ட கோசாலையில் வைத்து பராமரிப்பதாகவும் உறுதி தருகிறார். ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாக அதிகாரியை, திண்ணியம் கோசாலைக்கு ஒருநாள் அழைத்துச் சென்று காட்டுகிறார். ராகவனுடன் சென்று கோசாலையைப் பார்வையிட்ட கோயில் நிர்வாக அதிகாரி, குறிப்பிட்ட நபருக்கு, பசுக்களைத் தந்து விடலாமென முடிவெடுத்து, மேலிடத்துக்கு அனுமதி கேட்டு முறைபடி கடிதம் எழுதுகிறார். மேலிடமும் அதற்கு ஒப்புதல் அளித்து விடுகிறது.

ஸ்ரீரங்கம் கோயிலின் எழுபது மாடுகளை ராகவன் என்பவரிடம் கோயில் நிர்வாக அதிகாரி ஒப்படைத்து விடுகிறார். திண்ணியம் கோசாலைக்காக எழுபது மாடுகள் பெற்றுக் கொண்டதாக லெட்டர் பேடில் கையெழுத்திட்டு ரசீது தருகிறார் ராகவன். மீண்டும் 16.12.2001 அன்று இரண்டாவது கட்டமாக அதே திண்ணியம் கோசாலைக்காக அதே ராகவனிடம் இருபத்தியேழு மாடுகளைத் தானமாக ஒப்படைக்கிறார் கோயில் நிர்வாக அதிகாரி. ஆக மொத்தம் தொண்ணூற்றி ஏழு பசுக்கள். எழுத்துபூர்வமாகப் பதிவாகி, திண்ணியம் கோசாலைக்குத் தானம் தரப்பட்டதாகச் செய்திகள் வெளியாகின.



கோயில் பசுதான சம்பவங்கள், பத்திரிகைச் செய்திகளை வைத்து, திண்ணியம்

கோசாலைக்கு நேரில் சென்ற நமக்கு அதிர்ச்சியூட்டும் தகவல்கள் காத்திருந்தன.

லால்குடியிலிருந்து பன்னிரண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது திண்ணியம் கிராமம். கடந்த மூன்றாண்டுகளாக 'ஸ்ரீ காஞ்சி சங்கர கோசாலை' என்ற பெயரில் பசு மடம் ஒன்று அங்கு இயங்கி வருகிறது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் மேற்பார்வையில் ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் சஷ்டி யப்த பூர்த்தி சாரிடபின் டிரஸ்ட் மூலமாகச் செயல்பட்டு வருகிறது. அதன் நிர்வாகியாக ஈஸ்வரன்ஜி என்றழைக்கப்படும் ஏ.ஜே. ஆம்ர வனேஸ்வரன் என்பவர் இருந்து வருகிறார்.

அவரோ, ஏற்கெனவே தாங்கள் வைத்தி ருக்கும் அறுபது மாடுகள் மட்டுமே கோசாலை யில் இருப்பதாகவும், ஸ்ரீரங்கம் கோயில் மாடு களைப் பெற்றுக் கொள்ளவே இல்லை எனவும் கூறினார்.

அப்படியானால், பசுக்கள் மாயமாகப் போனது எப்படி?



ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாக அதிகாரியும், இணை ஆணையருமான க. இராஜநாயகம் அவர்களைச் சந்தித்தோம். 'திண்ணியம் கோசாலைக்கு ஸ்ரீரங்கம் கோயில் மாடுகள் போய்ச் சேராதது' குறித்து அவரது கவனத்திற் குக் கொண்டு சென்ற போது, அவர் ராகவன் என்பவர் தந்த போலியான விண்ணப்பத்தை யும், ரசீதையும் நம்மிடம் காட்டி, திண்ணியம் கோசாலைக்குத்தான் மாடுகள் அனுப்பப்பட் டுள்ளன என திட்டவட்டமாகக் கூறினார்.

# ம்...மா!

## — ஸ்ரீரங்கம் கோயில் மாடுகளின் பரிதாபம்!

இது ஒருபுறமிருக்க, திருச்சி மாவட்ட ஹனுமன் சேனா அமைப்பினர் ஸ்ரீரங்கம் கோயில் பசு தான மோசடி குறித்து ஸ்ரீரங் கத்தில் ஒரு கண்டன ஆர்ப்பாட்டம் செய்த னர். அப்பொழுது ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாக அதிகாரி மீண்டும் பத்திரிகை வாயிலாக 'திண்ணியம் கோசாலைக்குத்தான் பசுக்கள் தரப்பட்டன!' என பேட்டி தந்திருந்தார். ஹனுமன் சேனா அமைப்பு, இந்த மோசடி குறித்து அறிவிப்புத் தட்டி ஒன்றை வைத்தது. அதில் திண்ணியம் கோசாலைக்கு ஸ்ரீரங்கம் கோயில் மாடுகள் வந்தனவா என பொதுமக்களையே கேட்கச் சொல்லி திண்ணியம் கோசாலையின் தொலைபேசி எண்ணைக் குறிப்பிட்டிருந்தது.

பத்திரிகைச் செய்தி, ஹனுமன் சேனாவின் ஆர்ப்பாட்டம் ஆகியவற்றைக் கவனத்தில் கொண்ட திண்ணியம் கோசாலையின் நிர்வாகி ஏ.ஜே. ஆம்ரவனேஸ்வரன், ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாக அதிகாரிக்கு ஒரு மறுப்புக் கடிதம் எழுதி அனுப்பினார். அதில் பசுக்களை தங்கள் கோசாலைக்குக் கேட்கவில்லை என்றும், பெற்றுக் கொள்ளவில்லை என்றும் குறிப்பிட்டி ருந்தார்.

அவரது மறுப்புக் கடிதத்தை அடிப்படை யாகக் கொண்டு, ராகவன் என்பவர் மீது ஸ்ரீரங்கம் காவல் நிலையத்தில், கோயில் நிர்வாக அதிகாரி புகார் மனு கொடுத்திருந் தார். அதனால் இப்பொழுது ராகவன் சிறைக்குள் இருக்கிறார். ஆனால், அந்த தொண்ணூற்று ஏழு பசுக்களின் கதி என்னவா யிற்று என்பதுதான் யாருக்கும் தெரியவில்லை!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# தமிழ் சினிமாவில் தலால் ஆஸ்மி!

'சாம்பியன்', 'ச்சோர்', 'கிராந்தி' போன்ற சூப்பர்ஹிட் ஹிந்திப் படங்களை எடுத்து பாலிவுட்டைக் கலக்கிய தமிழ் இயக்குனர் மகாராஜனை 'வல்லரசு' படத்துக்காக மறுபடியும் தமிழுக்கு இழுத்து வந்தார் விஜய்காந்த். ஆனால் பாலிவுட்காரர்கள் அவரை விடுகிற மாதிரியில்லை போலும். "வல்லரசு படத்தையே ஹிந்தியில் இயக்குங்கள்.. நானே நடித்துத் தயாரிக்கிறேன்" என்று சன்னி தியோல் சொல்ல.. இப்போது வல்லரசு 'இந்தியனாகி' சில்வர் ஜூப்ளி கொண்டாடிக் கொண்டிருக்கிறது. இதற்கிடையில மகாராஜனுக்கு மறுபடியும் தமிழ் வெறி பிடிக்க, அர்ஜுன், லாரா தத்தா காம்பினேஷனில் 'அரசாட்சி' படத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

"மக்களாட்சியில் குற்றவாளிகளுக்கு உடனடியாக தண்டனை கொடுக்கப்படுவதில்லை. நீதிமன்றத்தில் வாய்தா வாங்கியே தப்பி விடுகிறார்கள். அதற்குள் பிரதிவாதியே வெறுத்துப் போய் வழக்கிலிருந்து வெளியேறி விடுவார். ஆனால் அன்றைய அரசாட்சியில், உடனுக்குடன் தீர்ப்பு, தண்டனை எல்லாம் இருந்தது. அதுபோலவே நமது நாயகன் உடனுக்குடன் தண்டனை தரும் தனி நபர் தர்பாரை நடத்துபவன். அவனது தந்தையோ தீர விசாரித்து தீர்ப்பு தரும் ஒரு நேர்மையான நீதிபதி. இவர்கள் இருவருக்கும் இடையில் நடக்கும் போராட்டம்தான் கதை" என்கிறார் மகாராஜன்.

நீதிபதியாக நடிப்பது யார்? 'வல்லரசு' படத்தில் வில்லனாக அறிமுகப்படுத்தப்பட்ட இயக்குனர் வாசு. வாசுவுக்கு தமிழ்ப் படங்களில் மட்டுமல்ல... மலையாளப் படங்களிலும் இப்போ நல்ல மவுசு.

"தலால் ஆஸ்மி காதலுக்காக நம்மோட மூன்று ரோஜாக்களும் போராடுறாங்க. இந்த புதிய மூவ் படத்துக்கு ஹார்லிக்ஸ் மாதிரி ஆயிடுச்சு. தெலுங்கு, கன்னடப் படங்களில்





வளர்ந்து வரும் நாயகி ரேகாவைத்தான் தலால் ஆஸ்மியா நடிக்க வெச்சிருக்கோம்" என்றார் 'த்ரீ ரோசஸ்' இயக்குநர் பரமேஷ்வர்.

நல்லா விசாரிச்சுடுங்க! இயக்குனர் செல்வமணி இன்னொரு டிராக்குலே இதையே படமா எடுத்துட்டிருக்கப் போறார்.

'தமிழன்' ஜெயித்த சந்தோஷத்தில் இப்போ 'யூத்' என்ற லவ் ஸ்டோரியை, சுடச்சுட

சினி சிப்ஸ்



தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள். "இது கொஞ்சம் முரட்டுத்தனமான காதல்" என்று ஆரம்பித்தார் விஜயசேஷமஹாலில் கதாநாயகி கல்யாணத்தில் புகுந்து கலாட்டா பண்ணிக் கொண்டிருந்த விஜய். இந்தப் படத்திற்காக மும்பையிலிருந்து சந்தியா என்ற மாடலைப் பிடித்து வந்து நாயகி ஆக்கி விட்டார்களாம். ஒவ்வொரு படத்துக்கும் ஒரு நாயகியை அறிமுகப்படுத்துவதுதான் விஜய்யின் யூத் மனப்பான்மை!

தன்னையொரு ஹீரோவாக 'பார்த்தாலே பரவசம்' நிலைநிறுத்தி விடும் என்று எதிர்பார்த்த லாரன்ஸுக்கு ஏமாற்றம். சற்றும் மனம் தளராமல் தீவிர நடன இயக்குனராகப் பணிபுரிந்து கொண்டிருக்கும் லாரன்ஸ் சௌத்ரியின் 'சூப்பர் குட்' தயாரிக்கும் 'அற்புதம்' படத்தில் அமைதியாக நடித்துக் கொண்டிருக்கிறார், அட! ஹீரோவாகத்தாங்க! கதையைக் கேட்டு விட்டு 'அற்புதம்!' என்று அசந்து போன லாரன்ஸ் அந்தப் படத்தின் இயக்குனருக்கு 'அற்புதன்' என்று பெயர் வைத்து விட்டாராம். ரொம்ப அற்புதமாயிருக்குல்லே!

– ஸ்ரீசக்கரம்

# எப்பவும்



**ஒன்றரை செஞ்சுரி போட்டிருக்கிறது இந்திய ரயில்வே. அதைப் பற்றிய படு சுவாரசியமான தகவல்களின் தொகுப்பு இதோ :**

• மிகச் சிறிய பெயர் கொண்ட இந்திய ரயில்வே ஸ்டேஷன் எது தெரியுமா? இப் (Ib) தென் கிழக்கு ரயில்வேயில் ஹௌரா - நாக்பூர் ரூட்டில் உள்ளது.

• மிக நீண்ட பெயர் கொண்ட ஸ்டேஷன்: வேங்கட நரசிம்ம ராஜுவாரி பேட்டா (மொத்தம் இருபத்தி எட்டு எழுத்துக்கள்) தெற்கு ரயில்வேயில், அரக்கோணம் - ரேணிகுண்டா ரூட்டில் இருக்கிறது.

• இந்திய ரயில்வேயில் மிக நீண்ட நேரம் பயணம் செய்கிற ரயில் எது? ஜம்முதாவிக்கும் கன்யாகுமரிக்கும் இடையே ஓடுகிற ஹிம்சாகர் எக்ஸ்பிரஸ்தான். இதன் பயண தூரம் : 3751 கி.மீ. பயண நேரம் 74 மணி 55 நிமிடம். திருமணமாகி, ஹனிமூனுக்கு, இந்த ரயிலில் காஷ்மீருக்குப் போனால், கைக்குழந்தையுடன் ஊர் திரும்பி வரலாம் என்பது இந்த ரயில் குறித்த பழைய பிரபலமான ஜோக்! இந்த ரயிலுக்கு இன்னொரு சிறப்பும் உண்டு. இதன் பாதை பதினோரு மாநிலங்கள் யூனியன் பிரதேசங்களைக் கடந்து செல்கிறது.

• நாக்பூரிலிருந்து அஜ்னி என்ற ஊருக்கு தினசரி ஒரு ரயில் சென்று வருகிறது. அஜ்னியில் உள்ள ரயில்வே ஒர்க்ஷாப்பில் வேலை செய்கிற ரயில்வே தொழிலாளர்களுக்காகவே விடப்படும் இந்த ரயிலின் மொத்த பயண தூரம் வெறும் மூன்று கிலோ மீட்டர். பயண நேரம் இருபது நிமிடம். இதுதான் மிக மெதுவாகச் செல்லும் பயணிகள் ரயில்.



• குர்லா - பாட்னா எக்ஸ்பிரஸ் பற்றி ஒரு சிறப்புத் தகவல் : குர்லாவில் உள்ள திலகர் ரயில் நிலையத்திலிருந்து புறப்பட்டால், அடுத்து ஜபல்பூரில் தான் ரயில் நிற்கும். இரண்டு நிலையங்களுக்கும் இடையே 976 கி.மீ தூரம்!

• இந்திய ரயில்வே சரித்திரத்திலேயே மிக அதிக வேக சாதனை என்பது மணிக்கு 184 கி.மீ. டெல்லி - கசியாபாத் தடத்தில், 2000வது ஆண்டில், பரிசோதனைக்காக, சில பயணிகள் பெட்டிகளை இணைத்து - இஞ்சின் பூட்டி ஓட்டிப் பார்த்தார்கள். நார்மலாக அதிகபட்சம் மணிக்கு 120 கி.மீ.தான்.

• கௌஹாத்தி - திருவனந்தபுரம் ரயிலில், ஒவ்வொரு பயணத்தின் போதும், ஐந்து முறை இஞ்சின் மாற்றப்படுகிறது.

• ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் நின்று பயணப்படுவதில் நெம்பர் ஒன் இடம் ஹௌரா - அமிர்தசரஸ் எக்ஸ்பிரஸ் ரயிலுக்குத்தான். மொத்தம் 115 ஸ்டேஷன்களில் இது நிற்கிறது. மீட்டர்கேஜில் ஓடும் அஜ்மீர் - புரானா பாசஞ்சர் ரயில், முன்பு அஜ்மீருக்கும், செகந்திராபாதுக்கும் இடையில் ஓடிக் கொண்டிருந்தபோது, இடையில் 121 ஸ்டாப்கள் இருந்தன.

• இந்தியாவின் மிக மிக பிஸியான ரயில்வே ஸ்டேஷன் எது தெரியுமா? லக்னோதான். தினமும் இங்கு வரும், புறப்படும், மற்றும் இதன் வழியே செல்லும் ரயில்கள் அறுபத்து நான்கு.

• நம்நாட்டின் மிக நீளமான ரயில் பிரயாக் ராஜ் எக்ஸ்பிரஸ். 26 கோச்கள்.

• குறித்த நேரத்திற்கு வராமல் சரித்திரம் படைத்த ரயில் ஒன்றும் இருக்கிறது. கௌஹாத்திக்கும், திருவனந்தபுரத்துக்கும் இடையில் ஓடும் கௌஹாத்தி எக்ஸ்பிரஸ்தான் அது. ரயிலின் பயண நேரம் 71 மணி 25 நிமிடம் என்கிறது ரயில்வே அட்டவணை. ஆனால், இது குறைந்தபட்சம் இருபது மணி நேரம் லேட் என்பது வாடிக்கை. முதல் நாள் வர வேண்டிய ரயில் இருபத்து நாலு மணி நேரம் தாமதமாக மறுநாள் வந்த சந்தர்ப்பங்கள் ஏராளம்.

1995ல் டைம்ஸ் ஆப் இந்தியாவில், இந்த ரயில் குறித்து ஒரு கட்டுரை வந்தது. அதில், இந்த ரயிலின் பத்தாண்டு சரித்திரத்தில், ஒரு தடவை கூட, குறித்த நேரத்தில் வந்தது இல்லை என்று குறிப்பிட்டிருந்தார்கள். இன்னும் கூட அதே நிலைமைதான்! அட! பாரம்பரியம் பாதுகாக்கப்படுகிறது.

• வாரணாசி - கொச்சி எக்ஸ்பிரஸ் ரயில், ரேணிகுண்டா வந்தவுடன் ஐந்து நிமிடம் நிற்கும். அடுத்து திருப்பதிக்குச் சென்று அரை மணி நேரம் நிற்கும். மறுபடி அதே ரூட்டில் திரும்பி ரேணிகுண்டா வரை வந்து, இருபது நிமிடம் நின்றுவிட்டு, அரக்கோணம் நோக்கிப் புறப்படும்! ஒரே பயணத்தின் போது ஒரு ரயில், ஒரே ஸ்டேஷனில், இரண்டு தடவை நிற்கும் விசித்திரம் இதில் மட்டுமே நிகழ்கிறது.

• நவபூர் என்ற ரயில் நிலையம் இரண்டு மாநிலங்களில் பரவி இருக்கிறது. (ஸ்டேஷன் ஏரியாவில் பாதி மகாராஷ்டிராவில் மீதி குஜராத்தில்) அது போல பவானி மண்டி (மும்பை - டெல்லி ரூட்) ஸ்டேஷன் ம.பி. ராஜஸ்தான் இரண்டிலும் அமைந்துள்ளது.

• டெல்லி - கான்பூர் அகல ரயில் பாதை ரூட்டில் உள்ளது ஹத்ரஸ் ரயில் நிலையம். இந்த ரயில் நிலையத்தில், அகல ரயில் பாதையின் குறுக்காக மீட்டர்கேஜ் பாதையும் உள்ளது. இதில் வரும் ரயில்கள், ஹத்ரஸ் ரயில் நிலைய வளாகத்தின் உள்ளேயே இருக்கும் ஹத்ரஸ் ரோடு என்கிற இன்னொரு ரயில் நிலையத்தில் நிற்கின்றன. ஆக, ஸ்டேஷனுக்குள்ளே இன்னொரு ஸ்டேஷன்.

• கர்ஜத் (வடாபாவு) லோனவாலா (முந்திரி சிக்கி) சோலாபூர் (பர்பி) மைசூர் (மசால் தோசை) ஹைதராபாத் (சிக்கன் பிரியாணி) எர்ணாகுளம் (நேந்திரங்காய் சிப்ஸ்) குண்டக்கல் (மாம்பழ ஜெல்லி) சென்னை சென்ட்ரல் (இட்லி-வடை) ராமேஸ்வரம் (இடியாப்பம்) புது டெல்லி (ஆலு சாட்) அமிர்தசரஸ் (லஸ்ஸி) விருதுநகர் (போளி) மணப்பாறை (முறுக்கு) ஸ்ரீவில்லிபுத்தூர் (பால் கோவா) என உணவு வகைகளுக்கும் பெயர் போன ஸ்டேஷன்கள் நிறைய உண்டு!

தொகுப்பு : **கௌதம்**




எத்தனை தவறுகள் எத்தனை பிழைகள்
எத்தனை எத்தனை செய்திருப்பேன்?
நித்தமும் கணமும் ஜாக்கிரதை
உணர்வில்
தவிர்க்க நினைத்தே தவறிழைப்பேன்.

கணத்தில் மாறும் உணர்வுக் குழப்பம்
கருத்தை மயக்கித் திசை திருப்பும்.
நினைக்கும் விருப்பம் நிறைவேறாது
நிகழ்வது எதிராய் நடந்துவிடும்.

நடந்ததை நினைத்தே வருத்திக்
கொள்வதில்
நாளும் பொழுது கடக்கிறது;
நடப்பதைச் சரியாய்க் கண்காணிப்பதில்
நானே தோற்பது தொடர்கிறது.

எப்படி, எதனால், இப்படி என்பதில்
தப்பிக்க மனசு முனைகிறது;
சப்பைக் கட்டாய்ச் சம்பவ நிகழ்வுகள்
சஞ்சலம் மட்டுமே வளர்கிறது.

பள்ளம் விழுந்து மேட்டில் ஏறிப்
பார்ப்பதில் அனுபவம் கிடைக்கிறது;
மறுபடி மறுபடி குழியில் சரிவதில்
மானுடம் தோற்றுப் போகிறது.

இந்தக் கழிவிரக்கக் கவிதைக்குப் பதில் கூறும் வகையில் ஓர் ஊக்கக் கவிதையை எழுதி அனுப்பலாம். சிறந்த ஒன்று பிரசுரமாகி பரிசு பெறும்...



# எட்டிப் பார்த்த பிஞ்சு முகம்!

ரிமோட் வினோத்

மழை நின்றும் தூறல் நிற்கவில்லை ஆப்கானிஸ்தானத்தில். தாலிபான் கொடுங்கோல் அகன்றாலும் ஏழை மக்களின் துன்பம் விலகக் காணோம். கண்ணி வெடிகளிலும் வெடிகுண்டு வீச்சுகளிலும் அங்கங்களை இழந்து நிற்கும் லட்சக்கணக்கான மக்களைப் பற்றியும் அவர்களுக்கு நிவாரணம் அளித்து வரும் நல்லவர்களைப் பற்றியும் நீண்ட நேரத்துக்கு நேஷனல் ஜியக்ராபிக் ஒளிபரப்பியது.

தாலிபான் ஆட்சியின்போது, உடல் முழுதும் பர்தா போர்த்தியிருந்தும் கொஞ்சம் கால் தெரிகிறது என்பதற்காக நாலைந்து பெண்களை நடுத்தெருவில் படீர் படீரென்று கைத் தடியால் காவலர்கள் அடித்த கொடுமை, கட்டிளம் காளையான மகனைப் பறி கொடுத்த தாய் நெஞ்சு பிளக்க அழுகிற நரகம்; மண்ணை அள்ளி அள்ளிப் போட்டு சமாதிகளை நிரப்பும் சோகம்; இருட்டில் புதைந்து கிடக்கும் அடுக்கடுக்கான அகதி முகாம்கள் -



இத்தனைக்கும் நடுவே, கூடாரத் துணிக்குப் பின்னாலிருந்து ஒரு பிஞ்சுக் குழந்தை பாதி முகம் காட்டுவதும், வெட்கப்பட்டுக் கொண்டு மறைவதும், மறுபடி எட்டிப் பார்ப்பதும் -

அப்பாடா! Every child comes with a message that god is not yet discouraged of man.

வீட்டிலே ஏகப்பட்ட பிரச்னை என்பதால் வீட்டுக்குப் போகாமல் வெளியிலேயே சுற்றிக் கொண்டிருந்தானாம் ஒருவன். மன்னி



பன்னிரண்டாயிற்று. ஒரு டாக்டரின் கிளினிக்கில் விளக்கு எரிந்து கொண்டிருந்ததால் உள்ளே போனான். டாக்டரிடம், 'வீட்டுக்குப் போனால் ஏகப்பட்ட பிரச்னையாக இருக்கிறது. அதைச் சமாளிக்க என்ன வழி?'' என்று கேட்டான். ''ஏனய்யா, அது தெரிந்தால் நான் ஏன் ராத்திரி பன்னிரண்டு மணி வரை இங்கே உட்கார்ந்திருக்கிறேன்?'' என்றாராம் டாக்டர்.

இந்த ஜோக் பழசு போலத் தோன்றலாம். Old jokes never die. 'பொதிகை'யில் நடைபெற்ற பட்டிமன்றத்தில் இப்படிப்பட்ட துணுக்குகளாகவே கொட்டித் தீர்த்தார்கள். காரணம், 'நகைச்சுவை அதிகம் கிடைப்பது வீட்டிலா, அலுவலகத்திலா?' என்பது அந்தப் பட்டிமன்றத்தின் தலைப்பு. ஜோக்குகளை வாரி வாரி வழங்க வசதியான விஷயம்தான். ஆனால் பெரும்பகுதி ஊசிப் போன சரக்கு. ஒரு மருமகள் தன் மாமியாருக்கு 'அன்போடு' கை நகங்களை வெட்டி விட்டதன் நோக்கம், மறுநாள் சண்டையின் போது அவர் தன்னைப் பிராண்ட முடியாமல் பண்ணுவதுதான் என்பது போன்ற crude துணுக்குகளும் இடம் பெற்றன.



''டியூட்டி டாக்டர் 'ஜெமினி' சினிமாவைப் பார்த்துட்டார் போலிருக்கு..''

''எப்படிச் சொல்றே?''

''பேஷண்ட்டுக்கு எந்த குருப் ரத்தம் ஏத்தணும்னு கேட்டேன். 'O' போடுன்னு சொன்னாரு.''

— ரகோத்தமன்

பட்டி மன்றங்களில் ஆண் பேச்சாளர்களைக் காட்டிலும் பெண் பேச்சாளர்கள் தான் அதிகம் பிளந்து கட்டுவார்கள். அன்று இரண்டு பெண்மணிகள் கலந்து கொண்டார்கள். இரண்டு பேருமே கோதாவில் சாதா.

'சர்வதேச பேட்டிங் வரிசையில் நேற்று வரை முதல் இடத்தில் இருந்த டெண்டுல்கர் இன்று மூன்றாவது இடத்துக்குப் போய் விட்டார்' என்று ஈஎஸ்பிஎன் ஓர் அதிர்ச்சிக் கணிப்பை வெளியிட்டது. ராஜ் டீவி தன் பங்குக்கு ஒன்று அறிவித்தது.

அதாகப்பட்டது, 'சூப்பர் ஸிக்ஸ்' பட்டியலில் 'ஓ போடு' இரண்டாவது இடத்துக்குப் போய்விட்டதாம். (அவர்கள் கணிப்புப்படி) 'தமிழன்' படத்தில் விஜய்யும் ப்ரியங்காவும் ஆடிப்பாடும் ஒரு பாட்டு முதல் இடத்தைப் பிடித்து விட்டதாம். (அது என்ன பாட்டு என்பதை விளங்கிக் கொள்ள முடியாமல் இசையின் இரைச்சல் கழுத்தை நெரித்துவிட்டது.)

அதிருக்கட்டும். இந்த 'ரேட்டிங்ஸ்' எல்லாம் உண்மைதானா? He is not a liar; he just arranges the truth in his favour என்று ஒரு விமரிசகர் கிண்டல் செய்ததை மறுப்பதற்கில்லை.

'இன்றைய குடும்பங்களில் கணவன் மனைவி தகராறு, அப்பா பிள்ளை சண்டை என்று பலவகையான சிக்கல்கள் முளைத்திருக்கின்றன. அவற்றைத் தீர்ப்பதற்கு வழி காட்டும் வகையில் என் கதைகளை அமைக்கிறேன்' என்று நாவலாசிரியை ரமணி சந்திரன் சொன்னார். (ஸன் - 'வணக்கம் தமிழகம்') சிக்கல்களை அதிகப்படுத்தும்படியான கதைகளை எழுதுவதுதான் ஃபாஷன் என்றிருக்கும்போது இவர் ஒருவராவது இப்படிக் கொள்கை வைத்திருக்கிறாரே என்ற சந்தோஷம் ஏற்பட்டது. In matters of style, swim with the current; in matters of principle, stand like a rock என்று தாமஸ் ஜெஃபர்ஸன் இவருக்காகவே சொன்னார் போலும்.

அடுத்த வீட்டு அம்மையார் போல் சகஜமாக உரையாடிய ரமணி சந்திரன், தமது கதைகளின் முடிவை எப்போதும் பாஸிட்டிவாகவே கொடுப்பதாகக் கூறினார். (ஓ, போடு!) இரவு நேரத்தில்தான் எழுதுவதாயும், பகலில் இடையூறுகள் ஏற்படுகின்றன என்றும் சொன்னவர், எப்படி எப்படி இடையூறுகள் உண்டாகின்றன என்பதற்குச் சின்னச் சின்னதாக இரண்டு மூன்று உதாரணங்களைக் கொடுத்தார். அது, உடனுக்குடன் உதிக்கக்கூடிய அவரது கற்பனை வளத்தைக் காட்டுவதாக இருந்தது. In top gear, this writer.

கொங்கன் பகுதியிலுள்ள நாந்துவி கிராமத்தைச் சேர்ந்த ஏழைக் குடும்பம் அது. விவசாயக் கூலியாக வாழ்க்கையை ஓட்டிய குடும்பத் தந்தைக்கு மகன் ஜோஷியை எப்படியும் பட்டதாரி ஆக்கிவிட வேண்டும் என்று வெறி. ஆனால் படிக்க வைக்க வசதியில்லை. மும்பையிலிருந்த தமது உறவினர் ஒருவருக்குக் கடிதம் எழுதி உதவி கேட்டார். மும்பையில் தினக்கூலி வேலை செய்யும் அந்த உறவினர் பெருந்தன்மையோடு 'அனுப்புங்கள்' என்று கடிதம் எழுதினார். உலகத்தின் ஜன்னல் அப்போதுதான் திறந்தது ஜோஷிக்கு. அன்று கிராமத்தை விட்டுக் கிளம்பிய பயணம், இன்று மக்களவை சபாநாயகர் இருக்கைவரை மனோகர் ஜோஷியைக் கொண்டுவிட்டிருக்கிறது. இடையில்தான் எத்தனை பள்ளங்கள், மேடுகள், முட்கள், மலர்க்கிரீடங்கள். மும்பைக் கல்லூரிகளில் படிக்கும்போது டர்ன் போட்டுக் கொண்டு நண்பர்களின் வீடுகளில் தினசரி சாப்பிட்ட அனுபவமும் ஜோஷிக்கு உண்டு. பட்டமேற்படிப்பு முடித்த பின்னர் வேலை தேடி அலைந்ததில் மும்பை மாநகராட்சியில் குமாஸ்தா வேலை கிடைத்தது.

அதே மாநகராட்சியில் மேயராவோம் என்று நினைத்துப் பார்த்திருக்கமாட்டார் ஜோஷி. வேலை செய்யும்போதே எம்.எல்.பி. சட்டப் படிப்பும் முடித்தார். மாநகராட்சியில் வேலை செய்யும்போது சுபாஷ் என்ற கட்டட காண்ட்ராக்டரின் தோழமை கிடைத்தது. "தைரியமாக வேலையை விடு. ஏதாவது பிஸினஸ் செய்யலாம்" என்று சுபாஷ் அழைக்கவே, வேலையை உதறிவிட்டு, சுய தொழிலில் இறங்கினார் ஜோஷி. கட்டடத் தொழிலில் கொடிகட்டிப் பறந்தார். டுடோரியல் கல்லூரி துவங்கினார். இன்று மும்பை பகுதியில் சங்கிலித் தொடராக கோஹினூர் டுடோரியல் இருக்கின்றது. "பிரின்ஸிபால் ஸார்" என்று சுற்றிவரும் மாணவ மணிகளைத் தைரியமூட்டி உற்சாக டானிக் கொடுப்பார் ஜோஷி.

சிவசேனா துவக்கியபோதே அதில் இணைந்தார் ஜோஷி. மேயராக, எம்.எல்.ஏ.வாக, எதிர்க்கட்சித் தலைவராக, முதல்வராக அவரை வைத்து அழகு பார்த்தவர் பால் தாக்கரே. ஜோஷி சொல்வதைக் கொஞ்சம் காது கொடுத்துக் கேட்பார் தாக்கரே. கண்டிபிமுக்கும் மேடைப் பேச்சாற்றல் ஜோஷிக்கு உண்டு. ரொம்பவும் பொறுமைசாலி. இருந்தும் ஜோஷி முதல்வராக இருந்தபோது ஒதுக்கப்பட்ட நேரத்தில் தம்மைச் சந்திக்காத என்ரான் நிறுவன தலைவர்மீது கோபம் கொண்டு சிவதாண்டவம் ஆடிவிட்டார். ஆனால் அந்தத் தலைவர் பால் தாக்கரேவைப் பார்த்து வருவதால்தான் தாமதம் என்றதும் பெட்டிப் பாம்பாக அடங்கிவிட்டார்!

இன்று மகாராஷ்ட்ராவில் இவரது குடும்பத்துக்குச் சொந்தமாக நிறையத் தொழிலகங்கள் இருக்கின்றன.

மருமகன் கிரிஷ் வியாஸ் நடவடிக்கைகளால் சில சர்ச்சைகளில் மாட்டிக்




கொண்டுவிட்டார் 63 வயதுக்காரரான ஜோஷி. இவரது மனைவி பெயர் அனகா. மும்பை கிரிக்கெட் சங்கத்துடன் ஜோஷிக்கு நெருங்கிய தொடர்புண்டு. 1970 கால கட்டத்திலேயே மேடைகளில் பேசும்போது 'ஹிந்துத்வா' என்ற வார்த்தையை உலவவிட்டவர் ஜோஷி. அந்த வகையில் பா.ஜ.க.வினருக்கு இவர் முன்னோடி!

- கௌசி



நெடுஞ்சாலையை விட்டு சுங்கைப் பட்டாணிக்குள் நுழையும் சாலையில் டோல் சாவடியில் கட்டணம் செலுத்திவிட்டு அவர்களுடைய மெர்சிடிஸ் புறப்பட்டபோதே மூர்க்கமான முன்னேற்றத்தின் அடையாளங்கள் எங்களும் தெரிந்தன. ஒரு பிரமாண்டமான அனைத்துலக சூப்பர் மார்கெட்டின் உள்ளூர் கிளை; பிஸ்ஸா ஹட்; மேக்டோனல்ட்ஸ். அனைத்துக் கட்டடங்கள் முன்னாலும் நெருக்கியடித்துக் கொண்டு நிறுத்திய கார்கள்.

நீலக்கலரில் பளபளப்பு ஓடுகள் இட்ட நவீன வீடுகள். ஒவ்வொரு வீட்டின் முன்னும் ஒரு புரோட்டோன் வாஜா அல்லது டொயோட்டா; சில வீடுகள் முன்னால் வோல்வோக்களும் பிஎம்டபிள்யூக்களும் கூட. 2020-இல் முன்னேற்ற நாடு என்ற அந்தஸ்த்தை அடைய வேண்டும் என்று பந்தயம் ஓடுகின்ற

ரெ. கார்த்திகேசு

வளரும் மலேசியாவின் காலணித் தடங்கள்.

தான் இந்த ஊருக்கு ஒரு சொகுசு மெர்சிடிஸில் வந்து நுழைவது ஒரு கால வழு, இட வழுப் போல சுடர் உணர்ந்தாள். கார் ஏறிப் பழகிப் பத்தாண்டுகள், மெர்சிடிஸுக்கு உயர்ந்து ஐந்தாண்டுகள்... ஆனாலும் இந்த இடத்தில் அது அந்நியமாகத் தெரிகிறது. இது அவள் க்ரீச் க்ரீச்சென்று சத்தமிடும் சைக்கிளோட்டிக் கொண்டும் லொட லொடவென்று ஆடும் பஸ்ஸிலும் பள்ளிக்கூடம் சென்று வந்த ஊர். அப்போது இங்கு சூப்பர் மார்க்கெட்டுகள் இல்லை. கிருஷ்ணன் ஜவுளிக் கடையில்தான் துணி வாங்குவதெல்லாம். அங்கேதான் இளம்பிள்ளை வாதத்தில் கால் ஊனமான சரஸ்வதி அக்கா இருந்தார். அவரிடமிருந்துதான் தமிழ்ப் புத்தகம் இரவல் வாங்கிப் படித்தது.

"என்ன பிறந்த ஊர் வந்தவொண்ணப் பேச்சு மூச்சைக் காணோம்?" என்று அருண் கிண்டலாகக் கேட்டான். அவன் பக்கமாகத் திரும்பிக் காலங்குலம் இதழோரம் பிரித்துச் சிரித்தாள். அவனுக்கு இதைச் சொல்லி விளங்க வைப்பது கடினம் என்று தோன்றியது. திரும்பிப் பின்னிருக்கையில் ஜெய் என்ன செய்கிறான் என்று பார்த்தாள். சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தான்.

"பார் ஜெய், அம்மாவின் பிறந்த ஊர். உன் தாய் உருவாகிய மண். எந்தையும் தாயும் — தோட்டப்புறத் தொழிலாளர் பரம்பரை ஆனாலும் கூட — மகிழ்ந்து குலாவி இருந்த மண்" எனச் சொல்லத் தோன்றிற்று. தூங்குபவனை எழுப்ப மனம் வராமல் மீண்டும் வெளியே பார்த்தாள்.

இவனாவது தன்னோடு தாத்தாவைப் பார்க்க வருகிறேன் என ஒப்புக்கொண்டது அவளுக்கு ஆறுதலாக இருந்தது. மூத்தவன் சிங்கப்பூரில் அருணின் அண்ணன் குடும்பத்துடன் தங்கி விட்டான். அங்கே வீடியோ கேம்ஸின் கவர்ச்சி அவனை ஆட்கொண்டு விட்டது. அப்பாவுக்கு நேரடியாக வந்து சொல்லிக் கொள்ளாமல் ஒரு நாளாவது அவர் வீட்டில் தங்காமல் ஆப்பிரிக்காவுக்குப் புறப்பட அவளுக்கு மனசில்லை. ஜெய்க்குத் தாத்தாவின் வீட்டில் ஆடுகளும் மாடுகளும் இருப்பதைச் சொன்னவுடன் பிடித்துக் கொண்டான். ஒரு மிருகக் காட்சி சாலையைப் பார்க்கும் தீவிர விருப்புடன் அவன் தாத்தா வீட்டுக்கு வர இணங்கினான்.

இபுராஹிம் வீதி கடந்து மணிக்கூண்டை நெருங்கியபோது பள்ளிக் கூடமும் தோழிகளும் அவர்களோடு சேர்ந்து பார்த்த படங்களும் பாடல்களும் பசியோடு வீட்டை அடையும் போது மணக்கும் அம்மாவின் கோழிக்கறி வாசனையும் மனசில் சுழன்று கொண்டிருந்த போது "ஆர் வீ இன் தாத்தாஸ் ஹவுஸ் ஆல்ரெடி?" என்று தனது மழலை ஆங்கிலத்தில் கேட்டுக் கொண்டே எழுந்து உட்கார்ந்தான் ஜெய்.

அவன் அப்படிப் பேசியது கூட அந்தக் கால இட வழுவில்தான் சேர்த்தி எனச் சட்டென்று தோன்றியது. அவன் லண்டனில் பாலர் பள்ளிகளில் படித்தவன். தீவிர கோக்னி

# ஆசைப்புறா

மலேஷிய எழுத்தாளரின் மண்வாசக் கதை

வாசத்துடன் ஆங்கிலம் பேசினான்.

"வந்தாச்சு ஜெய். இன்னும் கொஞ்ச தூரம்தான்" என்று சொன்னாள் சுடர்.

"ஏன் உங்கப்பா இந்த இடத்தை விட்டுக் கிளம்ப மாட்டேங்கிறார்?" என்று கேட்டான் அருண். வீடு வந்து சேர்ந்து விருந்துண்டு இன்னும் இரண்டு மணி நேரம் கூட ஆகவில்லை. அவனுக்கு அலுத்ததுபோல் இருந்தது.

சுடருக்கும்தான் புரியவில்லை. ஏன் இந்த முன்னேற்ற ஆரவாரங்கள் அப்பாவைப் பாதிக்கவில்லை? ஏன் பட்டணத்துக்குப் போய் நவீன ஓடுகள் வேய்ந்த கார் போர்ச் சுடன் கூடிய எலெக்ட்ரிக் கேட் உள்ள வீட்டைக் கட்டிக் கொள்ளவில்லை? எப்படி அண்ணனும் அண்ணியும் அவர்களின் இரண்டு குழந்தைகளும் கிராமச் சூழ்நிலையில் அப்பாவோடு இருக்க ஒப்புக் கொண்டார்கள்? எப்படி அவர்களின் குழந்தைகள் சரளமாகத் தமிழும் தேவையானால் அளவோடு ஆங்கிலமும் பேசிக் குதூகலமாக இருக்கிறார்கள்?

நவீன பொருளாதாரத்தால் அளக்க முடியாத வாழ்க்கை ரகசியங்கள் பல இருக்கின்றன என சுடர் நினைத்துக்கொண்டாள்.

அப்பாவுக்கு முன்னேற்ற எண்ணம் இல்லை என்று சொல்ல முடியுமா? இந்த வீடும் அதன் சுற்றுப் புறமும் இவ்வளவு நேர்த்தியாக இருக்கும்போது...? இருக்கிறது; ஆனால் அந்த முன்னேற்றத்தின் அச்சு வேறு மாதிரியானது.

தன் மனசின் ஒரு மூலையில் இந்த வாழ்க்கை பற்றிய ஏக்கம் ஒன்று குமிழாக எழுந்து ஊதிப்பெருத்து பொக்கென்று உடைந்து மன அறைகளின் எல்லாச் சுவர்களிலும் வழிவதை அவளால் உணர முடிந்தது.




"ஹீரோவோட தாய்மாமனுக்கு நீங்க தங்கச்சி."

"ஏன் சார் சுத்தி வளைச்சுப் பேசறீங்க? ஹீரோவுக்கு அம்மாவா நடிக்கணும்னு சொல்லுங்களேன்!"

– ஜோ. ஜெயக்குமார்



அப்பாவின் அப்பா தோட்டப் பாட்டாளியாகத்தான் இந்த நாட்டுக்கு வந்தார். இதே சுங்கைப் பட்டானிக்குப் பக்கத்தில் ஒரு தோட்டத்தில் ஆங்கிலேய காலனித்துவ வாதிகளுக்குக் கீழே காடழித்துக் கொட்டை போட்டு ரப்பர் மரம் வளர்த்து, கொத்தடிமை வாழ்க்கையின் துன்பத்தைத் தணிக்கக் குடிக்கும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு ஒரு நாள் கள்ளச் சாராயத்துக்குப் பலியாகிப் போனார்.

அவரது எச்சங்கள் இரண்டும் தோட்டத் தமிழ்ப் பள்ளிக்குப் போயின. மூத்தது அப்பனின் அச்சில் இருந்தது. முரடாக இருந்தது. எட்டு வயதில் சுருட்டுப் பிடித்தது. பத்து வயதில் சொக்கறா வேலைக்குப் போய் சம்பாதித்தது. சம்பாதிக்கும் திமிரில் குடித்தது. பின்னொரு நாள் குடிபோதையில் நடந்து வந்தபோது லோரியில் அடிபட்டுச் செத்தது.

இளையதுதான் அப்பா. அப்பாவின் கதையை இலேசில் அவரிடமிருந்து பறிக்க முடியாது. மிகக் கொஞ்சமாகத்தான் பேசுவார். தன் சாதனைகளை மட்டுப் படுத்திப் பேசித்தான் பழக்கம். தவணை முறையில் அவர் பிள்ளைகளுக்குச் சொல்லியது:

அப்பா காலையில் தமிழ்ப் பள்ளிக்கும் மத்தியானம் அப்பனுக்குத் துணையாக மரம் வெட்டவும் போனார். ஐந்தாம் வகுப்பு முடிக்கும்போதே அப்பனின் சாவு. ஆதரவு இழந்தவுடன் அப்பா படிப்பை விட்டார். ஆனால் தோட்டவேலைக்குப் போகவில்லை. தோட்டத்து மளிகைக் கடையில் பையனாகச் சேர்ந்தார். உழைப்பும் விசுவாசமும் காட்டினார். வியாபாரம் கற்றுக் கொண்டார். காசு சேர்த்தார். பக்கத்தில் சிறியதாகப் புதிய கடை போட்டார். பழைய கடைக்காரர் பொறாமையில் கடைக்குத் தீ வைத்ததில் அது பொசுங்கியது.

அப்பா கேஸ் எதுவும் போடவில்லை. சண்டை பிடிக்கவில்லை. கடன் வாங்கிக் கடையை மீண்டும் எழுப்பினார். வியாபாரம் வளர்த்தார். தோட்டப்புறப் பெண்ணையே கல்யாணம் பண்ணிக் கொண்டார்.

சுதந்திர மலாயாவின் முன்னேற்ற வேகத்தில் விவசாயம் முக்கியம் இழந்து தோட்டங்கள் துண்டுபோடப்பட்டு விலையான நாட்களில், மற்றவர்கள் பண்டத்தையும் பாத்திரத்தையும் தூக்கிக் கொண்டு ஓடிய நாட்களில், அப்பா மட்டும் துண்டு போடப்பட்ட நிலங்களில் ஒன்றை முன்பணம் கொடுத்து வாங்கினார். அப்புறம் முதுகின் வலிமையும் சிக்கனத்தின் சீர்மையும் அந்த

அவருக்கு முழுதாக்கிக் கொடுத்தன.

இரண்டு ஏக்கர் இருக்கலாம். தென்னை மரங்கள் நட்டார். தேங்காய் வியாபாரம் நினைத்தால் அபாரமாக ஓடும். நினைத்தால் படுத்துவிடும். விவசாயத்தின் மவுசு குறைந்து விட்டாலும் அப்பாவுக்கு அதில் ஒரு பிடிப்பு ஏற்பட்டுவிட்டது. கலங்காமல் இருந்தார்.

அந்தத் தோட்டத்தில்தான் அண்ணனும் சுடரும் வளர்ந்தது. அவனுக்கு விவரம் தெரிந்ததிலிருந்து அதுதான் வீடு. ரப்பர் காட்டின் கொடுமைகள் ஒழிந்த சுதந்திர வாழ்க்கை. தென்னை மட்டையில் அண்ணன் அவனை உட்கார வைத்து இழுத்திருக்கிறார். வீட்டில் கொப்பரை காய வைத்துப் பக்கத்தில் ஒரு செக்கில் கொடுத்து மணக்க மணக்கத் தேங்காய் எண்ணெய் பிழிந்த நினைவுகள் இருந்தன. அவனுடைய செல்ல ஆடு ஒன்று இருந்தது. அதற்கு அவர்கள் 'மாடன்' என்று பெயர் வைத்தார்கள். அவன் 'மாடு' என்று கூப்பிட்டால் அது ஓடி வந்து அவன் கையில் பலா மரத் தழை வாங்கித் தின்னும். ஓ, பலாமரம் எங்கே? வெட்டி விட்டார்கள் போல!

அப்பாவோ அம்மாவோ காலையில் படுக்கை விட்டு எழும் காட்சியை சுடர் பார்த்ததேயில்லை. அவன் எழும்போது அம்மா அடுப்பங்கரையில் ஏதாகிலும் ஆக்கிக்கொண்டிருப்பாள். பின்னாளில் அவன் தோக்கியோவிலும் பாங்காக்கிலும் லண்டனிலும் தன் அப்பார்ட்மெண்டில் இருந்து காலையில் துயிலெழும் நாட்களில் அம்மாவின் தாளிப்பின் வாசம் வருவதாகக் கற்பனை செய்து கொண்டிருக்கிறான்.

அப்பா பூஜையில் உட்கார்ந்திருப்பார். அவனும் அண்ணனும் பள்ளிக்கூடம் போகக் குளித்துவிட்டு வர, அவர்களை உட்கார வைத்து ஏதாகிலும் ஒரு தேவாரம் சொல்லாமல் விட மாட்டார்.

"பொன்னார் மேனியனே புலித் தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடை மேல்...!"

ஜெய்க்கு அங்கிருந்த ஆடுகள் மிகவும் பிடித்துப் போய்விட்டன. முதலில் மிரண்டான். அம்மாவின் பஞ்சாபிச் சட்டையின் நுனியைப் பற்றிக் கொண்டு அவள் தொடையோடு ஒட்டிப்போயிருந்தான். ஆனால் அந்த ஆடுகள் அவன் கையில் இருந்த புல்லைச் சாப்பிட வந்து உரசியவுடன் அவற்றோடு ஒட்டிக்கொண்டான். அவன் முழுக்கவும் சொகுசு அடுக்குமாடி வீடுகளில் வாழ்ந்தவன். பிறந்ததிலிருந்து லிஃப்டும் காரும் சூப்பர் மார்க்கெட்டும் கணினியும் அவனுக்கு அத்துப்படி. ஆனால் அவன் பாதங்கள் பச்சை மண்ணை மிதித்த இல்லை. தொலைக்காட்சியில் அனிமல் பிளானெட்டிலும் எப்போதாவது சென்று வரும் விலங்குக் காட்சி சாலைகளிலும் தவிர்த்து அவன் விலங்குகளைக் கண்டு பழகியதில்லை.



"இன்ஸ்பெக்டர் ஏன் கோபமா இருக்கார்?"

"தந்தி டெலிவர் பண்ண வந்தவர், 'சார் தொந்தி'ன்னு கூப்பிட்டுக் கொடுத்தாராம்!"

- ரிஷிவந்தியா

இப்போது இங்கு மாடுகள் இருந்தன. ஆடுகள் இருந்தன. அப்பாவும் அண்ணனும் சில மேல்நாட்டுக் கோழி வகைகளையும் வளர்த்து வந்தார்கள். மூன்று நாய்கள் அவற்றுக்கெல்லாம் காவலாக வளைய வளைய ஓடின. பலகையில் கூடுகள் அடித்து ஒரு ஐந்து ஜோடிப் புறாவும் வளர்த்தார்கள். ஜெய் மருட்சியும் சிரிப்பும் பூரிப்புமாக இருந்தான். டிஸ்கவரி சேனலில் அவன் தொட முடியாதவைகளையெல்லாம் இங்கு தொடவும் தடவவும் முடிந்தது.

"அம்மா, கேன் ஐ ஸ்டே இன் தாத்தாஸ் ஹவுஸ்?" என்று கேட்டான்.

எப்படி வாழ்க்கை இந்த அளவுக்கு மாறியது என்பது நினைக்கும்போது சுடருக்கு வியப்பாகத்தான் இருந்தது. லண்டனுக்கு அருணை வெளிநாட்டு சேவையில், முதல் நிலையச் செயலாளராக மாற்றினார்கள். மூன்றாண்டுகள் அங்கிருந்த பின் இப்போது ஆப்பிரிக்காவில் உள்ள ஒரு சிறிய நாட்டுக்கு அவனை முதல் முறையாகத் தூதராக நியமித்திருக்கிறார்கள். ஓர் இந்திய வமிசாவளி வந்த குடிமகனுக்கு ஒரு மலாய் இஸ்லாமிய நாடு கொடுத்துள்ள இந்த அங்கீகாரம் அவர்கள் இருவரையும் பூரிக்க வைத்தாலும்...

"ஆப்பிரிக்காவுக்கா?" என்று அயர்ந்தாள் சுடர்.

"அப்படித்தான் சுடர். முதலில் இந்த மாதிரி சின்ன தூரமான நாடுகள்லதான் போடுவாங்க!

அப்புறம்தான் ஐரோப்பிய நாடுகள்ல போடு வாங்க! எவ்வளவு பெரிய கௌரவம் இது! வேணான்னு சொல்ல முடியுமா?"என்றான்.

"அப்ப புள்ளைங்க படிப்பு?"

"யோசிச்சுட்டேன். இரண்டு பேரையும் சிங்கப்பூர்லே என் அண்ணன் வீட்டில விட்டிடுவோம். அங்க அவங்க இண்டர்நேஷனல் ஸ்கூலுக்குப் போவாங்க. எல்லாச் செலவையும் அரசாங்கம் கொடுக்கும்."

அவளுக்கு இதயத்தைப் பிழிந்தது. ஒரே சமயத்தில் இரண்டு பிள்ளைகளையும் பிரிந்திருப்பதா? என்ன மாதிரி வாழ்க்கை இது? சொகுசுக்குக் குறைவில்லை. ஆனால் வேர்கள் பிடிக்காத வாழ்க்கை. இரண்டாண்டுகள் இங்கே, இரண்டாண்டுகள் அங்கே... ஒரு கலாசாரத்தின் முகம் பிடிபடுவதற்குள் இன்னொரு கலாசாரத்தின் மத்தியில்... ஒரு மொழியின் நௌிவு சுளிவுகள் நாவில் வரத் தொடங்கும் போது இன்னொரு மொழிக்கு...

ஆனால் அருண் அந்த வாழ்க்கையைப் பெரிதும் அனுபவித்தான். அவன் குடும்பத்தில் எந்தக் கலாசார பாரங்களும் இல்லை. தமிழறியாத குடும்பம். தூதரக வாழ்வின் அயராத, திரும்பத் திரும்ப வரும் விருந்துகளும் சடங்குகளும் அவளை அலுக்க வைத்தபோது அவன் அடுத்ததிற்கு ஆர்வத்தோடு காத்திருந்தான். டி.சி எண்ணுள்ள காரும் சீருடை அணிந்த ஓட்டுநரும் சூட் போட்டுக் கொள்வதும் சில்க் டை கட்டுவதும் அவனைப் பெரிய மனிதனாக ஆக்குவதாக அவன் நினைத்துக் கொண்டிருந்தான். சுடர் தன் கலாசார வேர்களுக்கு ஏங்கினாலும் அவன் நலனே தன் நலன் என இருப்பதும் தன் கலாசார வேர்களின் ஒரு பகுதிதான் என அமைதி பெற்றாள்.

ஆனால் இதன் மொத்த விலையாக இரண்டு குழந்தைகளையும் விட்டுப் பிரிந்திருப்பதென்பது எளிதில் சமரசப் படுத்திக் கொள்ளும் விஷயமாக இருக்கவில்லை.

"விளையாட்றியா சுடர்?" என்று கேட்டான் அருண். அவன் கேள்வியில் கோபம் கொப்பளித்திருந்தது.

அப்பாவின் வீட்டில் அவர்கள் கழித்த இரவு வேறு மாதிரி இருந்தது. அங்கே கார்களின் தொடர்ந்த இரைச்சல்கள் இல்லை. கவிழ்ந்திருக்கும் மௌனத்தை மெல்ல வருடும் தென்னை ஓலைகளின் சலசலப்புக்களும் ஆட்டுக்குட்டிகளின் அரைத்தூக்கத்துக் கனைப்புகளுமே இருந்தன.



## புன்னகைப் போட்டி -11 முடிவு

சென்னையில் தினமும் அமர்க்களப் பட்டுக் கொண்டிருக்கும் கொலை, கொள்ளைகளைத் தடுக்க, வாசகர்களிடமிருந்து யோசனைகள் வரவேற்றிருந்தோம். தமாஷ் ஐடியாக்கள் தந்து சிரிக்க வைத்திருக்கும் இரு வாசகர்கள், தலா நான்கு கிராம் தங்கம் பரிசு பெறுகிறார்கள்.

(பூட்டிய வீட்டில் அட்டை தொங்கவிடலாம்!)

'அண்ணே வணக்கம்! அவசரமா வெளியூர் போறேன். உள்ளே உருப்படியாக ஒன்றும் இல்லை. உடைக்க வீண் செலவு வைச்சுடாதீங்க. சந்தேகம் இருந்தால் சாவி குரோட்டன்ஸ் தொட்டி அடியில் உள்ளது.

கிரெடிட் கார்டுலேதான் எல்லாம்.

இப்படிக்கு வீட்டுக்காரன்.

பி.கு.: மாசக் கடைசி வந்ததும் செலவுக்குத் திண்டாடுவேன். ஜன்னல் வழியாக ஏதாவது போட்டுட்டுப் போங்க... தாங்க்ஸ்.

அப்பா எல்லா அறைகளுக்கும் ஜன்னலில் கொசு வலைகள் அடித்து

**கே.ராமதுரை,**
**ஆர்.பி. 12, லாயிட்ஸ் காலனி,**
**ராயப்பேட்டை,**
**சென்னை - 14.**

சென்னை நகர தெருக் குழாய்களில் இரவு முழுவதும் தண்ணீர் வருமாறு செய்யலாம். அதனால், மக்கள் கூட்டம் எப்போதும் குழாய் அருகே விழித்திருக்க நேரிடும். பிறகென்ன கொலை, கொள்ளைகள் நடக்குமா...!

**கே.எம். ரவிச்சந்திரன்,**
**5/671 A, கபிலர் தெரு,**
**சதாசிவ நகர்,**
**மதுரை 625 020**

வைத்திருந்தார். ஆகவே உள்ளே கொசுத் தொல்லைகள் இல்லை. ஃபேன் போட்டிருந்தார். ஜன்னலில் கொஞ்சமாகக் காற்று வந்தது.

ஜெய் களைத்துத் தூங்கிவிட்டிருந்தான். அவனுக்கு எப்போதும் பெரிய படுக்கையில் தனியாகப் படுத்துத்தான் பழக்கம். ஆனால் இந்த வீட்டில் அப்பாவுடனும் அம்மாவுடனும் ஒரு சிறிய படுக்கையில் உடம்புச் சூட்டைப் பகிர்ந்துகொண்டு படுப்பது அவனுக்குப் பிடித்திருந்தது. ஆடுகள் பற்றிப் பல கேள்விகள் கேட்டுவிட்டு அயர்ந்து போய் அருணின் மீது ஒரு காலைத் தூக்கிப் போட்டவாறு அவன் தூங்கிப் போனான்.

அப்போதுதான் சுடர் அந்த விஷயத்தை ஆரம்பித்தாள்.

"ஜெய்க்கு இந்த இடம் பிடிச்சுப் போச்சு! இங்க இருக்க விருப்பப்படறான்."

"தெரியும் சுடர். ஆனா நாளைக்கே நாம் குவாலலும்பூர் போயாகணுமே! ரெண்டு நாள் விஸ்மா புத்ராவில பிரீஃபிங் இருக்கே! எப்படி இன்னொரு நாள் இருக்க முடியும்?"

"இல்ல அருண். மூத்தவன் சிங்கப்பூர்ல இருந்து படிக்கட்டும். ஜெய் இங்கே இருக்கட்டுமே!"

"இங்கேயா? இந்தப் பட்டிக்காட்டுலயா?"

"இது பட்டிக்காடு இல்ல அருண். இது என் அப்பாவின் வீடு. தாய் மண். கலாசார மண். இதில இருந்துதான் நாம் உருவானோம். பாங்கோக்கிலும் சிங்கப்பூரிலும் உள்ள காங்க்ரீட்டில் இல்ல!"

"என்ன உளர்ற சுடர்? இங்கே அவன் என்ன படிப்பான்? என்ன கத்துக்குவான்?"

"இங்கே அவன் பக்கத்தில் சரஸ்வதி பள்ளிக்கூடத்தில் தமிழ் படிப்பான். அப்பாக்கிட்ட இருந்து பண்பாடு கத்துக்குவான். அண்ணன் குழந்தைகள்கிட்ட இருந்து ஒட்டி உறவாப் பழகிற கலாசாரம் கத்துக்குவான். குடும்பம்னா என்னன்னு கத்துக்குவான். மண்ணை நேசிப்பான். மனுஷனா இருப்பான்."

"அவனுக்கு உயர்வான ஆங்கிலக் கல்வியைக் கொடுக்க அரசாங்கம் செலவு பண்ணத் தயாரா இருக்கு. என்னை விடப் பெரிய மனுஷனா அவனை ஆக்கணும்னு கனவு கண்டுக்கிட்டிருக்கேன் சுடர்!"

"உயர்வான மனுஷனா வர்றதுக்குப் பல வழிகள் இருக்கு அருண். மொதல்ல அப்பா அவனுக்குக் கலாசார அடித்தளம் போடட்டும். அப்புறம் நீங்க அவனை உங்க அச்சில் வார்க்கக் காலம் இருக்கும்!" அவள் குரல் கொஞ்சம் உடைந்தது போல இருந்தது.

"என்ன ஆச்சு உனக்கு? ஏன் இப்படி உணர்ச்சி வசப்படற?"

கொஞ்சமாக அழுதாள். "மன்னிச்சுக்குங்க அருண். நான் உங்களை அடைஞ்சு நீங்கள் கொடுத்த அன்பான வாழ்க்கையை அடைஞ்சு ரொம்ப சந்தோஷமாத்தான் இருக்கேன். ஆனா



"நம்ம சிதம்பரம் சென்னைக்குப் போய் சீசன் வியாபாரம் பார்த்தே பணக்காரனாயிட்டான்..."

"அப்படியா! என்ன வியாபாரம்?"

"பூட்டு வியாபாரம்தான்!"

- பெருமாள்புரம் பொன் முருகன்

இங்க திரும்பி வந்து அப்பாவோட வாழ்க்கையை மறுபடி புதுசா பார்க்கும்போதுதான் எதையெல்லாம் பறிகொடுத்து இதை அடைஞ்சிருக்கோம்னு தெரியுது. நாமாவது இந்த மண் வாசனைகளை அனுபவிச்சிட்டு ஒரு சொகுசு வாழ்க்கைக்குப் போனோம். ஆனா நம்ப பிள்ளைகளுக்கு இந்த வாழ்க்கை கொஞ்சமும் கொடுத்து வைக்காமப் போயிடுமோன்னு நினைக்கிறபோது எனக்குப் பொறுக்கலைங்க! அவனே இன்னைக்கு இங்கே இருக்கட்டுமான்னு கேட்டபோது என்னாலே முடியாதுன்னு சொல்ல மனம் வரலே!"

"சின்னப் பிள்ளை சுடர்! அவனுக்கு என்ன தெரியும்?"

"அவனுக்குத் தெரியுதுங்க! நமக்குத்தான் தெரியாமப் போச்சு!"

விம்மல் பெரிதாக வந்துவிட்டது. அவன் பேசாமல் இருந்தான். அழ விட்டான். முதுகைத் தடவிக் கொடுத்தான். "சரி சரி! ஏதோ பைத்தியம் மாதிரி பேசற! படு! காலையிலே பேசிக்குவோம்!" என்றான்.

ஜெய்க்குப் போர்த்திவிட்டு அருணுக்கு முதுகைக் காட்டியவாறு ஒருக்களித்துப் படுத்தாள் சுடர். அழுகையின் தீவிரம் தணிந்தவுடன் ஏதோ பெரிய குற்றம் செய்துவிட்டோம் என்ற உணர்வு நெஞ்சை அடைத்தது. ஒரு கணம் பித்தம் தலைக்கேறி இருந்தபோது, யோசிக்காமல் அருணை ஆழமாகப் புண்படுத்தி விட்டோம் எனத் தோன்றியது.

இரவு கனமாக இருந்தது. அப்பாவின் ஆசைப் புறாக்கள் மட்டும் குர் குர்ரென இதமாக இரவுப் பேச்சுக்கள் பேசிக் கொண்டிருந்தன. அருணும் தூங்காமல் இருந்தான் எனத் தெரிந்தது. நீண்ட நேரம் புரண்டு புரண்டு படுத்து அப்புறம் அசைவுகள் இல்லாமல் இருந்தான். தூங்கிவிட்டான் போலும் என அவள் நினைத்திருந்த நேரத்தில் அவன் கை நீண்டு அவள் தோளை அழுத்தியது. ○

**வா**ழ்வில் நாம் சந்திக்க நேரும் சில உண்மைச் சம்பவங்கள் கற்பனையை விட ஆச்சரியமானவை. சின்ன அண்ணாமலை 'சொன்னால் நம்ப மாட்டீர்கள்' என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். வானதி வெளியீடு. சொன்னால் நம்ப மாட்டீர்கள். அதன் ஒவ்வொர் அத்தியாயமும் கற்பனை கலக்காத உண்மைச் சம்பவங்களே. ஆனால் கற்பனை செய்து எழுதினால்கூட அவ்வளவு சுவாரஸ்யமான திருப்பங்களோடு யாரும் எழுத இயலாது. சின்ன அண்ணாமலையின் வாழ்க்கை முடிவும்கூட திகைக்க வைக்கும் திருப்பம் நிறைந்தது. தம் அறுபதாண்டு நிறைவு நாளன்று, குடம் குடமாய்ப் புனித நீரால் தம்மை நீராட்டியபோது அப்படியே நிரந்தரமாய்க் குளிர்ந்தவர் அவர்.

ஒவ்வொருவர் வாழ்விலும் அவரவர் அறியாத ஏதோ ஒரு திட்டமிடல், பின்னணியில் இயங்குவதுபோல் தோன்றுகிறது. அந்தத் திட்டமிடலுக்கு அடி பணியாமல், நாம் முரண்பட்டுத் தனித்துத் திட்டமிடும்போது தான் சோகங்கள் ஏற்படுகின்றன. அவரவர் துறையில் கடினமாக உழைத்து, வருவதை ஏற்று, பற்றற்று வாழ்ந்தால் நிம்மதி தவிர வேறில்லை. ராஜாஜியின் மனப்பக்குவம் அத்தகைய எல்லோருக்கும் சுலபத்தில் வாய்க்கிறதா என்ன! அந்த மனப்பக்குவத்தை அடையும் பயிற்சிதான் முழு வாழ்க்கையுமே. அதை அடைந்துவிட்டால் பிறகு 'குறையொன்றுமில்லை'.

• நாரண துரைகண்ணன்


பாலகிருஷ்ணன்





• எஸ். ராமையா

**மு**துபெரும் எழுத்தாளர் புரசு பாலகிருஷ்ணன் அலோபதி மருத்துவர். விஞ்ஞான மேதை டாக்டர் எஸ். சந்திரசேகரனின் தம்பி. என் நெருங்கிய நண்பர். பெங்களூரில் வசித்தவர். சென்னை வரும்போதெல்லாம் என்னைச் சந்திக்கத் தவறியதில்லை. அவரிடமிருந்து ஒருநாள் ஒரு கடிதம் 'என் சிறுநீரகங்கள் பழுதுபட்டிருக்கின்றன. ஒரு மருத்துவர் என்ற வகையில் இன்னும் ஓரிரு நாட்களுக்கு மேல் நான் தாங்க மாட்டேன் என்பதை அறிவேன். என் மேல் நீங்கள் செலுத்திய அன்பை நினைத்து மகிழ்கிறேன். உங்கள் அன்புக்கு நன்றி. இக்கடிதம் உங்களுக்குக் கிடைக்கும்போது நான் உயிரோடு இருக்க மாட்டேன். உங்களிடமிருந்து நிரந்தரமாக விடைபெற்றுக் கொள்வதைத் தெரிவிக்கவே இக்கடிதம். உங்களுக்கு என்றும் என் ஆசிகள்.' எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. மறுநாள் செய்தித்தாளைப் பிரித்தேன். அவர் காலமான செய்தி அதில்.

**பி**.எஸ். ராமையாவுக்கு நீபத்தில் அவர் எழுதிய 'மணிக்கொடி காலம்' என்ற நூலுக்காக சாகித்ய அகாதமி பரிசு கிடைத்தது. அதன் பொருட்டு சென்னை தக்கர்பாபா வித்யாலயத்தில் ஆதர்ஸ் கில்ட் சார்பில் பாராட்டு விழா. ஓடோடிச் சென்றேன், அவர் பேச்சைக் கேட்க. சி. சுப்பிரமணியம், சிட்டி, கு. ராஜவேலு, சாண்டில்யன், சுந்தா, பரந்தாமன் என்று ஏகப்பட்ட பிரமுகர்கள் பாராட்டிப் பேசினார்கள். இறுதியாக - உண்மையிலேயே இறுதியாக மேடைக்கு வந்தார் ராமையா. "என் மனம் நிறைந்திருக்கிறது. இதுதான் என் கடைசி மேடைப் பேச்சு. இனிமேல் மேடைகளில் பேச மாட்டேன். வாழ்க்கையில் 'இந்த நிறைவே போதும் எனக்கு'" என்று கண் கலங்கினார். அதுவே அவரின் இறுதி மேடைப் பேச்சு. மிகக் குறுகிய காலத்தில் காலமாகி விட்டார்.

**ஒ**ருநாள் என்னைத் தேடி வந்தார் நண்பர் அருண்மொழி. 'ஏழாவது மனிதன்' உள்படப் பல சிறந்த கலைப் படங்களின் இயக்குநர். 'நாரண துரைக்கண்ணனைப் பற்றி டாக்குமெண்ட்டரி எடுக்கத் திட்டமிட்டிருக்கிறேன். நீங்கள் அவரைப் பேட்டி காண வேண்டும்' என்றார். நான் மகிழ்ச்சியோடு சம்மதித்தேன். ஏற்கெனவே சா. கந்தசாமி எடுத்த அசோகமித்திரன் பற்றிய டாக்குமெண்ட்டரி உள்படப் பல குறும்படங்களில் பங்கு பெற்ற அனுபவமும் எனக்குண்டு.

வயது 90 தாண்டிக் கனிந்தும், இலக்கிய ஈடுபாடு வற்றாத எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன். தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச்

சங்கத்தில் செயற்குழு உறுப்பினராக இருந்தவர். அதன் நிர்வாகக் கூட்டங்களில் அகிலன், நா.பா., கி.வா.ஜ, கி. ராஜேந்திரன் போன்றோரோடு அவரும் பங்கு பெறுவார். அந்தக் கூட்டங்களில் நானும் கலந்துகொண்டதுண்டு. அப்போது தொடங்கிய எங்கள் நட்பு தொடர்ந்து நீடித்தது. சென்னை சூளை மேட்டில் வசித்த அவரைத் தேடிச் சென்று விவரத்தைச் சொன்னேன். "உங்கள் நண்பர் அருண்மொழியும் சொன்னார். என்னைப் பற்றி டாக்கு மெண்டரி படம் எடுக்கலாம் என எண்ணம் வந்ததே மகிழ்ச்சி. பெருமை. நீங்கள் எடுத்தால்தான் என்ன, எடுக்கா விட்டாலும் என்ன! எனக்கும் வயதாகிறதே!" என்றார் அவர்.

ஒரு சில நாட்கள் கடந்தன. நாரணதுரைக் கண்ணன் காலமானார் என்ற செய்தி நாளிதழில். அஞ்சலி செலுத்த விரைந்தேன். கோவி. மணிசேகரன், விக்கிரமன், வழக்கறிஞர் செந் தில்நாதன் என்று பல பிரமுகர்கள் அவர் இல்லத்தில் குழுமியிருந்தார்கள். கலைஞர் கருணாநிதியும் அவர் புதல்வர் ஸ்டாலினும்கூட வந்து அஞ் சலி செலுத்திச் சென்றார்கள். (மிகச் சில நாட் கள் இடைவெளியில் நாரண துரைக்கண் ணனும் மணியனும் காலமானார்கள். ஒரு பத்திரிகையாளரான மணியனின் மரணத்திற் குப் பல பத்திரிகைகளில் பரவலாகக் கிடைத்த விளம்பரம் பற்றி எனக்கு நிறைவுதான். ஆனால் அந்த அளவு விளம்பரம் உயர்ந்த இலக்கிய வாதியான நாரண துரைக்கண்ணனுக்குக் கிடைக்காமல் போனது பற்றி எனக்கு வருத்தம்தான்.)


• சா. கந்தசாமி

அருண்மொழி என் கையைப் பிடித்துக் கொண்டு "டாக்குமெண்டரியைத் தான் எடுக்க முடியாமல் போய்விட்டது" என்றார் துயரத்தோடு. "அதனால் என்ன! அப்படியொரு எண்ணம் உங்களுக்கு இருந்தது என்பது அவரிடம் தெரிவிக்கப்பட்டு விட்டது. அவரும் மகிழ்ச்சியடைந்தார். அதுவே பெரிது. அவரைப் பற்றிய டாக்குமெண்ட்டரி நம் இருவர் மனங்களிலும் எப்போதும் ஓடிக் கொண்டிருக்கும்" என்றேன் நான்.

நெருங்கியவர் மரணங்கள் நம்மை வாட்டி வதைக்கின்றன. அப்படிப்பட்ட மரணத்தால் விளையும் துயரங்களை எப்படி எதிர்கொள்வது! இந்த வகையில் உதாரண மாகத் திகழ்கிறார் கவிஞர் சேலம் கவி தாலயா சந்திரசேகர். திருச்செந்தூர்க் கட லுக்குப் பலியெடுத்தது. அது நல்ல வாலிப வயதிலிருந்த அஷோக்குமார் என்ற இலக்கிய ஆர்வமுள்ள இளைஞரை அள்ளிச் சாப்பிட்டு விட்டது. அந்த இளைஞர் கவிதாலயா சந்திரசேகரனின் புதல்வர். இறந்து போன புதல்வரை வாழவைக்க முடிவு செய்தார் சந்திரசேகர். மகன் பெயரிலேயே 'அஷோக்குமார் சிந்தனையாளர் அரங்கம்' என்ற ஓர் இலக்கிய அமைப்பைத் தோற்று வித்தார். வல்லிக்கண்ணன், தி.க.சி உள்பட தாம் மதிக்கும் பலரை சேலத்திற்கு அழைத்து அந்த அமைப்பின் சார்பில் பேச வைக்கிறார்.


• சந்திரசேகர்


• அருண்மொழி


• அசோகமித்ரன்

## வாழ்பவர்கள்!

அஷோக்குமார் உயிரோடிருந்தால் கூட வெறும் நூறாண்டுகள்தான் வாழ்ந் திருப்பார். ஆனால் இப்போதோ இலக்கிய அமைப்பாக காலம் கடந்து வாழத் தொடங்கிவிட்டார்.

சின்ன அண்ணாமலை, புரசு பாலகிருஷ்ணன், பி.எஸ். ராமையா, நாரண துரைக்கண்ணன் போன்ற எழுத்தாளர் களைப் பற்றி நாம் நினைக்கும்போது நேரில் வாழாவிட்டாலும் நம் நினைவில் வாழ் கிறார்கள் அவர்கள். நேரில் வாழ்வதை விடவும் உயர்வானதல்லவா நினைவில் வாழும் தகுதி பெறுவது?

(தொடரும்)

# புல்வயல் குமரன்;

முருகனால் ஆட்கொள்ளப்பட்ட அடியவர்கள் பாடிய பல நூல்களுள் ஒன்று குமரேச சதகம். குருபாத தாஸர் என்பவர் பாடியது இந்த நூல். சதாகாலமும் முருகனை நெஞ்சில் இருத்திய குருபாததாஸரின் குமரேச சதகப் பாடல்கள், புன்வயல் (திருப்புல் வயல்) என்கிற சிறு கிராமத்திலுள்ள குமரன் மலை முருகனைப் பற்றியவை.

இத் தலம் புதுக்கோட்டையிலிருந்து பதினோரு கி.மீ. தொலைவில் உள்ளது. ஊருக்குச் சற்று ஒதுக்குப்புறமாகக் குன்றம். குன்றத்துக்கு அணியாக அருள்மிகு தண்டபாணி கோயில். அந்த அணிக்கு மணியாக குருபாததாஸரின் கண்மணியாய்த் திகழ்ந்த முருகன் காட்சி தருகிறான்.

• தேன்மலை விநாயகர்

குன்றின் அடிவார மண்டபத்திலுள்ள மயில் வாகனத்தைக் கடந்து எண்பது படிகள் ஏற வேண்டும். மேற்கு திசை நோக்கிய கோயில். மஹாமண்டபத்து விநாயகரும், விச்வநாதர் விசாலாக்ஷியும் பக்கத்திலேயே நிற்கின்ற வெள்ளி மயில் வாகனத்தைப் பூரிப்புடன் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அதிலே முருகன் ஆரோகணித்து வந்தானெனில் அந்தக் காட்சி எப்பேர்ப்பட்டதாயிருக்கும் என நம் கற்பனையும் விரிகிறது!

அர்த்த மண்டபத்தில் 'மாங்கனிக்காக அரனை வலமது புரிந்த மதகரி' என்று குருபாததாஸர் பாடிய சின்னஞ்சிறு விநாயகர் இருக்கிறார். உத்ஸவ மூர்த்தியாய் இங்கே நாம் காணும் முருகனின் அழகு மூலவரின் பேரழகுக்குக் கட்டியம் கூறுவது போல் தோன்றுகிறது.

விநாயகர், மாங்கனிக்காக மாநிலம் சுற்றியவரல்லவா... ஆதலால், மூலஸ்தான முருகனும் தண்டாயுதபாணியாக - பழநி முருகனைப் போலவே ஆண்டிக்கோலத்திலிருக்கிறான்!

பழனியாண்டி பெற்றோரிடம் கோபித்துக் கொண்டு வந்தவன். இந்த குமரன் மலை முருகனோ ஒரு பக்தரின் ஆசையைப் பூர்த்தி செய்ய வந்தவன்.

ஆண்டுதோறும் பழநி சென்று தரிசனம் செய்து வந்த சேதுபதி என்ற பக்தர், தள்ளாத வயதில் அவ்வாறு போக முடியாமல் மிகவும் வருந்தி

• குமரன் மலை தாமரைக்குளம்

• தேன்மலைத் தோற்றம்



• தேன்மலை ஷண்முகன்

# தேன்மலை ஷண்முகன்

முருகனை வேண்டினாராம். பாலமுருகன் அவர் கனவில் தோன்றி புன்வயல் குன்றின் முகட்டில் தாம் இருப்பதாகக் குறிப்புணர்த்தியிருக்கிறார். இருக்கும் இடத்தை அடையாளமிட்டு, ஒரு 'சங்கஞ்செடி'ப் புதரின் அருகில் தேடும்படி கூறியிருக்கிறார். அங்கே சென்ற சேதுபதி, சங்கஞ்செடியருகே ருத்ராக்ஷமும் திருநீறும் இருக்கக் கண்டு, வியந்து மகிழ்ந்திருக்கிறார்.

விரைவிலேயே அவ்விடத்தில் கோயில் எழுந்து விட்டது. ஸ்தல விருக்ஷமாக சங்கஞ்செடியே விளங்குகிறது.

1975இல் சாதுராம் சுவாமிகள் இவ்வாலயத்துக்குக் குடமுழுக்குச் செய்து வைத்தார். நான்கு கால வழிபாடு, காரண ஆகம முறைப்படி இங்கே நடைபெறுகிறது.

மூலஸ்தானத்து முருகன், மேற்கு திசை நோக்கி நிற்கிறான். சேதுபதியின் கலி தீர அன்று தோன்றியவன், இன்று எண்ணற்ற பக்தர்களின் பிணி தீர்க்கும் பொறுப்பை

குருஜி ஏ.எஸ். ராகவன்




புல்வயல் மேவு குமரேசனைக் கண்ட வியப்பில் உறைந்து போய்விடாமல் புதுக் கோட்டை அருகே மற்றொரு தலத்துக் குப் புறப்பட்டுப் போவோம் - 'தேன் பருகு பூங்கடம் பணி மணி மார் பனே!' என்றாரல்லவா குருபாத தாஸர்? அந்தத் தேனுக்கும் திருமுருகனுக் கும் நெருங்கிய சம்பந்த முண்டே! வள்ளியைக் காண வேடம் பூண்டு வந்த முருகன் அவள் கையால் வாங்கி வாங்கிச் சாப்பிட்டது தேனுடன் தினைமாவுதானே!

இந்தக் கதையையும் தேனாய் நம்முள் இனிக்கும் நினைவுகளையும் பறைசாற்றிக் கொண்டு நிற்கும் தேனி மலையும் புதுக்கோட்டை அருகேதான் இருக்கிறது. நகரிலிருந்து 25 கி.மீ. தொலைவில் பிரதான சாலையின் ஓரத்திலேயே மலைக்கோயில்.

ஆற்றி வருகிறான்! நோயுற்றவர்கள், குறிப்பாக இளங் குழந்தைகளுக்காக - இங்கே நேர்ந்து கொண்டு காணிக்கை செலுத்துவது வழக்கமாக இருக்கிறது.

குமரேச சதகத்தில் குருபாததாஸர் பொருத்தமாய்த்தான் பாடி வைத்திருக் கிறார் :

***பூமிக்கோ ராறுதலையாய் வந்து சரவணப்***
***பொய்கை தனில் விளையாடியும்***

............ ............ ............

நிதமு மெய்த்துணையாய் விளங்கலா
ஓலகிலுனை
நிகரான தெய்வமுண்டோ!
மாமிக்க தேன்பருகு பூங்கடம்
பணிமணி
மார்பனே வள்ளி கணவா!
மயிலேறி விளையாடு குகனே
புல்வயல்நீடு
மலைமேவு குமரேசனே

விளையாட்டுப் பிள்ளையாய், அப்படியே அள்ளியணைத்து விடலாம் போன்ற அழகுடன்தானிருக்கிறான் புல்வயல் முருகன். பால் வடியும் முகமும் சற்றே சாய்ந்த தலையுடன், 'வந்தாயா, வா!' என்று அழைக்கும் நோக்கும், வேலாயுதமும் நம்மை அரவணைக்கவே காத்திருப்பது போல் துவண்டு நீளும் இடக் கரமும்... அழகுச் சித்திரமாய் ஆட்கொள்கிறான்.



• புல்வயல் குமரன்

# விரைவில் விருதுநகர் சிறப்பிதழ்!



காஞ்சிபுரம்,
வேலூர்,
திருவண்ணாமலை,
புதுவை,
திருநெல்வேலி
நகர சிறப்பிதழ்களைத் தொடர்ந்து விருதுநகர் வருகிறோம்.

உங்கள் நகர் குறித்து நீங்கள் கண்ட, கேட்ட, ரசித்த, பெருமிதப்பட்ட எதைப்பற்றியும் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள். விருதுநகர் நகரச் சிறப்பிதழ் வெற்றிக்கு வழிகாட்டப் போவது நீங்கள்தான்.

**கடைசி தேதி : 15.6.02**

சிறு மலைதான். 300 அடி உயரம். 242 படிகள் ஏற வேண்டும்.

ஏறும் வழியில் அழகிய மண்டபங்கள் இருக்கின்றன. கிழக்கு நோக்கிய கோயிலை மலை உச்சியில் அடைந்தால், அதன் முன்பு ஆலய மணியின் அருகே, வேல்கள் பலவற்றை நிலத்தில் ஊன்றி வைத்திருக்கக் காணலாம். அத்தனையும் அடியார் காணிக்கைகள். ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் இங்கே வேல் வழிபாடே நடந்ததாகத் தலவரலாறு கூறுகிறது.

மலையுச்சியிலிருந்து பார்த்தால் சுற்றுப் புறம் எங்கும் பசுமையாய், இனிமையாய் காட்சி தருகிறது. மலையின் பெயருக்கு ஏற்ப, அதன் முகட்டிலும் சரிவுகளிலும் நிறைய தேனீக்கள் வீடமைத்துள்ளன.

கோயிலில் ஒரே பிராகாரம்தான். இங்கும் விச்வநாதர், விசாலாக்ஷிதான்.

கருவறை முருகனைப் பார்த்தால் வைத்த கண்ணை வாங்க முடியாது! 'பச்சை மயில் வாகனம், பன்னிரு திண்தோள், கச்சைத் திருவரை, செங்கை, ஈராறு அருள்விழி, முகங்கள் ஆறு, விரிகிரணம் சிந்தப் புனைந்த திருமுடிகள்' என்று கந்தர் கலிவெண்பாவில் காணும் வர்ணனை உயிர்ப் பெற்றது போல் இருக்கிறார் இந்த முருகன்.

மயில்மேவிய முருகனின் இருபுறமும் தேவியர் இருவரும் நின்றகோலத்தில் காட்சி தருகின்றனர்.

இங்கும் வழிபாடும் விசேஷங்களும் சிறப்பாக நடக்கின்றன. பங்குனி உத்திரம், கார்த்திகை தீபம் அன்று வெகு விமரிசை யாக இருக்கும்.

**ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்**
**துச்சியின்மேல்**
**அளியில் விளைந்ததொ ராநந்தத்**
**தேனை அநாதியிலே**
**வெளியில் விளைந்த வெறும்பாழைப்**
**பெற்ற வெறுந்தனியைத்**
**தெளிய விளம்பியவா, முகமாறுடைத்**
**தேசிகனே.**

என அருணகிரிநாதர் அனுபவித்துப் பாடிய முருகனை நாமும் அனுபவிக்க முற் படலாம். பாடலைக் கேட்கையில் ஆனந்தத் தேன் வந்து பாய்கிறபோது, அதன் பொரு ளையும் முருகன் அருளையும் உணர உணர உள்ளத்திலும் தேன் வந்து பாயாதோ!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi

Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.

Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)

Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

**வாழ்வில் முடிவெடுத்த அந்தத்
தருணம் என்றும் பசுமையானது...**



**அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள்
யெஸ்டி அஸோஸியேட் பில்டர்ஸிடம் இல்லம்
வாங்கும் இனிய தருணம்தான்!**



அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி, முகப்பேர் (கிழக்கு) மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




## YESDE ASSOCIATED BUILDERS LTD.

(FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS)

402, "Challamall" 17, Thyagaraya Road, (Pondy Bazaar), T. Nagar,
Chennai - 600 017. Phone: 4340224/4333636/4342667 Fax: 044-4340210

E.Mail:yesde@md3.vsnl.net.in Web:www.yesde-builders.com

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2002 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka